மிக்கவிருப்பமிருக்கிறது" என்றார். இவ்வாறு தர்மராஜரால் கேட்கப்பட்ட நாரதர், "ராஜாவே! அந்தத்தேவஸபைகளைப்பற்றி இப்போது வரிசையாக நான்சொல்லுகிறேன்; கேளும்" என்றுசொல்லினார்.

---

## ஏழாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திரஸபைச்சிறப்பு.)

நாரதர், "கௌரவராஜனே! உயர்ந்த சிறப்பவேலைசெய்யப்பட்டதும் இந்திரன் தன்சக்தியினால்அடைந்ததும் ஸூர்யனுக்கொப்பான ஒளியோடுவிளங்குவதுமான இந்திரனது திவ்யஸபை நூறு யோசனை அகலமும் நூற்றைம்பதுயோசனைநீளமும் ஐந்துயோசனை உயரமுமுள்ளதும், அந்தரத்திலிருப்பதும், நினைத்தபடிசெல்வதும், மூப்பு துன்பம் களைப்பு அச்சங்களைப்போக்குவதும், ஸுகத்தையும் நன்மையையும் தருவதும், வீடுகளும் ஆஸனங்களுமுள்ளதும், மனத்திற்கினியதும், கற்பகவிருக்ஷங்களினால் சோபிப்பதுமாயிருக்கிறது. பாரதனே! குந்திபுத்ரனே! அந்தச்சபையில் தேவேந்திரன் கிரீடத்தையும் சிவப்பு ரத்தினமிழைத்த தோள்வளைகளையும் தூயஆடைகளையும் விசித்திரமானபுஷ்பமாலைகளையும் தனது திவ்யசரீரத்தில்தரித்துச் [1]சசி, மஹேந்திராணி, ஸ்ரீ, லக்ஷ்மி, ஹ்ரீ, கீர்த்தி, காந்தியென்னும்ஸ்திரீகளுடன் உயர்ந்தஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கிறான். ராஜாவே! அந்தச்சபையில் [2]ஸப்தமருத்துக்களும், ஸித்தர்களும், தேவரிஷிகளும், ஸாத்யர்களும், தேவகணங்களும், இந்திரபதத்துக்

---

[1] 'சசிஎன்னும் பெயரையுடைய மஹேந்திராணி என்பது பழையஉரை. சசி = இந்திரனமனைவி; மஹேந்திராணி = தேவேந்திரபதத்தின் அதிஷ்டான தேவதை; ஸ்ரீ = அழகின்தேவதை; லக்ஷ்மி = செல்வத்தின்தேவதை; ஹ்ரீ = லஜ்ஜை (அதாவது குற்றங்களில் விலகுதல்) அதன்தேவதை; கீர்த்தி = புகழினதேவதை; காந்தி = ஒளியினதேவதை; இந்தத்தேவதைகள் பெண்வடிவங்களாக இந்திரனுடன் இருக்கின்றனர் என்பது கருத்து.

[2] காற்றின் எழுபிரிவுகள்: 1. ஆவஹம் = (மேகமுதலியவற்றை நடத்துவது) 2. ப்ரவஹம் = (ஸூர்யமண்டலத்தை நடத்துவது) 3. ஸம்வஹம் = (சந்திரமண்டலத்தைநடத்துவது) 4. உத்வஹம் = (நக்ஷத்திரங்களைநடத்துவது) 5. விவஹம் = (அங்காரகனமுதலிய கிரகங்களைநடத்துவது) 6. பரிவஹம் = (ஆகாசகங்கையையும் ஸப்தரிஷிகளையும்நடத்துவது) 7. பராவஹம் = (தருவனைநடத்துவது); கிருஹஸ்தர்களான மருத்துக்கள்என்பது பழைய உரை.

குரியவர்களும், ஆதித்தியர்களும் ஆகியஇவர்களனைவரும் திவ்ய ரூபங்களோடு பொன்மாலைகள்முதலான அலங்காரங்களையணிந்து கொண்டு பாரியைகளோடும் வேலைக்காரர்களோடும்சேர்ந்து மஹாத்மாவும் பகைவரையடக்குகிறவனுமாகிய தேவேந்திரனை உபாஸிக்கின்றனர். பாவங்களைநீக்கி ஜ்வலிக்கின்றஅக்னிகள்போலப் பரிசுத்தர்களும் மகிமையுள்ளவர்களும் ஸோமலதையைப்பிழிந்தவர்களும் துயரமும் அச்சமும் அற்றவர்களும் காற்றையும் ஹோமசேஷத்தையும் புஜிப்பவர்களுமான பராசரர், பர்வதர், ஸாவர்ணி, காலவர், ஏகதர், த்விதர், சிறந்தஅறிவுள்ள த்ரிதர், சங்கர், லிகிதர், கௌரசிரனென்னும்முனிவர், கோபமுள்ளதுர்வாஸர், ச்யேனர், தீர்க்கதமஸ் என்னும் முனிவர், பவித்ரபாணி, ஸாவர்ணி, யாஜ்ஞவல்க்யர், பாலுகி, உத்தாலகர், சுவேதகேது, [1]தாண்டர், பாண்டாயினி, ஹவிஷ்மான், கரிஷ்டர், அரிச்சந்திரனென்னுமரசன், ஹ்ருதயர், உதரசாண்டில்யர், வியாஸர், க்ருஷீவலர், வர்தஸ்கந்தர், விசாகா, விதாதா, காலா, காலதந்தர், த்வஷ்டா, விச்வகர்மா, தும்புருஆகிய கர்ப்பத்திற்பிறந்தவர்களும் பிறவாதவர்களுமான ரிஷிகள், எல்லாஉலகங்களுக்கும் ஈச்வரனை வஜ்ரபாணியை ஸேவிக்கின்றனர். பாரதனே! பாண்டவனே! ஸஹதேவர், ஸுநீதர், சிறந்ததவமுள்ள வால்மீகி, பொய்யாமொழியான ஸமீகர், பிரதிஜ்ஞைதவறாதவரான ப்ராசேதஸ், மேதாதிதி, வாமதேவர், புலஸ்தியர், புலஹர், க்ரது, மருத்தர், மரீசி, சிறந்ததவமுள்ள ஸ்தாணுவென்பவர், கக்ஷீவான், கௌதமர், தார்க்ஷ்யர், வைச்வானரமுனி, காலகவ்ருக்ஷீயரென்னுமமுனிவர், ஆச்ராவ்யர், ஹிரண்மயர், ஸம்வர்த்தர், தேவஹவ்யர், தவவன்மையுள்ள விஷ்வக்ஸேனர் ஆகிய இந்த முனிவர்களும், தேவதாரூபங்களையுடைய தீர்த்தங்கள், ஓஷதிகள், சிரத்தை, மேதை, ஸரஸ்வதி, தாமார்த்தகாமங்கள், மின்னல்கள், முழங்குகின்ற நீருண்டமேகங்கள், காற்றுக்கள், யாகங்களை நடத்தும் [2]இருபத்தேழு அக்னிகள், [3]அக்னீஷோமர்கள்

---

[1] 'தாண்டியர்' என்பதும் பாடம்.

[2] கார்ஹபத்யம், ஆஹவனீயம், தக்ஷிணம், நிர்மந்த்யம், வைத்யுதம், சூரம், ஸம்வர்த்தம், லௌகிகம், ஜாடரம், விஷகம், க்ரவ்யாத, க்ஷேமவான், வைஷ்ணவம், தஸ்யுமான், பலதம், சாந்தம், புஷ்டம், விபாவஸு, ஜ்யோதிஷ்மான், பரதம், பதரம், ஸ்விஷ்டக்ருத், வஸுமான், க்ரது, ஸோமம், பித்ருமான், அங்கிரஸ் என்பன.

[3] சந்திரனோடுசேர்த்தும் இந்திரனோடு சேர்த்தும் அக்னியை இரண்டு தரம்கூறுவது ஹவிஸுகளை வெவ்வேறாகக்கொடுக்கவேணுமென்பது கருத்து.

இந்திராக்னிகள், மித்திரன், ஸவிதா, அர்யமா, பகன், விச்வேதேவர்கள், ஸாத்யர்கள், பருஹஸ்பதி, சுக்கிரர், விச்வாவஸு, சித்ரஸேனன், ஸுமனன், தருணன், யஜ்ஞபுருஷர்கள், தக்ஷிணைகள், க்ரஹங்கள், ஸ்தோபங்கள் என்னப்பட்ட ஸாமவேதஸ்வரங்கள், யாகங்களைநடத்தும் மந்த்ரங்கள், இவர்களனைவரும் அந்தசசபையில் சேர்ந்திருக்கின்றனர். ராஜாவே! ரம்பை, ஊர்வசி, மேனகை, க்ருதாசி, பஞ்சசூடை, விப்ரசித்தி முதலான அப்ஸரஸுகளும் வித்யாதரர்களும் அழகானகந்தர்வர்களும் நர்த்தனங்களாலும் வாத்தியங்களாலும் பாட்டுக்களாலும் பலவகைஹாஸ்யங்களாலும் தேவராஜாவான இந்திரனை ஸந்தோஷப்படுத்துகின்றனர். பிரமமரிஷிகள் ராஜரிஷிகள் தேவரிஷிகளனைவரும் சரித்திரங்களையும் பராக்கிரமத்தையும்பற்றிய துதிகளையும மங்களங்களையுஞ்சொல்லி, வலாஸுரனையும் வ்ருத்திரனையுங்கொன்ற மஹாத்மாவான தேவேந்திரனைச் சிறப்பிக்கின்றனர். மற்றவர்களெல்லாரும் பூமாலைகளைச்சூடி ஆபரணங்களையணிந்து திவ்யவிமானங்களிலேறி ஜ்வலிக்கின்றஅக்னிகள்போலப் போக்கும் வரவுமாகவிருக்கின்றனர். பிருஹஸ்பதியும் சுக்ரரும் எப்போதும் அங்கேயேஇருக்கின்றனர். ராஜாவே! மஹாத்மாக்களும் உறுதியானதவமுள்ளவரும் சந்திரனைப்போலக் காட்சிக்கினியவருமான இவர்களும் பிருகுவும் ஸபதரிஷிகள்முதலான மற்றும்அனேகர்களும் பிரம்மாவின்ஆஜ்ஞையினால் அங்கே வந்துபோகின்றனர். சிறந்த கைகளையுடைய ராஜாவே! இந்தப்புஷ்கரமாலினி என்னும் இந்திரஸபையை நான்பார்த்திருக்கிறேன். யமஸபையைபபற்றியும் கேள்.

---

## எட்டாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)

(யமஸபைச்சிறப்பு.)

யுதிஷ்டிரா! யமஸபையைச்சொல்லபபோகிறேன். அதைத்தெரிந்துகொள். பார்த்தனே! யமனுக்காக அந்தச்சபையை விசுவகர்மா செய்தான். ராஜாவே! பாண்டவனே! ஒளியேஉருக்கொண்டஅந்தச் சபை நூறுயோசனைக்குமேலேஅகலநீளமுள்ளதும், ஸூரியனைப் போன்றஒளியினால் எங்கும்பிரகாசிப்பதும், நினைத்தஉருவமமைவதும், மிக்ககுளிர்ச்சியும் அதிகவெப்பமுமில்லாமல் மனத்தைமகிழ்விப்பதுமாகஉள்ளது. துயரம், மூப்பு, பசி, தாகம், வெறுப்பு, மனச்

சோர்வு, களைப்பு, கெடுதல் இவற்றில் ஒன்றும் அச்சபையிலில்லை. தேவர்க்கும் மானிடர்க்குமுரிய போகங்களனைத்தும் அதில்உள்ளன. பகைவரையடக்குகிறவனே! சுவையுள்ளவையும் பலத்தைத்தருகின்றவையும் மனத்தைக்கவருகின்றவையும் தெவிட்டாதவையுமான [1]பக்ஷ்யம் போஜ்யம் லேஹ்யம சோஷ்யம் பேயம்இவைமிகுதியாகஇருக்கின்றன. சிறநதமணமுள்ளபூமாலைகளும் நினைததபலன்களைத்தரும் மரங்களும் சுவையுள்ளதண்ணீரும் வெநநீரும எக்காலமுமிருக்கின்றன. அன்பனே! அநதச்சபையில் புண்ணியஞ்செய்த ராஜரிஷிகளும் பரிசுத்தர்களான பிரமமரிஷிகளும மகிழ்ச்சியுடன் ஸூர்யபுத்ரனை யமனை ஸேவிக்கின்றனர். அரசர்க்கரசே! யயாதி, நஹுஷன், பூரு, மாந்தாதா, ஸோமகன், நிருகன், திரஸதஸ்யுவென்னுமராஜரிஷி, க்ருதவீர்யன், சுருதச்ரவன், அரிஷ்டநேமி, ஸித்தன், கிருதவேகன், கிருதி, நிமி, ப்ரதர்தனன், சிபி, மத்ஸ்யன், பருதுலாக்ஷன், பருஹத்ரதன், வார்த்தன், மருததன், குஷிகன், ஸாங்காசயன், ஸாங்க்ருதி, த்ருவன், சதுரச்வன், ஸதஸ்யூர்மி, கார்த்தவீர்யார்ஜுனனென்னும் ராஜா, பரதன், ஸுரதன், ஸுநீதன், நிசடன், அனலன், திவோதாஸன், ஸுமனஸ், அம்பரீஷன், பகீரதன், வியசுவன், ஸதச்வன், வாத்ரியச்வன், பருதுவேகன், பருதுசிரவஸ், பிருஷதசுவன், வஸுமனன், மிக்கஅதிகபலசாலியானக்ஷுபன், ருஷதரு, பருஷஸேனன், புருகுத்ஸன், த்வஜி, ரதி, ஆஷ்டிஷேணன், திலீபன், மஹாத்மாவானஉசீநரன், உசீநரன்புதல்வனுனபுண்டரீகன், சர்யாதி, சரபன், சுசி, அங்கன், ரிஷ்டன், வேனன், துஷ்யநதன், ஸ்ருஞ்ஜயன், ஜயன், பாங்காஸுரி, ஸுநீதன், நிஷதன், வஹீநரன், கரநதமன், பாஹ்லீகன், ஸுத்யும்னன், பலவானுகியமது, [2]ஐளன், பலவானனமருத்தராஜன், கபோதரோமன், த்ருணகன், ஸஹதேவன், அர்ஜுனன், வியசுவன், ஸாச்வன், கிருசாசுவன், சசபிநதுஎன்னுமரசன், தசரதபுத்திரர்களான [3] ராமலக்ஷ்மணர்கள், ப்ரதர்தனன், அளர்க்கன், கக்ஷஸேனன், கயன், கௌராசுவன், பரசுராமா, நாபாகன், ஸகரன், [4]பூரித்யும்னன், மஹாச்வன், ப்ரதாசுவன், ஜனகன், வேனபுத்திரனனபருது, வாரிஸேனன்,

[1] பக்ஷ்யம்முதலிய ஐநதும் உணவின்வகைகள்.

[2] இளையென்பவளின் புத்திரனுன புரூரவஸ்.

[3] ராமலக்ஷ்மணர்கள் தம்முருவத்துடன் யமஸபையிலிருப்பது, உத்தரராமாயணத்தில் அவதாரஸமாபனகாலததில் ராமலக்ஷ்மணர்களை யமன்வந்து கண்டதாகச்சொல்வதனுலும்விளங்குகின்றது.

[4] இது இரண்டுமுறைவருகிறது.

புருஜித், ஜனமேஜயன், பிரமமதத்தன், த்ரிகர்த்தி, ராஜாவாகியஉபரிசரவஸு, இந்திரத்யும்னன், பீமஜாநு, கௌரப்ருஷ்டன், அனகன், லயன், பத்மன், முசுகுந்தன், பூரிதயும்னன், பிரஸேனஜித், அரிஷ்டநேமி, ஸுதயும்னன், பருதுலாசுவன், அஷ்டகன் இவர்களும், மத்ஸ்யராஜர்களநூற்றுவரும், நீபர்கள்நூற்றுவரும, ஹயர்கள்நூற்றுவரும, த்ருதராஷ்ட்ரர்கள்நூற்றொருவரும, ஜனமேஜயர்கள்எண்பதின்மரும், பிரம்மதத்தர்கள் வீரிகள் ஈரிகள் நூறுநூறுபேர்களும், இருநூறுபீஷ்மர்களும, நூறுபீமர்களும, நூறுபிரதிவிந்த்யர்களும், நூறுநாகர்களும, நூறுஹயாகளும, நூறு [1]பலாசங்களும், நாணல் தர்ப்பைமுதலியவைநூறும, அங்கிருப்பனவாக அறியத்தக்கவை. சந்தனு, உனதுபிதாவாகிய பாண்டு, உசங்கவன், சதரதன், தேவராஜன், ஜயத்ரதன், புத்திமானாகிய விருஷதர்ப்பனென்னும்ராஜரிஷி, அவனுடையமந்திரிகள், நிரம்பினதக்ஷிணைகளோடுகூடின அனேகஞ்சிறந்தஅச்வமேதயாகங்களைச்செய்து (இவ்வுலகைவிட்டுச்) சென்றஇன்னுமனேகமாயிரம [2]சசபிந்துக்களாகிய இந்தப்புண்ணியசாலிகளும, புகழ்பெற்றவர்களும கல்விகேள்விமிகுந்தவருமான ராஜரிஷிகளும அந்தச்சபையில யமதர்மராஜனைஸேவிக்கின்றனர். முறைப்படியாகஞ்செய்தவரும தவத்தில்ஸித்திபெற்றவரும் யோகசரீரம்பெற்றவர்களுமாகிய அகஸ்தியர் மதங்கர் காலர் மருத்யுவென்னும்முனிவர்களும் தேகமெடுத்திருக்கும அக்னிஷ்வாத்தர்கள், [3]பேனபர்கள், [4] ஊஷ்மபர்கள், [5]ஸுதாவந்தர்கள், [6]பர்ஹிஷதர்கள்முதலானபித்ருக்களும், காலசக்ரமும், பரத்யக்ஷரூபியான அக்னிபகவானும், பாவஞ்செய்து தக்ஷிணயனத்தில்மரணமடைந்த மனிதர்களும், காலத்தை நடத்துவதற்காக நியமிக்கப்பட்டயமகிங்கரர்களும் சரீரமெடுத்துக்கொண்டுவந்த சிம்சுபைமரம் பலாசமரம் நாணல் தர்ப்பைமுதலியதாவரங்களும அந்தஸபையில் தர்மராஜனை உபாஸிக்கின்றனர். இவர்களும இன்னும் அனேகர்களுமாகிய தர்மராஜஸபையோரின்பெயர்களையும் செய்கைகளையும் கணக்கிடமுடியாது. பார்த்தனே! அழகியதும் நினைத்தபடிசெல்வதுமாகிய அந்தச்சபை நெருக்கமில்லாமலிருக்கிறது. விச்வகர்மா நெடுங்காலந்தவஞ்செய்து நிருமாணஞ்செய்தது. பாரதனே! அது தன்னொளியினால் ஜ்வலித்துக்கொண்டு பிரகாசிக்கின்றது. நியமந்தவறாதவரும் பொய்சொல்லாத

1 பலாசு நாணல் தர்ப்பம்முதலியவற்றின் அதிஷ்டானதேவதை.

2 சசபிந்துவம்சத்தில் பிறந்தவர்கள். 3 நுரையையுண்பவர்கள்.

4 நீராவியையுண்பவர்கள். 5 அமிர்தமுண்பவர்கள். 6 தீயிலிருப்பவர்கள்

'வரும் சாந்தரும் சுத்தருமான ஸந்யாஸிகள் தமது நற்கருமங்களி னால் துலக்கப்பட்டு அந்தச்சபைக்குச்செல்லுகின்றனர்.' எல்லாரும் ஒளியோடுகூடிய தேஹங்களையுடையவர்களும், தூயஆடைகளைத்தரி த்தவர்களும், விசித்ரங்களானதோள்வளைகளையும்' பூமாலைகளையும் ஜ்வ லிக்கின்றகுண்டலங்களையும் முத்தாரங்களையும் அணிந்தவர்களும், மஹாத்மாக்களுமான கந்தர்வக்கூட்டங்களும் அப்ஸரஸ்ஸுகளின் கூட் டங்களும் அவரவர்கள் செவ்வையாகச்செய்த புண்ணியகர்மங்களி னால் அச்சபைக்குப் போகின்றனர். 'பார்த்தனே! அந்தச்சபையில் எங்கும் வாத்தியமும் ஆட்டமும் பாட்டும் சிரிப்பும் விளையாட்டும் இனியவாஸனைகளும் இனியஒலிகளும் இருக்கின்றன. தேவலோகத் தியமாலைகள் அங்கே நிரந்தோறுமவருகின்றன. தர்மமும் அழகும் சிறந்தமனமுமுள்ள நூறுலக்ஷம்பெயர்கள், பிரஜைகளுக்கு ஈச்வர னும் மஹாத்மாவுமாகிய யமனை உபாஸிக்கின்றனர். ராஜாவே! மஹா த்மாவான பித்ருராஜனுடைய அந்தச்சபை இவ்வகையானது. [1]புஷ் கரமாலினியென்னும் வருணஸபையையும்சொல்வேன்.

---

## ஒன்பதாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)

### (வருணஸபைச்சிறப்பு.)

யுதிஷ்டிரனே! வருணனுடைய திவ்யஸபையும் யமஸபை யைப்போலவே விஸ்தாரமுள்ளதும் மிக்கஒளியுள்ளதும் அழகியபிரா காரங்களையும் தோரணங்களையுமுடையதுமாக ஜலத்துக்குள் விசுவ கர்மாவினால் நிர்மாணஞ்செய்யப்பட்டது. கனிகளையும் மலர்களையும் கொடுக்கின்றவைகளும் நீலமும் பொன்மையும் பச்சையும் வெளுப்பும் சிவப்புமான ரத்தினங்களின் வடிவங்களையுடையவைகளுமான கற் பகதருக்களாலும், பூங்கொத்துக்கள்மிகுதியாகவுடைய கொடிகளா லும், புதர்களாலும்சூழப்பட்டிருக்கிறது. அச்சபையில் இனியகுர லும் அழகியஉருவங்களுமுள்ள விசித்ரமான எண்ணிறந்தபறவைகள் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவுமிருக்கின்றன. வருண னால்ஆளப்பட்ட அச்சபை வீடுகளும் ஆஸனங்களும் நிரம்பினதும், ஸுகமானகாற்றுள்ளதும், குளிரும்வெப்பமுமில்லாததும், வெண்

---

[1] 'புஷ்கரமாலினி' என்பதை விசேஷணமாக்கி, தீர்த்தவிசேஷங்களால் சோபிப்பது' என்பது பழையஉரை.

ணிறமுள்ளதுமாக அழகாயிருக்கிறது. வருணன் சிறந்தஆடைகளை யும் ரத்நபூர்ணங்களையும்அணிந்துகொண்டு வாருணியென்னும் தன் மனைவியுடன் அந்தச்சபையிலிருக்கிறான். அந்தவாருணி கௌரியென் னும் இரண்டாவதுபெயரால் உலகத்தில்வழங்கப்படுகிறாள். அந்தவரு ணன் மகிழ்ந்து அம்மனைவியுடன் ஸுகமாகவிளையாடுகிறான். அந்தச் சபையில் ஆதித்தர்கள் மாலைகளோடும் சிறந்தசந்தனமுதலியபூச்சுக ளோடும் நல்லமணம்வீச ஜலதேவதையானவருணனை உபாஸிக்கின்ற னர். ராஜாவே! வாஸுகி, தக்ஷகன், ஐராவதன், கிருஷ்ணன், லோஹி தன், பத்மன், சக்திமானாகியசித்ரான், கம்பலன், அசுவதரான், த்ருத ராஷ்ட்ரன், வலாஹகன், மணிமான், [1]குண்டதாரன், கார்க்கோடகன், தனஞ்சயன், பலவானானபாணிமான், குண்டதாரன், ப்ரஹ்ராதன், மூஷிகாதன், ஜனமேஜயன் ஆகியஇந்நாகர்கள்எல்லாரும் தந்தங் கொடிகளோடு மண்டலமிட்டுப் படமெடுத்துக்கொண்டிருக்கின்றனர். தர்மார்த்தகாமங்களும் அஷ்டவஸுக்களும் கபிலமுனிவரும் அங்கே யிருக்கின்றனர் நாகராஜாவான ஆதிசேஷனும் அங்கிருக்கிறார். அவரைக்கண்டு நீர்ப்பிராணிகளுக்கதிபதியானவருணன் (அருக்கியம் முதலிய) உபசாரங்களைச்செய்து ஆஸனமளித்து மரியாதைசெய்கி றான். வாஸுகிமுதலியநாகர்களனைவரும் அஞ்சலிசெய்து, ஆதிசேஷ னால்அனுமதிகொடுக்கப்பெற்றபிறகு தந்தமதகுதியின்படி உட்கார்ந் திருக்கின்றனர். யுதிஷ்டிரனே! இவர்களும் மற்றும்பலநாகர்களும் வினதையின்புத்திரரானகருடனும் அவர்வேலைக்காரரும் அந்தச்சபை யில் மஹாத்மாவானவருணனைச் சேவித்துப்பணிகின்றனர். விரோச னன்மகனான பலியெனனும்அஸுரராஜன், பூமியைஜயித்தவனாகிய நரகாஸுரன், ஸம்ஹ்ராதன், விப்ரசித்தி, காலகஞ்சர்களென்னும்அஸு ரக்கூட்டத்தார், ஸுஹனு, துர்முகன், சங்கன், ஸுமனஸ், ஸுமதி, கடோதரன், மஹாபார்சுவன், க்ரதனன், பீடரன், விச்வரூபன், ஸ்வ ரூபன், விரூபன், மஹாசிரன், தசக்ரீவன், வாலி, மேகவாஸன், தசா வரன், டிட்டிபன், விடபூதன, ஸம்ஹ்லாதன், இந்திரதாபனன் ஆகிய தவம்புரிந்துவரம்பெற்றவர்களும், சூரர்களும மரணமில்லாதவர்களு மான அஸுரகுலத்தோரனைவரும், அழகானகுண்டலங்களையும் கிரீ டங்களையும திவ்யவஸ்திரங்களையுமதரித்து மலாமாலைகள்சூடித் தர்ம ரூபமான பாசாயுதத்தைத்தரித்திருக்கும் மஹாத்மாவானவருணனை அந்தச்சபையிலசேவிக்கின்றனர். அரசர்க்கரசே! பரதகுலத்தோ னே! யுதிஷ்டிரனே! நாலுஸமுத்ரங்களும், பெயர்பெற்றகங்காநதி,

[1] இப்பெயர் இரண்டுமுறைவந்திருக்கிறது.

யமுனை, விதிசை, வேணை, நர்மதை, வேகவாஹினி, விபாசை, சத த்ரு, சந்திரபாகை, ஸரஸ்வதி, இராவதி, விதஸ்தை, தேவநதியாகிய ஸிந்து, கோதாவரி, கிருஷ்ணவேணி, நதிகளிற்சிறந்தகாவேரி, கிம் புனை, விசல்யை, வைதரணி, த்ருதீயை, ஜ்யேஷ்டிலை, சோணமென் னும்பெரிய [1]நதம், சர்மண்வதி, பர்ணாசையென்னும்மஹாநதி, ஸரயு, வாரவத்யை, நதிகளிற்சிறந்தலாங்கலி, கரதோயை, ஆத்ரேயி, லௌ ஹித்யமென்னும்மஹாநதம், லங்கதி, கோமதி, ஸநதியை, த்ரிஸ் ரோதஸிமுதலிய உலகத்தில்பெயர்பெற்ற புண்ணியதீர்த்தங்களுள்ள ஆறுகளும், புண்ணியதீர்த்தங்களும், தடாகங்களும், கிணறுகளும், அருவிகளும், குளங்களும், குட்டைகளும், திசைகளும் பூமியும் மலை களும் ஜலஜந்துக்களனைத்தும தேகமெடுத்து மஹாத்துமாவான வருணபகவானை உபாஸிக்கின்றன. கந்தர்வர்கள் அப்ஸரஸுகளின் கூட்டங்கள் அனைத்தும் ஸங்கீதவாத்தியங்களோடு அந்தச்சபையில் வருணனைத்துதிசெய்துகொண்டிருக்கின்றனர். இரத்தினங்களோடு கூடியமலைகளும் ஜலங்களும் அந்தச்சபையில் தேவரூபிகளாக மிக்க இனியகதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கின்றன. வருணனுடைய மந்திரியான ஸுநாபனென்பவன் தன்பிள்ளைகளாலும் பேரர்களாலும் கோவென்னும்புஷ்கரனாலும் சூழப்பட்டவனாக வருணனைஉபாஸிக் கின்றான். மேற்கூறியஎல்லோரும் திவ்யசரீரங்களோடு தங்களுக்கதி பதியானவருணனை உபாஸிக்கின்றனர். பாரதரே! முன்னே நான்ஸஞ் சரித்தபோது இந்தஅழகானவருணஸபை என்னால்காணப்பட்டது; குபேரன்ஸபையைபபற்றியுமகேள்.

---

பத்தாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)

(குபேரஸபைச்சிறப்பு.)

ராஜாவே! குபேரனுடையஸபை நூறுயோசனைநீளமும் எழு பதுயோசனைஅகலமுமுள்ளது; வெண்மைநிறமானது. ராஜாவே! அந்தச்சபை குபேரன் தன்தவத்தினாலசம்பாதித்தது. சந்திரனு டையஒளியையும் மறைப்பதும் கயிலைமலையின்சிகரம்போன்றதுமான அந்தச்சபை யக்ஷர்களால்வகிக்கப்பட்டு ஆகாயத்தில்பறப்பதுபோல விளங்குகின்றது. பொன்மயமான உயர்ந்தமாளிகைகளினால்சோபிப்ப

---

[1] மேல்கடலில்விழும்ஆறு.

தும், உயர்ந்தரத்தினங்களினால் விசித்திரமானதும மனத்தைக்கவருவ தும் சிறநதமணமுள்ளதும், வெண்மேகம்போன்றசிகரத்தையும் உரு வத்தையுமுடையதுமான அநதத்திவ்யஸபை ஆகாயத்தில்மிதப்பது போலக் காணப்படுகின்றது. பொன்மயமான உறுப்புக்களோடுகூடி யிருப்பதனால மின்னற்கொடிகளாலேயே புதுமையாகஅமைக்கப்பட் டதுபோலிருக்கிறது. ஸ்ரீமானகியகுபேரனென்னும்அரசன் அற்புத மானஆபரணங்களையும ஆடைகளையும் ஜ்வலிப்பவைபோன்றகுண்ட லங்களையுமதரித்து அனேகமாயிரமமங்கையர்களால்சூழப்பெற்று அந தசசபையில்வீற்றிருக்கிறான். மஹாராஜாவே! தனங்களுக்கெல்லாம் ஈசுவரனான குபேரன் எல்லாஆபரணங்களினாலும் அலங்கரிக்கப்பெற் றவளும் அழகியதேகமுள்ளவளுமாகிய, ரித்தியென்னும்மனைவியுடன் கூடி உயர்ந்தவிரிப்புகள்போடப்பட்டதும உயர்நத [1]காலணைகளுடை யதும் ஸூர்யனைபபோலப்பிரகாசிப்பதுமான உயர்நதஸிம்மாஸனத் தில்வீற்றிருந்து விளங்குகிறான். [2]நந்தனவனத்தில் வேண்டினவற் றைவழங்குகின்ற மநதாரமென்னும கற்பகமரங்களின்சோலைகளை அசைத்துக்கொண்டும் அலகையென்னும்பெயருள்ள ஓடையிலுள்ள தாமரைமலர் செங்கழுநீர்மலர்களின் கந்தங்களையெடுத்துக்கொண்டும் உள்ளத்தைமகிழ்விக்கும் குளிர்நதகாற்று குபேரனையடைகின்றது. மஹாராஜாவே! தேவர்களும கநதர்வர்களும அப்ஸரஸுகளின்கூட் டங்களும் அநதஸபையைசசேர்நது அங்கே தேவலோகததிய [3]தான ங்களைப பாடுகின்றனர். மிசரகேசி, ரம்பை, சித்திரஸேனை, சுசிஸ் மிதை, சாருநேத்ரை, கிருதாசி, மேனகை, புஞ்சிகஸ்தலை, விசவாசி, ஸஹஜன்யை, பிரம்லோசை, ஊர்வசி, இரை, வர்க்கை, சௌரபேயி, சமீசி, புதபுதை, லதைமுதலாகிய ஆட்டத்திலும் பாட்டிலும் நிபு ணர்களான ஆயிரக்கணக்கானஅப்ஸரஸுகளும கந்தர்வர்களும் குபே ரனைஸேவிக்கின்றனர். தேவலோகத்தியவாத்தியங்களும் ஆட்டங்க ளும் பாட்டுக்களும் எக்காலமும் இடைவிடாதஅநதஸபை கநதர்வர் கள் அப்ஸரஸுகளின்கூட்டங்களினால் நிறைநது அழகாகவிளங்கு கின்றது. பாரதனே! கின்னரர்களென்றும நரர்களென்றும சொல் லப்பட்ட கநதர்வஜாதியாரும மாணிபதரன், தனதன், ச்வேதபத்ர னென்னும்யக்ஷன், கசேரகன், கண்டகண்டு, மஹாபலசாலியானபிரத யோதன், குஸ்தும்புரு, பிசாசன், கஜகர்ணன், விசாலகன், வராஹ கர்ணன், தாம்ரோஷ்டன், பலகக்ஷன், பலோதகன், ஹம்ஸசூடன்,

---

[1] காலணைகள் — காலகொட்டை. [2] சைத்ரரதமென்னும் அவனுடையதோட்டம். [3] ஒருவகை ஸ்வரவரிசை.

சிகாவர்த்தன், ஹேமநேத்ரன், விபீஷணன், புஷ்பானனன், பிங்களகன், சோணிதோதன், பிரபாலகன், விருக்ஷவாஸி, அனிகேதன், சீரவாஸன்முதலான அனேகலக்ஷக்கணக்கான யக்ஷர்களும் பெருமைபொருந்தியலக்ஷ்மிதேவியும நளகூபரனும் எப்போதும அங்கேயேயிருக்கின்றனர். நாமும் மற்றுமுள்ள எம்மைப்போன்றவரனேகரும் அந்தச்சபையில் இருப்போம். அந்தச்சபையில பிரமமரிஷிகளும் தேவரிஷிகளும இருக்கின்றனர். மஹாபலசாலிகளான ராக்ஷஸர்களும கந்தர்வர்களும் அந்தச்சபையில் பிரபுவும்மஹாத்துமாவுமாகிய குபேரனை உபாஸிக்கின்றனர். ராஜாக்களிற்சிறந்தவனே! உமாபதியும் [1]பசுபதியும் சூலாயுததாரியும பகதேவதையின்நேத்திரத்தைக் கெடுத்தவரும் முக்கண்ணரும் உக்கிரமான்வில்லைத்தரித்தவரும் மஹாபலசாலியும பகவானுமாகிய சங்கர இரத்தம்போறசிவந்தகண்களும பேரிரைச்சலுமுடையவர்களும் கொழுப்பையும மாமிஸத்தையுமஉண்பவரும் கொடியவரும் பலவிதஆயுதங்களைத்தரித்துப பயங்கரமாயிருப்பவரும் காற்றைப்போலக கடியவேகமுள்ளவரும குட்டையும்உயரமும் கூனருமான பூதக்கூட்டங்களினால்சூழப்பெறறவராகத் தமது தோழனாகிய குபேரனிடத்தில் எப்போதுமிருக்கிறார். விசுவாவஸு, ஹாஹா, ஹூஹூ, தும்புரு, பர்வதன், சைலூஷன், கானம்தெரிந்த சித்திரஸேனன், சித்ராதனமுதலான கந்தர்வராஜாகளனேகரும மற்றுமுள்ளகந்தர்வர்களும் தமபரிவாரங்களுடன்மகிழ்ந்து தனேசுவரனைப் பணிகின்றனர். வித்தியாதரருக்கரசனான சக்ரதர்மனென்பவன் தன்தம்பிமார்களுடன்கூட அந்தசசபையில் பிரபுவானதனேசுவரனைப பூஜிககிறான். நூற்றுக்கணக்கானகின்னரர்களும் அங்கே பிரபுவானகுபேரனைப பூஜிக்கின்றனர். பகதத்தன்முதலிய ராஜாக்களும் அச்சபையிலிருக்கின்றனர். கிம்புருஷர்க்கு அரசனாகிய த்ருமனும, ராக்ஷஸர்க்குஅரசனாகிய மஹேந்திரன், கந்தமாதனன் இவர்களும குபேரனைஉபாஸிக்கின்றனர். தாமிஷ்டரானவிபீஷணரும், இயக்கர், கந்தர்வர்அனைவரோடுங்கூடத் தமஸேஹாதரனும பிரபுவுமான குபேரனைஅடுத்திருக்கிறார். ஹிமாலயம், பாரியாத்ரம, விந்தியம், கைலாஸம, மந்தரம், மலயம, தர்துரம், மஹேந்திரம, கந்தமாதனம, தேவபர்வதங்களாகிய இந்திரகீலம ஸுநாபம் ஆகியஇவைகளும மேருமுதலான மற்றுமுள்ள அனேகமலைகளும, பிரபுவும மஹாத்துமாவுமான தனபதியை ஸேவிக்கின்றன. பகவானாகிய நந்திகேசுவரர், மஹாகாலன், காஷ்டன், குடீமுகன், தந்தி, விஜயன், தபோதிகன், சங்கு

1 பசுபதி=பசுவென்னும் ஆத்துமாக்களுக்குப் பதி.

கர்ணன்முதலிய சிவகணங்களனைவரும் குபேரனையடுத்திருக்கின்றனர். மிகுந்தபலமுள்ள வெள்ளைரிஷபமும் அங்கேகர்ஜித்துக்கொண்டிருக்கிறது. இன்னும அனேகமாராக்ஷதர்களும பிசாசர்களும தனத னிடம் காத்திருக்கின்றனர். தேவதேவர்க்கும ஈசுவரனும் மூவுலகங்களைபபடைபபவரும 'பலரூபங்கள்எடுபபவரும உமாபதியுமாகிய சிவபெருமான் தமகூட்டத்தாரால சூழபபட்டுவரும்போது தனேசுவரனைகுபேரன் அவரைததலையாலவணங்கி அநதமஹாதேவரிடம் அனுமதிபெற்றபின்புதான் உட்காருகிறான். தனபதியின்ஸ்நேகிதரும் பகவானுமானசிவபிரானும் சிலஸமயமஉட்காருவார். நவநிதிகளுக்குமமுதன்மையான சஙகம் பதமமென்னும இரண்டுசிறநதநிதிகள் மற்றநிதிகளையெல்லாம அழைத்துககொண்டு குபேரனைஸேவிக்கின்றன. ஆகாயததிறசஞசரிக்கும அபபடிபபட்டஅழகான அநதஸபை என்னுறகாணபபட்டது. ராஜாவே! பிரம்மஸபையைசசொல்வேன் அதையுங் கேள்.

---

## பதினோராவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



### (பிரம்மஸபைச்சிறப்பு.)

அன்பனே! பரதகுலததோனே! இவ்வகையானஉருவமுள்ளதென்று உரைக்கமுடியாததாகிய பிரமமஸபையைபபற்றி நான்சொல்வதை நீகேள். ராஜாவே! களைபபில்லாதவரானஸூரியபகவான் முநதிய [1]தேவயுகததில மானிடலோகததைபபாா ககவிருபபமுற்றவராக ஆகாயத்திலிருநதுவநதார். பாண்டவனே! பரதரேறே! மனத்தினுல் செல்லத்தக்கதும அறிவுக்குமசொலலுக்குமஎட்டாதபெருமைபொருந்தியதும் எல்லாபபிராணிகளின்மனங்களையும கவருவதுமாகிய பிரம்மதேவருடைய திவ்யஸபையைப்பாா ததபிறகு அவர் மானிடவடிவத்தோடு ஸஞ்சரித்துவருகையில் என்னைக்கண்டு அந்தச்சபையைப் பற்றி எனக்குஉரைத்தார். பாண்டவசரேஷ்டனேராஜாவே! நான் அநதஸபையின்சிறபபுக்களைக்கேட்டு அதைபபாாக்கவிருப்பமுள்ளவ

---

1 மனிதர்களுக்குஒருவருஷம் தேவர்களுக்குஒருநாள். மானிடவருஷம் முந்நூற்றறுபதுசேர்நதது தேவர்களுக்குஒருவருஷம். பன்னீராயிரமதேவவருடம் மானிடர்களுக்குநாலுயுகங்கள. அவைதேவர்களுக்குஒருயுகம். தேவயுகம் ஆயிரம் பிரம்மாவுக்கு ஒருதினம. இஙகுதேவயுகத்தில் என்பதற்கு கிருதயுகத்தில்என்பது பழையஉரை.

ளுக ஸூர்யனைநோக்கி, "பகவானே! அழகானபிரம்மஸபையை யான் காணவிரும்புகிறேன். கிரஹங்களுக்குஅதிபதியே! என்ன தவம் என்னகருமம் அல்லதுஎந்தஔஷதப்பிரயோகஞ்செய்வதனால் பாவங்களையொழிப்பதாகிய அந்தச்சிறந்தஸபைக்கு நான்போகமுடியும்? எவ்வகையாக அதையான்காண்பேன்? அதை எனக்குச்சொல்லும்" என்றுகேட்டேன். பாரதச்ரேஷ்டனே! ஆயிரங்கதிர்களையுடைய அந்தஸூர்யன், என்னுடையஇந்தச்சொல்லைக்கேட்டு, "நீ மனத்தை யடக்கி ஆயிரம்வருஷகாலம பிரமமவிரதமென்னும தவமபுரிவாயாக" என்றுகூறினர். உடனே நான் இமயமலையின்மேல் அந்தப்பெருந தவஞ்செய்தேன். அதன்பிறகு பாவமற்றவரும களைப்பில்லாதவரும் மஹிமையுள்ளவருமான ஸூர்யபகவான் என்னையழைத்துக்கொண்டு அந்தப்பிரமஸபைக்குச்சென்றார். ராஜாவே! அந்தச்சபை இவ்வகை உருவமுள்ளதென்று சொல்லமுடியாது. அது நிமிஷத்துக்குநிமிஷம் சொல்லுக்கெட்டாத வெவவேறுவடிவங்களை அடைகிறது. பாரதனே! அதன்அளவையும் வடிவத்தையும் நான்அறியேன். அவ்வகையான உருவத்தையும் நான் ஒருகாலத்திலும கண்டதில்லை. ராஜாவே! குளிர்ச்சியும்வெப்பமுமில்லாமல் எப்போதும் மிக்கஸுகமாகவே யிருக்கிறது. அந்தஸபையைச்சார்ந்தவர்கள் பசிதாகங்களையும் களைப்பையும் அடைவதில்லை. அது மிக்கஒளியுள்ள பலநிறங்களானரத்தினங்களினால் அமைக்கப்பெற்றது. அது தூண்களினால்தாங்கப்படுவதில்லை. என்றும்கெடாமலிருக்கிறது. மிக்கஒளியுள்ள பலவகைத் தெய்வலோகப்பொருள்களுடன்கூடியது. சந்திரனையும் ஸூர்யனையும் அக்கினியையும் மிஞ்சிப்பிரகாசிக்கின்ற அந்தஸபையானது ஸ்வர்க்கலோகத்திற்குமேலிருந்துகொண்டு ஸூரியனைப்பயமுறுத்துவது போலவிளங்குகின்றது. ராஜாவே! எல்லாஉலகங்களுக்கும்தாதையான அந்தப்பிரமதேவர் எப்போதும் தமதுஈசுவரசக்தியினால் எல்லாவற்றையும்படைத்துக்கொண்டு அந்தச்சபையில தாம்ஒப்பற்றவராயிருக்கிறார். தக்ஷர், பிரசேதஸ், புலஹர், மரீசி, ஸமர்த்தரானகசியபர், பிருகு, அத்திரி, வஸிஷ்டர், கௌதமர், அங்கிரஸ், புலஸ்தியர், கிரது, ப்ரஹ்லாதர், கர்த்தமர் ஆகியபதினான்குசிருஷ்டிகர்த்தர்களும அதர்வாங்கிரஸர், வாலகில்லியர், மரீசிபர்என்னுமரிஷிகளும பிரபுவான பிரம்மதேவரை அடுத்திருக்கின்றனர். பாரதனே! மனம், ஆகாயம், வித்தைகள், வாயு, தேயு, நீர், நிலம், சப்தம், பரிசம், ரூபம், ரஸம, கந்தம், மூலப்பிரகிருதி (மகத்துஅகங்காரமுதலிய) விகாரங்கள் இவைகளும் பூமிக்குக்காரணமான மற்றுமுள்ளவையும் பெரியமஹிமையுள்ள

அகஸ்தியர், தவவன்மையுள்ளமார்க்கண்டேயர், ஜமதக்நி, பரத்வா ஜர், ஸம்வர்த்தர், சயவனர், மஹானுபாவரானதுர்வாஸர், தர்மிஷ்ட ரானரிஷ்யசிருங்கர், யோகசாஸ்திரஆசாரியரும் சிறந்ததவமுள்ளவரு மான மஹிமைபொருந்திய ஸனத்குமாரர், அஸிதர், தேவலர், தத்து வஜ்ஞானியானஜைகீஷவ்யர், ஐம்புலன்களென்னும் சத்துருக்களை ஜயித்தவரான ரிஷியர், சிறந்தமஹிமையுள்ள மணியென்பவர்இவர்க ளும அங்கேபிரம்மதேவரைஉபாஸிக்கின்றனர் பார்த்தனே! எட்டு அங்கங்களோடுகூடிய ஆயுர்வேதமும் தேகமெடுத்துக்கொண்டுஅங் கேயேயிருக்கிறது. சந்திரனும் ஸூரியனும் நக்ஷத்திரங்களும் கிர ணங்கள்நிரம்பினஆதித்தனும காற்றுகளும யாகங்களும ஸங்கல்பமும் பிராணனும அறம்பொருளின்பங்களும மகிழ்ச்சியும பகையும் தவ மும இந்திரியஜயமும் மற்றுமுள்ள இவ்வகையானஅனேகங்களும் தேகங்களெடுத்துப பெருந்தவஞ்செய்துகொண்டு மஹாத்துமாக்க ளாகப பிரம்மதேவரை ஆச்ரயித்திருக்கின்றன. [1]கந்தர்வர்கள் அப்ஸர ஸுகள் இவர்களின்இருபத்தேழுவகையார்களும் திக்குபபாலகரனை வரும் அந்தச சபையில் வந்துசேர்ந்திருக்கின்றனர். பாரதனே! பாண் டவனே! ராஜாவே! சுக்கிரன், பிருஹஸ்பதி, புதன், அங்காரகன், [2]சனைசசரன், ராகுமுதலானஎல்லாக்கிரஹங்களும மந்திரமும் ரதந் தரமென்னுமஸாமமும ஹரிமான்வஸுமானென்பவர்களும் பன்னி ரண்டுஆதித்தர்களும அவர்களுக்குத்தலைவனானஸூரியனும் அக்னீ ஷோமா மித்ராவருணாமுதலியஇரட்டைதேவர்களும் ஸப்தமருத் துக்களும அஷ்டவஸுக்களும விசுவகாமாவும பிதிர்தேவரனைவரும் ஹோமத்திரவியங்களனைத்தும ருக்வேதம் ஸாமவேதம் யஜுர்வேதம் அதர்வணவேதமென்னும் நான்கும எல்லாச்சாஸ்திரங்களும இதி காசங்களும் [3]உபவேதங்களும வேதாங்கங்களனைத்தும் கிரஹங்க ளும் யாகங்களும ஸோமலதையும் எல்லாதேவர்களும் துன்பங்க ளைக்கடத்திவைக்கும சாவித்திரியும அவ்வாறே கல்பனசக்தி, ஞாபக சக்தி, சொல்வன்மை, திரிகாலஜ்ஞானம, உலகஅறிவு, புகழ், [4]பொறு மையென்னும் ஏழுவகையான [5]ஸரஸ்வதியும் ஸ்தோத்திரங்கள் சஸ்

[1] சிலர்இருபத்தேழுநக்ஷத்திரங்களென்றும் வேறுசிலர் கந்தர்வர்அப்ஸர ஸுகளின்கணங்கள் இருபதும் கந்தர்வத்தலைவர்கள் எழுவரும்என்றும் அபிப் பிராயப்படுவதாகப்பழையஉரைகூறுகிறது.

[2] சனி

[3] தனுர்வேதம்முதலியன.

[4] அவஸரப்படாமல் கிரஹித்தலும்விளம்புதலும்.

[5] அகரம், உகரம், மகரம், அர்த்தமாத்திரை, நாதம், பிந்து, சக்திஎன்னும் எழுவகையான பிரணவம்என்றும், அல்லது, ஸம்ஸ்கிருதம், பிராகிருதம்

திரங்கள்என்னப்பட்ட ஸாமங்களும் பலவகைக் [1]காதைகளும் தர்க்கங்களோடுகூடிய பாஷ்யங்களும் பலவகைநாடகங்களும் காவியங்களும் [2]கதைகளும் ஆக்யாயிகைகளும் [3]காரிகைகளும் தேகங்களெடுத்துக்கொண்டுஅங்கேயிருக்கின்றன. குருவுக்குப் பூஜைசெய்தபுண்ணியசாலிகளும் அங்கேயிருக்கின்றனர். பாரதனுனயுதிஷ்டிரனே! [4]க்ஷணங்கள், லவங்கள், [5]முகூர்த்தங்கள், பகல்இரவுகள், பக்ஷங்கள், மாதங்கள், ஆறு ருதுக்கள், வருஷங்கள், ஐந்து [6]யுகங்கள், [7]நாலுவகைத்தினங்கள், என்றும்அழியாததும் மாறுதலுமான அந்தமுதன்மையான காலசக்ரம், தர்மசக்ரம் ஆகியஇவைஅங்கேஎப்போதுமிருக்கின்றன. [8]தேவமாதாக்களாகிய அதிதி, திதி, தனு, ஸுரஸை, வினதை, இரை, காலிகை, ஸுரபிதேவி, ஸரமை, கௌதமி, பிரபை, கத்ரு, ருத்ராணி, ஸ்ரீதேவி, லக்ஷ்மி, பத்ரை, ஷஷ்டிதேவி, பிருதிவிதேவி, ஹ்ரீதேவி, ஸ்வாஹாதேவி, கீர்த்தி, ஸுராதேவி, இந்திராணி, புஷ்டி, அருந்ததி, ஸம்விருத்தி, ஆசை, நியதி, ஸ்ருஷ்டி, ரதிதேவிமுதலிய தேவப்பெண்களும பிரமமதேவரை ஸேவிக்கின்றனர். ஆதித்தியர்களும் வஸுக்களும ருத்திரர்களும் மருத்துக்களும் அச்வினிதேவர்களும் விசுவேதேவர்களும ஸாத்தியர்களும மனோவேகமுள்ளபிதிர்தேவர்களும் பிரம்மதேவரை ஸேவிக்கின்றனர். புருஷச்ரேஷ்டனே! பிதிர்தேவதையின் கூட்டங்கள் ஏழுவகைகளென்று அறி. அவர்களுள், நான்குவகையார் [9]கடினசரீரமுள்ளவர்கள். மற்ற மூன்றுவகையார் [10]உருவங்கள் மட்டுமுளளவர்கள். பாரதனே!

---

பைசாசம், அபப்ரம்சம், லலிதம், மாகதம, கதயம்என்னும்ஏழுவகைப்பாஷைகளென்றும் உரைப்பது பழையவுரை. அதில் கல்பஞ்சகதிமுதலிய மேற்சொல்லியஏழைவேறுகக்கொள்ளவேண்டும்.

[1] தேசபாஷையிலுள்ளபாட்டுகள்.

[2] ஆக்யாயிகை, கதைஇரண்டும் வசனப்ரபந்தகள். அவற்றுள்; கதாநாயகனேநேரில்சொல்வதும் உச்ச்வாஸங்களென்னும் பிரிவுகளுள்ளதும் ஒவ்வோர்உச்சுவாஸங்களிலும் அவ்வவற்றின விஷயங்களைக்குறிப்பிக்கும் ச்லோகம்இருப்பதும் ஆக்யாயிகை. இவ்வாறின்றிச சரித்திரங்களை வசனநடையாகச் சொல்லுவது கதை.

[3] சாஸ்திர விஷயங்களைச் சுருக்கிச்சொல்லும் ச்லோகங்கள்.

[4] நொடிகள். [5] மூன்றேமுக்கால்நாழிகை.

[6] கிருதயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகம் யுகஸந்தியைஆகஐந்து.

[7] மனுஷ்யதெய்வபிதிர் பிரம்மதினங்கள்.

[8] இங்கே அஸுரர்நாகர்முதலியோரும் தேவஜாதியிற்சேர்க்கப்பட்டனர்.

[9] ஸ்பரிசிக்கத்தக்க தேகமுள்ளவர்கள்.

[10] ஸ்பரிசிக்கக்கூடாமல் காணப்படுபவர்.

மஹானுபாவர்களான வைராஜர்களும் அக்னிஷ்வாத்தர்களும் ஸ்வர்க்கத்தில்ஸஞ்சரிப்பவரும் உலகங்களில் பெயர்பெற்றவருமான கார்ஹபத்தியர்களென்னும்பிதிர்க்களும் ஸோமபர்களும் ஏகச்ருங்கர்களும் சதுர்வேதர்களும் கலர்களுமாகிய இந்த எழுவகைப்பிதிர்க்களும் பிரம்ம க்ஷத்ரிய வைசய சூத்ரரென்னும் நான்குவர்ணங்களிலும் பூஜிக்கப்படுகின்றனர். இந்தப்பிதிர்க்களை முதலில் புஷ்டிசெய்வதனால் சந்திரன் விருத்திசெய்யப்படுகிறான். அப்படிப்பட்ட பிதிர்க்களெல்லாரும் பிரம்மாவின்அருகிலிருந்துகொண்டு அளவற்றமஹிமையுள்ள பிரம்மதேவரைச் சந்தோஷமாகப்பணிகின்றனர். ராக்ஷஸர்கள், பிசாசர்கள், அஸுரர்கள், யக்ஷர்கள், நாகர்கள், கருடர்கள், பசுக்களாகிய ஜங்கமங்களும் தாவரங்களும் பூமிமுதலிய ஐந்துமஹாபூதங்களும் பிரமதேவரை உபாஸிக்கின்றனர். தேவர்களுக்குராஜாவான இந்திரன், வருணன், குபேரன், யமன், பார்வதியுடன்கூடிய மஹாதேவர் இவர்களனைவரும எபபோதும அங்கேபோகின்றனர். ராஜச்ரேஷ்டனே! ஸுப்ரம்மண்யரும் எபபோதும் பிரம்மதேவரை உபாஸிக்கின்றனர். ராஜாவே! பகவானனநாராயணனும் தேவரிஷிகளும் வாலகில்லியரிஷிகளும் கர்ப்பத்தில்ஜனிததவர்களும் ஜனிக்காதவர்களுமானரிஷிகளும பிரம்மதேவரை ஸேவிக்கின்றனர். ராஜாவே! இவ்வுலகததில்காணபபடும் மறறுமுள்ளஜங்கமஸ்தாவரங்களும் அந்த ஸபையில் என்னால்காணபபட்டனவென்று அறி. பாண்டவனே! நித்தியப்பிரம்மசாரிகளான ரிஷிகள் எண்பத்துஎண்ணாயிரவரும் ஸந்ததியுள்ளரிஷிகள் ஐம்பதினாயிரம்பேர்களும் அங்கேயிருக்கின்றனர். அந்தத்தேவர்களனைவரும அவ்விடத்தில் இஷ்டப்ரகாரம் பிரம்மதேவரைக்கண்டு அவருக்குத் தலைவணங்கிநமஸ்காரஞ்செய்து வந்தவாறே செல்லுகின்றனர். அளவற்ற ஞானமுள்ளவரும உலகங்களுக்குத் தாதையும எல்லாப்பிராணிகளிடததும் தயையுள்ளவருமாகிய பிரம்மதேவர் அதிதிகளாகவந்த மஹானுபாவர்களானதேவர்களையும அஸுரர்களையும் நாகர்களையும் பிராம்மணர்களையும் யக்ஷர்களையும் கருடர்களையும் காலேயர்களையும் கந்தர்வர்களையும் அப்ஸரஸுகளையும் அவரவர்தகுதிப்படி அழைக்கிறார். ராஜாவே! அளவற்றமஹிமையுள்ளவரும் உலகங்களுக்குஆத்மாவுமான பிரம்மதேவர் அவர்களை அழைத்து இன்சொல்லினாலும வெகுமதியினாலும் அவர்கள்காரியத்தை நிறைவேற்றுவதனாலும் ஆனந்தத்தையுண்டுபண்ணுகிறார். அன்பனே! பரதகுலத்தோனே! அவ்வாறு வநதுகொண்டும் போய்க்கொண்டுமிருக்கும் அவர்களால்நிரம்பியிருக்கும் அந்தஸபை ஆனந்தத்தை

"யளிப்பதாயிருக்கிறது. எல்லாஒளிகளும்நிரம்பினதும் பிரம்மரிஷிகளின்கூட்டங்களால் அடையப்பட்டதும் களைப்பில்லாததுமான அந்தத் திவ்யஸபை பிரம்மதேவருடையபெருமையினால் சிறப்பாகவிளங்கிற்று. ராஜசிரேஷ்டனே! மானிடலோகத்தில இந்த உன்ஸபையெப்படியோ அப்படியே மேலுலகங்களில் காணஅரிதாகிய அப்படிப்பட்ட அந்தச்சபை என்னால்காணப்பட்டது. பாரதனே! தேவலோகங்களில் இந்தஸபைகளையே நான் முன்னம்கண்டிருக்கிறேன். உன்னுடைய இந்தச்சபை மானிடலோகத்திலுள்ள எல்லாவற்றிலும் மிகச்சிறந்தது" என்றார்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரர் ஹரிச்சந்திரனைக்குறித்துக்கேட்டதன்மேல் நாரதர் ராஜஸூயயாகத்தின் பெருமையைப்பற்றி அவருக்குச்சொன்னது.)

இவ்வாறு நாரதர்சொல்லக்கேட்ட தர்ம்மபுத்திரர், "பேசுகிறவரிற்சிறந்தவரே! வல்லமையுள்ளவரே! யமனுடையஸபையில் ராஜாக்களின்கூட்டம பெரும்பாலும உம்மால்கூறப்பட்டது. நீங்கள் சொல்வதே எனக்குச்சரி. ஸமர்த்தரே! வருணனுடையஸபையில் நாகர்களும் அஸுரச்ரேஷ்டர்களும நதிகளும ஸமுத்திரங்களும் மிகுதியாகக்கூறப்பட்டனர். அவ்வாறே குபேரஸபையில யக்ஷர்களும் குஹ்யகர்களும் ராக்ஷஸர்களும கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் சிவபெருமானும் கூறப்பட்டுளர். பிரமமதேவருடையஸபையில மஹரிஷிகளும் தேவர்கள்கூட்டத்தாரனைவரும் சாஸ்திரங்களனைத்தும் இருப்பதாகச்சொன்னீர். முனிவரே! இந்திரனுடையஸபையில்மட்டும தேவர்களையும் அநேககந்தர்வர்களையும் மஹரிஷிகளையும் பெயரெடுத்துரைத்தீர். மஹாமுனிவரே! ராஜரிஷிகளில ஹரிச்சந்திரன் ஒருவன்மட்டுமே மஹாத்துமாவான தேவேந்திரன்ஸபையிலிருப்பதாகச்சொல்லப்பட்டிருக்கிறான். தவறாததவமுடையவரே! மிக்கபெரும்புகழ்பெற்றவனான அந்த ஹரிச்சந்திரன் தேவேந்திரனுக்கு எதிராயிருக்கும்படியாக என்னவினைசெய்தான்? என்னதவமபுரிந்தான்? பிராம்மணரே! பித்ருலோகத்திலிருக்கும் என்தந்தையும் மஹானுபாவருமான பாண்டு உம்மால் எவ்வாறு காணப்பட்டார்? உம்முடன் எப்படிச்சந்தித்தார்? என்னசொன்னார்? பகவானே! 'சிறந்தத்தவ

முடையவரே! அதனை எனக்குச் சொல்லும். இவற்றையெல்லாம் உம்மிடத்தில்கேட்க விருப்பமுள்ளவனாகஇருக்கிறேன்" என்றுகூற நாரதர்சொல்லலானார்.

"அரசர்க்கரசே! பிரபுவே! ஹரிச்சந்திரனைப்பற்றி என்னைக் கேட்டபடியால் சிறந்தபுத்தியுள்ள அவனுடைய மஹிமையை யான் உனக்குச்சொல்வேன். இக்ஷ்வாகுகுலத்தில்பிறந்தோனும் அயோத்தி நகருக்கதிபதியும் விசுவாமித்திரரால் காப்பாற்றப்பட்டவனும் வீரனுமான திரிசங்குவென்னும் அரசன் ஒருவன்இருந்தான். அவனுக்குக் கேகயராஜவம்சத்திற் பிறந்தவளான ஸத்தியவதியென்னும் மனைவியிருந்தாள். கௌரவபுத்திரனே! அவளுக்குத் தர்மமாகக் கர்ப்பம் உண்டாயிற்று. ராஜாவே! அந்தமஹாபாக்கியவதி பிரஸவமாஸம் வந்தபோது ஹரிச்சந்திரனென்னும் குற்றமற்றகுமாரனையீன்றாள். அந்த ஹரிச்சந்திரராஜன் திரிசங்குவின்மைந்தனென்று சொல்லப்படுகிறான். மிகுந்தபலசாலியான அவ்வரசன் எல்லாஅரசர்களுக்கும் அரசனாகஇருந்தான். அரசர்களனைவரும் அவன்கட்டளைக்கு அடங்கியிருந்தனர். ராஜாவே! அவ்வரசன் பொன்னணிகள்பூண்ட ஒரே ஜயத்தேரிலேறி (வேறுதுணையின்றிச) சஸ்திரவன்மையினால் [1]ஏழு தீவுகளையுமஜயித்தான். மஹாராஜாவே! அவன் மலைகளும் நீர்களும் காடுகளும்அடங்கிய புவனிமுழுமையுமவென்று ராஜஸூயமென்னும் மஹாயாகத்தைப் புரிந்தான். எல்லாஅரசர்களும் அவன்கட்டளைப்படி திரவியங்களைக் கொணர்ந்தனர். அவர்களே அந்தயாகத்தில் பிராம்மணர்களுக்குப் போஜனமும் பரிமாறுகிறவர்களாயிருந்தனர். பராக்கிரமசாலியான ஹரிச்சந்திரமஹாராஜன் சாஸ்திரப்படி ராஜஸூயயாகத்தை நிறைவேற்றினபின் அரசர்க்கரசனாக அபிஷேகஞ் செய்யப்பெற்று விளங்கினான். சிறந்ததக்ஷிணைகளோடுகூடிய ராஜஸூயயாகத்தில் முடிசூட்டப்பெற்ற அவ்வரசன் மகிழ்ச்சியுடன் யாசகர்கள் தன்னிடம்கேட்டதற்கு ஐந்துமடங்கதிகமாக அவர்களுக்குப் பொருளளித்தான். பிறகு அக்னியை விஸர்ஜனஞ்செய்யுங்காலம் வந்தபோது பற்பலதேசங்களினின்றும்வந்த பிராம்மணர்களுக்கு விருப்பப்படி மரியாதையோடு பலவகைப்பக்ஷணங்களையும் போஜனங்களையும் பொருள்களையும்கொடுத்துத் திருப்திசெய்வித்தான். ரத்தினங்களின் குவியல்களினால திருப்திசெய்விக்கப்பெற்று மகிழ்வுற்ற அந்தணர்களின் ஆசீர்வாதங்களினால் பராக்ரமத்திலும் புகழிலும்

---

[1] ஸப்தத்வீபங்களாவன:—1. ஜம்புத்தீவு. 2. ப்லக்ஷத்தீவு. 3. குசத்தீவு. 4. க்ரௌஞ்சத்தீவு. 5. சாகத்தீவு. 6. சால்மலித்தீவு. 7. புஷ்கரத்தீவு.

மற்றஅரசர்களைக்காட்டிலும மேலாகஇருந்தான். ராஜாவே! பரதரே றே! இநதக்காரணம்பற்றிததான் அநத அனேகமாயிரம்அரசர்களைக் காட்டிலும் ஹரிசசந்திரன் சிறப்புற்று விளங்குகிருனென்றறி. மனி தர்க்கதிபதியே! வெறறிபெற்றஹரிச்சநதிரன் அம்மஹாயாகத்தை நிறைவேற்றினபின் ஸம்ராடடாக முடிசூடடபபெறறு விளங்கினுன். பரதச்ரேஷ்டனே! மற்றுமுள்ள அரசர்களில் எவாகள் ராஜஸூயயாகத் தைச்செய்கின்றனரோ அவாகள் இநதிரனுடன்கூடி மகிழ்கின்றனர். பரதச்ரேஷ்டனே! யுத்தத்தில்ஓடாமல் மரணமடைநதவர்எவரோ அவ ரும் அநத இந்திரலோகத்தைச்சேர்நது மகிழ்கின்றனர். எவாகள் இவ்வுலகத்தில் கடுநதவத்திஞல் தேகத்தைவிடுகின்றனரோ அவர்க ளும் அவவிடமசோநது எக்காலமும சிறப்புற்றுவிளங்குகின்றனர். கெளரவாகளைச் சிறபபிக்கிறவனே! குநதிபுத்ரனே! ராஜாவே! ஹரிசசநதிராரசனிடததிலுள்ள மேன்மையைக்கண்டு வியபபுற்ற உன் தந்தையாகியபாண்டு நான் மானிடலோகத்திற்கு வருவதைஅறிநது என்னைவணங்கி, "ஐயா! நீர்யுதிஷ்டிரனுக்கு 'பாரதனே! நீபுவனி யைவெல்ல வல்லவஞயிருக்கிருய்; உன்ஸஹோதரர்கள் உனக்கு அட ங்கியிருக்கின்றனா. நீ யாகங்களிறசிறநத ராஜஸூயயாகத்தைச செய்வாயாக. எனதுபுதலவஞகியநீ ராஜஸூயயாகஞசெய்தால் நான் வெகுசீக்கிரத்தில் இநதிரஸபைககுச்சென்று ஹரிசசநதிரனைப்போல அனேகவருஷகாலம நிததியஸநதோஷமா யிருபபேன்' என்று சொல் லக்கடவீர்" என்றுகூறிஞன். 'அபபடியேயாகட்டும. நான் பூலோகத் திற்குப்போவேஞயின் ராஜாவானஉன்புததிரனுக்குச் சொல்வேன்' என்று அவனுக்கு மறுமொழிகூறினேன். பாண்டவனே! புருஷச் ரேஷ்டனே! அந்தபபாண்டுவின்எண்ணத்தை நீ நிறைவேற்றக்கட வாய். நீயும் உன்முன்னோர்களும் தேவேநதிரலோகவாஸத்தைப் பெறுவீர்கள். அரசே! இந்தபபெரியயாகம இடையூறுகள்மிகுதியாக உள்ளதென்று நினைக்கப்பட்டது. யாகங்களைக்கெடுக்கும் பிரம்மாக்ஷ ஸூகள் இதில் தவறுகளைத தேடிக்கொண்டிருக்கின்றன. க்ஷத்திரி யர்களையழிபபதும் பூமியையொழிபபதற்குக் காரணமும் மாணத்தை யுண்டுபண்ணுவதுமான யுததம ஏதாவது ஒருகாரணம்பற்றி இந்த யாகத்தில் உண்டாகும. அரசர்க்கரசே! இதனைச்செம்மையாக ஆராய் ந்து எதுகூடுமோ அதைச்செய்வாயாக. நான்குவருணங்களையும்காப் பதில் எப்போதும் ஊக்கமும் உத்ஸாஹமுமுள்ளவஞகஇரு; அபி விருத்தியையடை; மகிழ்நதிரு; திரவியங்களிஞல் பிராம்மணர்களைத் திருப்தியடையச்செய். நீ என்னைக்கேட்ட விஷயத்தைப்பற்றி உன

க்கு விரிவாகஉரைத்தேன். உன்னிடம் விடைபெற்றுக்கொள்ளுகி றேன். கண்ணனுடையநகரத்திற்குச் செல்வேன்" என்றார். ஜனமே ஜயரே! நாரதா பாண்டவர்களுககு இவ்வாறுசொல்லியபின், எந்த ரிஷிகளுடன் சேர்ந்துவநதனரோ அவர்களுடன்கூடவே சென்றார். அவர்சென்றபிறகு கௌரவரான தர்மராஜர் ஸஹோதரர்களுடன்கூடி ராஜஸூயமென்னும சிறநதயாகததைபபற்றி ஆலோசனைசெய்தார்.

---

## பதின்மூன்றாவது அத்தியாயம்.

## ம ந் த்ர ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர் ராஜஸூயஞ்செய்யஆலோசித்துக் கிருஷ்ணனுக்குத் தூது விடுத்ததும், வந்துசேர்ந்தகிருஷ்ணனிடம் காரியத்தைத்தெரிவித்ததும்.)

ஜனமேஜயரே! நாரதமஹரிஷிசொல்லியதைக்கேட்டு, யுதிஷ் டிரர் பெருமூச்செறிநதார். ராஜஸூயயாகததைபபற்றி நினைத்து மனத்தில் ஆறுதலிலலாமலிருந்தார். மஹாத்துமாக்களான ராஜரிஷி களின் அநதமஹிமையைக்கேட்டும முறைபபடி யாகஞ்செய்தவர்கள் தமதுபுண்ணியகர்மங்களினால் மேலுலகமபெறுவதை ஆராய்ந்தும் ஹரிச்சநதிரனென்னும ராஜரிஷி சாஸ்திரப்பிரகாரம் யாகஞ்செய்து மேன்மையாகவிளங்குவதைகக்கேட்டும தர்மபுத்திரர் தாமும் ராஜ ஸூயயாகஞ்செய்யக்கருதினார். பிறகு யுதிஷ்டிரர் ஸபையோரனைவ ரையும மரியாதைசெய்து அவர்கள் அனைவராலும எதிர்மரியாதைசெய் யபபெற்றபிறகு யாகத்திலேயே நினைவாகஇருநதார். அரசர்க்கரச ரானஜனமேஜயரே! அநதக்கௌரவசரேஷ்டரானதர்மராஜர் பலமு றைஆராய்நதுபார்த்து ராஜஸூயமசெய்வதிலேயே உறுதிபபடுத்திக் கொண்டார். வியக்கத்தககபராக்ரமமும் மஹிமையுமுள்ள அவர் மறு படியும் தர்மத்தையேநினைத்து, எல்லாபபிரஜைகளுக்கும்நன் மையாயிருக்குமென்பதிலேயே மனத்தைச்செலுததினார். எல்லாப் பிரஜைகளையும் வேற்றுமையின்றிப பரிபாலனஞ்செய்பவரும் தர்மத் தைக்காப்பவரெல்லாரிலும் சிறநதவருமான யுதிஷ்டிரர் யாவருக்கும் நன்மையைச்செய்தார். கோபம கர்வம்இரண்டையுமொழித்து யாவ ருக்கும்தானம்கொடுக்கும்படி கட்டளையிட்டார். 'தர்மம்நல்லது, தர் மம்நல்லது' என்றதைத்தவிர வேறுசொல்லை யாரும்கேட்டதில்லை. இவ்வாறுநடக்கையில் ஜனங்கள் தநதையினிடம்அன்புவைப்பது போலஅவர்மேல் அன்புவைத்தனர். அவரைப்பகைப்பவனில்லை. அத

னால் அவர் அஜாதசத்ருவானார். ராஜாவின் அனுக்ரஹத்தினாலும் பீம ஸேனன்பாதுகாப்பினாலும் ஸவ்யஸாசியான அர்ஜுனன் பகைவரை ஒழிப்பதினாலும் புகழ்பெற்றநகுலனால் கப்பங்கள் சரியாகவருவதினா லும் புத்திசாலியானஸஹதேவன் தாமங்களைவிதிப்பதினாலும நகுலன் இயற்கையாகஎல்லாரிடத்திலும் பணிவோடிருப்பதினாலும அந்தத் தேசம் கலகமில்லாமலும், அச்சமில்லாமலும, நிரம்பமழைபொழிவத னால் செழுமையாகவும் இருந்தது. ஜனங்கள் தம்தம தொழில்களை விடாமற்செய்தனர். வட்டிக்குக்கொடுக்கலவாங்கலும் யாகச்சிறப்புக் களும் பசுக்காத்தலும உழுதொழிலும் வர்த்தகமுமாகிய இவையனைத் தும் ராஜாவின்பரிபாலனததினால் மிகஓங்கியிருந்தன. யுதிஷ்டிரர் தர் மந்தவறாமலிருந்ததனால் அத்தேசத்தில் கப்பமவராமல்நிற்றலும அதற் காகப்பிரஜைகளைப் பீடிப்பதும் ரோகங்களின்மிகுதியும தீப்பிடித்தலு மாகிய இவையொன்றும் உண்டாகவில்லை. திருடர்களாலும் மோசக் காரர்களாலும் ராஜாக்கள்ஒருவர்க்கொருவர்விரோதத்தினாலும ராஜா வின்அபிமானம்பெற்றவர்களாலும் தீமைகுநடந்ததாகக் கேட்கப்பட வில்லை. அரசர்கள் ஆறுகுணங்களிலும ராஜாவின்பிரியத்தைச்செய்ய வும் கப்பங்களைச்செலுத்தவும் தாங்கள்செய்தமுயற்சியின்பயனைத் தெரிவிக்கவும் பலஜாதியாரான வர்த்தகர்களோடு ஒத்திருந்தனர். ஜனமேஜயராஜாவே! ஆமேய்ப்பவர்முதல் அந்தணரீறாக பத்துத் திசைகளிலுமுள்ளஜனங்களால் தமதந்தைதாய்போல அன்புவைக் கப்பட்டவரும் எங்குமபிரகாசிப்பவரும எல்லாக்குணங்களுமபொருந் தினவரும் எல்லாவற்றையும்பொறுப்பவரும எல்லாருக்கும்மேலாகப் பெரும்புகழ்பெற்றுவிளங்குபவரும அரசர்க்கரசருமான தர்மராஜாவி னால்ஆளப்பட்ட அந்தத்தேசமானது,அவர்தர்மத்தில்நிலைபெற்றிருந்த தனால், ஜனங்கள் பொருளாசையினால் லௌகிகவிருத்திகளைச்செய்து அப்பொருள்களைநினைத்தபடியனுபவித்தும் செலவம்மிகுந்ததாகவே யிருந்தது. பேசுகிறவரிற்சிறந்தவரான அந்தத்தர்மராஜர் அக்காலத் தில் அமைச்சரையும் ஸஹோதரரையும் வருவித்து ராஜஸூயயாகத் தைப்பற்றிப் பலமுறைவினவினார். அவராற்கேட்கப்பட்ட அந்தமந் திரிகள் சேர்ந்து அப்போது யாகஞ்செய்யவிரும்பின சிறந்தபிராஜ் ஞையுள்ள யுதிஷ்டிரரைநோக்கி யதார்த்தமானசொல்லைப் பின்வரு மாறு சொல்லலானார்கள்:—

"எந்தராஜஸூயயாகத்தைச்செய்து பட்டாபிஷேகஞ்செய்யப் பெற்றஅரசன் வருணனுடையசிறப்பைப்படையவனோ அந்தராஜஸூய யாகத்தினால் அந்தஅரசர்க்கரசனுடையமேன்மையனைத்தையும் ராஜா

வாகியநீங்களும் பெறவிரும்புகிறீர்கள். கௌரவச்ரேஷ்டரே! அவ்வாறு அரசர்க்கரசனுடைய மேன்மைக்குரியஉங்களுக்கு ராஜஸூயஞ் செய்ய இதுதருணமென்று நமதுநண்பர்கள் நினைக்கின்றனர். எந்த யாகத்தில் சிறந்தநியமமுள்ள ரிதவிக்குக்களால் ஸாமவேதமந்திரங்களைச்சொல்லி ஆறு அக்னிகள்மூட்டப்படுகின்றனவோ அந்தயாகஞ் செய்யுங்காலம் உமதுக்ஷத்திரியசக்தியின்மிகுதியினால் ஸ்வாதீனமாயிருக்கிறது. [1]தர்விஹோமம்முதலாக ராஜஸூயஅங்கமான எல்லா யாகங்களையும் நிறைவேற்றி ராஜஸூயயாகத்தின்முடிவில் ராஜ்யாபிஷேகஞ்செய்துகொண்ட அரசன் அந்தயாகஞ்செய்ததனாலே [2]ஸர்வஜித்என்று சொல்லப்படுகிறான். சிறந்தகைகளுள்ளவரே! நீர் ஸமர்த்தர். நாங்களனைவரும் உம்துசொற்படிநடக்கிறவர்கள். மஹாராஜாவே! நீர் ராஜஸூயயாகத்தைச் சீக்கிரத்தில்முடிக்கலாம். மஹாராஜாவே! சங்கிக்காமல் ராஜஸூயயாகத்தில் மனமவைக்கக்கடவீர்" என்று மித்திரர்களனைவரும் தனித்தனியாகவும் சேர்ந்தும் உரைத்தனர். ஜனமேஜயராஜாவே! பகைவரையழிப்பவரானதர்மராஜர் அச்சமில்லாமலும் அன்போடும அவர்கள்சொன்ன தர்மமுள்ள சிறந்த. சொல்லைக்கேட்டு மனத்தில்ஏற்றுக்கொண்டனர். அந்தவேண்டினவர்களுடைய சொல்லைக்கேட்டபின் தமதுசக்தியையறிந்திருந்தும் சிலாக்கியமானகாரியத்தை ஆரம்பிக்கபபோகின்றதர்மராஜா (மற்றவர்களையும்) பரீக்ஷிக்கததொடங்கினா. பீமஸேனன்முதலிய ஸஹோதரர்கள் நால்வரையுமஸநதிதது அவர்களாலும் ராஜஸூயம் நல்லதென்று சொலலபபெற்ற தர்மராஜர் அந்தத்தர்மத்திலேயே எண்ணங்கொணடார். அரசர்ககரசருமகௌரவச்ரேஷ்டருமாகிய அந்த யுதிஷ்டிரர் ராஜஸூயயாகஞ்செய்வதற்குத் தம்மனத்தில் உடனே நிச்சயஞ்செய்துகொண்டார். ஜனமேஜயரே! ஆச்சரியப்படத்தக்க சக்தியுள்ளவராயிருநதும தாமத்தையேயனுஸரித்து ராஜஸூயயாகஞ்செய்யத் திரும்பவும பலமுறை மனத்தை ஸ்திரப்படுத்திக்கொண்டார். ஆலோசனைகள்தெரிநத புத்திசாலியான அந்தத்தர்மராஜாவானயுதிஷ்டிரர் திரும்பவும் ஸஹோதரர்களோடும் மஹாத்மாக்களாகிய ரித்விக்குக்களோடும மந்திரிகளோடும தௌமியர் வியாசர்முதலானவர்களோடும் ஆலோசித்தார். விராடன், த்ருபதன், புத்திசாலியானஸாத்யகி, யுதாமன்யு, உத்தமோஜன், புத்திமானான அபிமன்யு, சூரர்களான திரௌபதிபுத்ரர்கள் இவர்களோடுசேர்ந்தும் முக்கிய

---

[1] பலாசஇலையினால் ஹோமம்செய்வது.

[2] எல்லாவற்றையும்ஜயித்தவன்.

மாக ஆலோசனைசெய்தார். "அரசர்க்கரசன் செய்யத்தக்க சிறந்த யாகமாகிய ராஜஸூயமென்னும் மஹாயாகம் சிரத்தையுள்ள எனக்கு எப்படிமுடியும்? நீங்கள் சொல்லுங்கள்" என்றுகேட்டார், தாமரைக்கண்ணராகிய ஜனமேஜயரே! அந்தராஜாவினால் இவ்வாறு வினவப்பட்ட ஸபையோர்கள் அக்காலத்தில் தர்மராஜாவான யுதிஷ்டிரரைநோக்கி, "தர்மத்தையறிந்தவரே! ராஜஸூயமென்னும் மஹாயாகத்தைச்செய்ய நீர் தகுதியுள்ளவர்" என்று மறுமொழிகூறினார்கள். ரித்விக்குக்களும் ரிஷிகளும் ராஜாவுக்கு இவ்வாறுசொன்னபின், அவர்கள் சொன்னசொல்லை ராஜாவின்மந்திரிகளும் ஸஹோதரர்களும்கொண்டாடினர். அறிவிற்சிறந்தவரும் அடக்கமுள்ளவருமாகிய அந்தத்தர்மராஜர் உலகங்களின் நன்மையைக்கருதி மறுபடியும் தம்முள்ளத்திலேயே மேன்மேலும் ஆராய்ந்தார். 'தனது திறமையைச் செவ்வையாகஅறிந்து தேசகாலங்களையும் செலவையும் வரவையும் செம்மையாகஆராய்ந்து புத்தியோடுசெய்யும் அறிவுடையோன் துயரப்படான். தன்மனத்தின்நிச்சயம் ஒன்றினால்மாத்திரம் இந்தயாகம் ஆரம்பிக்கத் தகாது' என்றறிந்து முயற்சியினால் காரியத்தைச் சிறப்பிப்பதற்காக அந்தக்காரியத்தை நிச்சயிக்கும்விஷயத்தில் ஜனார்த்தனராகியகிருஷ்ணனே யாவருக்கும் மேற்பட்டவரென்றெண்ணித் தர்மராஜர் மனததினால் கண்ணனைத்தியானித்தார். தர்மபுத்திரர் தேவாகளால் மதிக்கப்பெற்ற செய்கைகளினால் கண்ணன்அறியக்கூடாதவரென்றும் சிறந்தகைகளையுடையவரென்றும் ஜனனமில்லாதவராயினும தமதுஇச்சையினால மனிதர்களில்அவதரித்தவரென்றும் அவரறியாதது ஒன்றுமில்லையென்றும் அவர்செய்கைக்கு எட்டாதது ஒன்றுமில்லையென்றும் அவர் எதையும்தாங்கக்கூடாதவராகார்என்றும்அவரைப்பற்றிஊகித்துநினைத்தார். குந்திபுத்திரரான அந்தயுதிஷ்டிரர் இவ்வகையானஉறுதியுள்ளநிச்சயத்தைச்செய்து உலகங்களுக்குத்தந்தையான கண்ணனுக்கு,தமதுஆசாரியனுக்குஅனுப்புவதுபோல உடனே தூதனையனுப்பினார். அந்தத்தூதன் விரைவாகச்செல்லுகின்றரதத்தினால் உடனே துவாரகையில்யாதவர்களைஅடைந்து அங்கேவாஸஞ்செய்யும் கண்ணபிரானிடம் சேர்ந்தான். அவன் பிரபுவானமாதவனிடம்கைகூப்பிக்கொண்டு விண்ணப்பஞ்செய்யலானான் :—"சிறந்தகைகளையுடையஹ்ருஷீகேசரே! தர்மராஜர்வான அந்தயுதிஷ்டிரர், தௌம்யர் வியாஸர்முதலானவர்களோடும் த்ருபதன்விராடன்இவர்களுடன்சேர்ந்த தம்ஸஹோதரர்எல்லாரோடும் உமதுதரிசனத்தை விரும்புகிறார்" என்றான். ஜனமேஜயராஜாவே! அந்தஇந்திரஸேன

னென்னும் தூதனது சொல்லைக்கேட்டு யாதவச்ரேஷ்டரும் சிறந்த சக்தியுள்ளவரும் ப்ரியபதியுமான அச்சுதர் தம்மைப்பார்க்கவிரும்புகிற யுதிஷ்டிரரைத் தாமும்பார்க்கக்கருதினவராகி, வேண்டினவர்களிடமும் வஸுதேவரிடமும்விடைபெற்றுக்கொண்டு உடனே இந்திரஸேனனுடன்கூட இந்திரப்பிரஸ்தம்சென்றார். ஜனார்த்தனர் ஆவலுள்ளவராய் வேகமானகுதிரைகளைக்கட்டிக்கொண்டு அனேகதேசங்களைத்தாண்டி இந்திரப்பிரஸ்தத்திலிருக்கும் தர்மராஜாவிடம்சேர்ந்தார். தம்ஸஹோதரர்முறையிலிருக்கும்தர்மராஜராலும் பீமனாலும் அந்தக்கிருஹத்தில் பிதாவைப்போலப் பூஜிக்கப்பெற்றகிருஷ்ணன் உடனே தம்தந்தையின்ஸஹோதரியான குந்தியை அன்புடன்பார்த்தார். ஸந்தோஷமடைந்திருக்கும் ஸ்நேகிதனான அர்ஜுனனுடன் சேர்ந்து தாமும்ஸந்தோஷமடைந்து விளையாடினார். நகுலஸஹதேவர்களால் ஆசாரியனைப்போலப்பூஜிக்கப்பெற்றார். ஸமர்த்தரான அச்சுதர் சிறந்தஸ்தானத்தில்உட்கார்ந்து இளைப்பாறி ஒழிவாயிருக்கும்போது தர்மராஜா அவரைச்சந்தித்துத் தம்காரியத்தை விண்ணப்பஞ்செய்யத்தொடங்கினார்.

"கிருஷ்ணா! நான் ராஜஸூயயாகஞ்செய்ய விரும்புகிறேன். ஆனால் அது வெறுவிருப்பத்தினால்மாத்திரம் நிறைவேற்றமுடியாது. எதனால் அதை அடையலாமென்பது உமக்குநன்றாகத்தெரியும். எவனிடத்தில் (உலகம்) எல்லாம் அடங்கியிருக்கிறதோ, எவன் எல்லா இடங்களிலும் பூஜிக்கப்படுகிறானோ, எவன் எல்லாவற்றிற்கும் ஈசுவரனோ அந்தராஜா ராஜஸூயஞ்செய்யத்தக்கவன். அந்தராஜஸூயம் நான்செய்யக்கூடியதென்று ஸ்நேகிதர்கள் சேர்ந்துசொல்லுகின்றனர். கிருஷ்ணா! அந்தவிஷயத்தில் எனக்குத் தீர்ந்தநிச்சயம் உமது வாக்கினாலேதான் வரும். சிலர் ஸ்நேகத்தினாலேயே குற்றத்தைக் கண்டறிவதில்லை. மற்றும்சிலர் தமதுலாபத்திற்காக இன்சொல்லை மாத்திரமே சொல்லுகின்றனர். சிலர் தமக்குநன்மையானதைப் பிறருக்கும்பிரியமானதாகவே நினைக்கின்றனர். காரியவிஷயங்களில் ஜனங்களின்வாக்கியங்கள் இவ்வாறாகவே பெரும்பாலும்காணப்படுகின்றன. நீர்மட்டுமே இந்தக்காரணங்களைக்கடந்து காமக்குரோதங்களை நீக்கி உலகத்தில் எது மேலானதகுதியுள்ளதோ அதை உள்ளபடி உரைக்கத்தக்கவர்" என்றார்.

## பதினான்காவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



(ஜராஸந்தன்முதலிய பகைவரிருக்கையில் ராஜஸூயம் முடித்தலாகாதென்று கண்ணபிரான் தர்மராஜாவுக்கு விளம்பியது.)

யுதிஷ்டிரர் அப்படிச்சொல்லியதைக்கேட்டு, கண்ணன்சொல்லுகிறார். "பரதவம்சத்தியமஹாராஜாவே! எல்லாக்குணங்களாலும் நீர் இராஜஸூயயாகத்துக்குத் தகுதியுள்ளவர். ஆனால், உமக்கு எல்லாம் தெரிந்திருக்கையிலேயும் யான் ஒன்றுசொல்லுவேன். இப்போது உலகத்தில் க்ஷத்திரியர்களென்று வழங்கப்படுபவரனைவரும் ஜமதக்னியின்புத்திரனான பரசுராமனால் கொல்லாமல்விடப்பட்டக்ஷத்திரியர்களின்ஸந்ததிகளாயிருக்கிறார்கள். பரதசிரேஷ்டரே! பூமிக்கரசரே! இந்தக்ஷத்திரியர்கள் வம்சபரம்பரைக்கே ஒரு[1]நிச்சயஞ்செய்து அதை உபதேசவாக்கியமாகக் கொண்டிருக்கின்றனர். அஃது உமக்குந்தெரியும். பூமியிலுள்ள அரசர்களாகிய மற்றக்ஷத்திரியர்கள் புரூரவவம்சத்திற்கும் இக்ஷ்வாகுவம்சத்திற்கும் (அடங்கின) குடிகளாகத் தம்மை நினைக்கின்றனர். பரதசிரேஷ்டரே! ராஜாவே! புரூரவவம்சத்து அரசர்களும் இக்ஷ்வாகுவம்சத்தரசர்களுமாகிய ராஜாக்களின்குலங்கள் நூற்றொன்றிருப்பதாக அறியும். மஹாராஜாவே! யயாதியின்வம்சத்தாராகிய போஜர்களின்அபிவிருத்தியானது குணங்களாற்சிறப்புற்றிருக்கிறது. அஃது இப்போது நாற்றிசைகளிலும் பரவியிருக்கிறது. அவர்களின் அந்தஐசுவரியத்தை முன்செய்தஉடன்பாட்டின்படியே எல்லாக்ஷத்திரியர்களும் அனுஸரித்திருந்தனர். ராஜாவே! இப்போதுதான் ஜராஸந்தனென்னுமரசன் தன்பராக்ரமத்தினால் எல்லாரையும்வென்று அந்தப்போஜகுலத்தோரின் ஐசுவரியத்தைக் கீழ்ப்படுத்தி அரசர்களுக்குத் தானே தலைமையாயிருக்கும்படி பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்றிருக்கிறான். அவன் [2]மத்தியதேசத்தை ஆண்டுகொண்டு அரசர்களுள் விரோதஞ்செய்ய நினைத்தான். மஹாராஜாவே! எந்த அரசன் (பொருள்படைகளின்வன்மையாகிய) பிரபுசக்தியிற்சிறந்தவனோ உலகம் எவனொருவனுக்கு அடங்கியிருக்கிறதோ அவன்தான் தன்சக்தியினால் ஸாம்ராஜ்யத்தை அடைந்தவனாகிறான். ராஜாவே! சிறந்தபராக்ரமசாலியென்று பெயர்பெற்ற சிசுபாலனென்னும் அரச

---

[1] அதிக பலவானுக்கு மற்றவர் அடங்கியிருக்க வேண்டுமென்பது.

[2] போஜர்களின்தேசமாகிய மதுரையைச்சேர்ந்ததேசம்.

னும் அந்தஜராஸந்தனையே முழுதும்அடுத்து அவன்படைத்தலைவனாக ஆனானன்றோ. மஹாராஜாவே! கபடயுத்தம்செய்பவனும் மஹாபலசாலியும் கரூசதேசாதிபதியுமான [1]வக்ரன்என்பவனும்அந்தஜராஸந்தனிடத்திலேயே சிஷ்யன்போலக்காத்திருக்கிறான். மஹாவீரர்களும் மஹாத்மாக்களுமான ஹம்ஸ [2]டிம்பகர்களென்றுபெயர்பெற்ற இரண்டரசர்களும் ஜராஸந்தனைத்தான் அடுத்திருக்கின்றனர். கரூசதேசாதிபதியான வக்ரதந்தனும் கரபனும் ஆச்சரியமணியென்று சொல்லப்படும் திவ்யரத்தினத்தைத் தலையிலணிந்திருக்கும் மேகவாகனனும் [3]முருநரையுமநரகனையும அடக்குகின்றவனும் அளவற்ற ஸேனையுள்ளவனும் வருணன்போலமேற்றிசையில்விளங்குகிறவனும் யவனராஜனுமாகிய காலயவனனும ஜராஸந்தனை ஆசாயித்திருக்கின்றனா. மஹாராஜாவே! வயஸுமுதிர்ந்தவனான பகதத்தன் உம்துபிதாவுக்குநண்பன். அவன் சொலலினாலும செய்கையினாலும ஜராஸந்தனிடம விசேஷமானபணிவுடனிருக்கிறான். உள்ளன்பினாற்கட்டப்பட்டு உமபிதாவினிடத்திலிருப்பதுபோல உமமிடம்பறறுள்ளவனாயிருக்கிறான். மேற்றிசையிலும் தென்றிசையிலுமுள்ள பூமியின்கோடிகளுக்கரசனும உமகுமாதுலனும சூரனும குந்திதேசத்தைவிருத்திசெய்பவனும சத்துருககளைஸமஹாரிப்பவனுமாகிய புருஜித்என்பவன் ஒருவன்மட்டும சிநேகத்தினால உமக்குஉட்பட்டிருப்பவன்.

இவ்வுலகத்தில தானேபுருஷோத்தமனென்றுசொலலிக்கொண்டும் மூடத்தனத்தினால் என்துசின்னங்களாகிய சங்குசக்கரம்முதலியவற்றை எப்போதுமசுமந்துகொண்டும பௌண்டரகவாஸுதேவனென்று உலகத்திலபெயாபெற்றும வங்கதேசம புண்டரதேசம் கிராததேசங்களுக்கதிபதியாகச சேனைகளுடன் சேதிதேசத்திலிருக்கும் அறிவுகெட்டவன் முன்னர் என்னாலகொல்லாமல்விடப்பட்டபோதே ஜராஸந்தனையடைந்தான். மஹாராஜாவே! எவன் தன்அஸ்த்ரவித்தைவன்மையினால பாண்டியர்களையும க்ரதகைசிகர்களையும் வென்றானோ எவனதுஸஹோதரனான ஆக்ருதியென்பவன் பரசுராமனுக்கொப்பான சூரனாகஇருந்தானோ இந்தப்புவனியில் நாலிலொருபாகம்பெற்றவனும இந்திரனுக்குநண்பனும பகைவர்களானவீரர்களை அதஞ்செய்யும பலசாலியுமாகிய அந்தபீஷ்மகனென்னும் போஜகுலத்தரசன் மாகதனைச்சார்ந்திருக்கிறான் நாம் உறவினராயிருந்தும்

[1] தந்தவக்ரன்.

[2] டிம்பகனென்பவனுக்கு டிபிகனென்றும் டிம்பிகனென்றும் பெயர் காணப்படுகிறது.

[3] முரனென்பதும்பாடம்.

பிரியங்களைச்செய்தும் வணங்கியும் அடுத்திருந்தும நம்மிடம் அவன் சார்வதில்லை. நமக்குஇன்னாதவைசெய்வதிலும நிச்சயத்தோடிருக்கிறான். ராஜாவே! அவன் தன்குலத்தையும பலத்தையும அறியவில்லை. ஜராஸந்தனுடையபுகழ் விளங்குவதைககண்டு அவனையடுததிருக்கிறான். பிரபுவே! அபபடியே வடதிசையிலுள்ள பதினெண்குலததோராகிய போஜராகளும் ஜராஸநதனுக்கஞ்சியே மேற்றிசைசேர்நதனர். சூரஸேனர், பத்திரகாரா, போதர், சாலவர், படதசரா, ஸுஸ்தலர், ஸுகுட்டர், குலிநதா, குநதிகள், ஸார்வாயனா, தென்பாஞ்சாலதேசததார், கிழக்குக்குநதிதேசத்தார், கோஸலர், மதஸியர், ஸநயஸ்தபாதரென்னும பலதேசஅரசர்களும ஸஹோதரர்களோடும வேலைக்காரர்களோடுமகூட வடதிசையைவிடடுப பயநது தென்திசைசேர்நதனர். இவ்வாறே பாஞ்சாலதேசததார்யாவரும ஜராஸநதன்பயததினால் கலககமுற்றவர்களாகத தங்களராஜ்யததை விடடுவிடடு நாறறிசைகளிலும் ஓடிவிட்டனர். அநதயுததததில மகததேசததிலுள்ள கிரிவ்ரஜமென்னுமநகரததிலிருநது முதற்படை வெளிபபடாமலிருக்கையிலேயே மஹாதமாவான ஜராஸநதன்முன்னிலையில் பாஞ்சாலர்கள் பறநதோடினா. முன்னர் உகரஸேனன்புத்ரனாகிய மதிகெட்ட கம்ஸன் தன்சுறறத்தவரையடக்கி ஜராஸநதன்பெணகளிருவரை மனைவிகளாக எடுததுககொண்டான். ஜராஸநதன்புதல்விகளும [1]ஸஹதேவன்தஙகைகளுமான அஸ்தியென்றும பிராஸ்தியென்றுமபெயருள்ள இரண்டு ராஜகுமாரிகளையும மணமபுரிநதான். அறிவுகெட்டவனாகிய அந்தக்கமஸன் அநதஜராஸநதன்பலத்தினால தன்சுறறத்தவரையடக்கி மேன்மையையடைநதான். அவனிடததில் அது மிகப பெரிய அநீதியாயிருநதது. போஜராஜாகளிலமுதிர்நதவர்கள் துராதமாவான கம்ஸனாறபீடிககபபட்டுத தமகுலததோரைக காபபாறறக் கருதி அழகுள்ள அநதஆகுகன்பெணணை அபபோதே அக்ரூரனுக்குக்கொடுதது (அநதஅக்ரூரனால) நமமையழைபபிததுக் கௌரவிததனர். நானும் ஸங்கர்ஷணரைத துணையாகக்கொண்டு சுற்றத்தாரின்காரியத்தைச்செய்தேன். கமஸனும ஸுநாமாவும் முறையே என்னாலும் பலராமராலும் கொல்லபபடடனர். கமஸனைக்கொன்றபிறகு ஜராஸந்தனுக்கஞ்சின என்குலத்தோரை முதலில்பலராமரும் நானும் சேர்ந்து காபபாறறினோம. ராஜாவே! ஜராஸநதன்எதிர்க்க, கரைகடநத பயமநேர்நதபோது நாங்கள்பதினெண்குலததோர்கள்சேர்ந்து [2]இவ்

1 ஜராஸநதன் புதரன்.

2 ஊரைவிட்டுப்போகிற ஆலோசனை.

வாலோசனைசெய்தோம். சத்துருக்களையழிக்கும் சிறந்த அஸ்த்ரங்களி
ஞல் நாங்கள் ஓயாமல் யுத்தஞ்செய்து முந்நூறுவருஷங்களாகத்
தோன்றும் மூன்றுவருஷங்களாகியும் அந்தஜராஸந்தன்ஸேனையைக்
கொல்லாமற்போனேம். ஏனெனில், தேவர்களுக்கொப்பான வன்
மையுள்ளவர்களும் வீரர்களிற்சிறந்தவர்களும் அஸ்த்ரங்களால்மரண
மில்லாதவர்களுமாகிய ஹம்ஸடிம்பகர்களென்னும்பெயருள்ளவர்கள்
இருவரும் ஜராஸந்தன்பக்ஷத்திலிருந்தனர். இணைபிரியாத அவ்விரண்
டுவீரர்களும் சூரனுன ஜராஸந்தனுமாகிய இம்மூவரும் மூன்றுலோக
ங்களுக்கும் போதுமானவரென்பது என்கருத்து. புத்திசாலிகளிற்
சிறந்தவரே! நமக்குமாத்திரமேயன்று. மற்றுமுள்ள அரசர்கள் எவ்
வளவுபேரிருக்கின்றனரோ அவரனைவர்க்கும் இதேஎண்ணந்தான்
உண்டாயிற்று. ராஜாவே! நானே ஜராஸந்தனுக்கு (பாரபவர்க்கு)
மயிர்சிலிர்ப்பெடுக்கும்படியான பயங்கரமான பதினெட்டுயுத்தங்க
ளைக்கொடுத்தேன். ஆகிலும், மஹாபலசாலியானஜராஸந்தன் கொல்
லப்படவில்லை. பிறகு ஹம்ஸனென்று பிரசித்திபெற்றிருந்த அந்தச்
சிறந்தஅரசன் அந்தப்பதினெட்டாவது யுத்தத்தில் பலராமரால் அடிக்
கப்பட்டான். பாரதரே! ராஜாவே! அப்போது ஹம்ஸன்கொல்லப்
பட்டானென்று யாரோசொன்னதைக்கேட்டு, டிபிகன் யமுனையாற்
றில்மூழ்கினன். "இவ்வுலகத்தில் ஹம்ஸனைவிட்டு நான்ஜீவிக்கமாட்
டேன்" என்று நிச்சயஞ்செய்து அவன்மரணமடைந்தான். அவன்அவ்
வாறுனதைக்கேட்டுப் பகைவரின்நகரங்களைஜயிப்பவனுகிய அந்த ஹம்
ஸனும் யமுனைக்கேசென்று அதில்அமிழ்ந்தான். பரதசிரேஷ்டரே!
அந்தராஜாவானஜராஸந்தன் அவ்விருவரும் இறந்துபோனதைக் கே
ள்வியுற்றுச் சோர்வடைந்தமனத்துடன் தன்நகரத்திற்குச்சென்றுன்.
சத்துருக்களைஸம்ஹரிப்பவரே! அந்தஜராஸந்தனென்னும்ராஜா அவ்
வாறுதிரும்பிப்போனபிறகு நாங்களெல்லாரும் மகிழ்ந்து மறுபடியும்
மதுரையில்வஸித்தோம். அரசர்க்கரசே! பகைவரையடக்குகிறவரே!
தாமரைமலர்போன்ற கண்களையுடையவர்களான கம்ஸன்மனைவிகள்
தம்கணவனுடையமரணத்தினுல் துயரமுற்றுத் தங்கள்தந்தையும் மக
தராஜனுமான ஜராஸந்தனிடம்சென்று, 'எங்கள்கணவனைக் கொன்ற
வனைக்கொல்' என்று தூண்டும்போதெல்லாம் முன்செய்தஆலோ
சனையையேநினைத்து மனத்துயரத்துடன் ஓடிப்போனேம். மஹா
ராஜாவே! நாங்களெல்லாரும் ஜராஸந்தன்பயத்தினுல் தனஸம்பத்
தைச் சேர்த்தெடுத்துக்கொண்டு புத்திரர்கள் குலத்தோர் சுற்றத்தார்
களுடன் ஊரைவிட்டுத் தனித்துப் போகவேண்டுமென்றுநினைத்து

மேற்றிசையில் ரைவதகமென்னும் குன்றினால்விளங்கும் குசஸ்தலி யென்னும் அழகானநகரத்தையடைந்து அதில் வீடுகள்கட்டினோம். தேவர்களாலும் அணுகமுடியாத கோட்டையரண்களையும் செய்தோம். அந்தநகரத்தில் பெண்களும் யுத்தஞ்செய்யலாம். மஹாரதர்களான யாதவர்களுக்குச் சொல்லுவானேன். பகைவரையழிப்பவரே! நாங்கள் அந்தச்சிறந்தமலையைப்பார்த்தபிறகு ஜராஸந்தனைக்கடந்தோமென்றுநினைத்து ஒருபயமுமின்றி அந்நகரத்தில் வஸிக்கிறோம். கௌரவச்ரேஷ்டரே! பிறகு யாதவர்கள் மேலானஸந்தோஷத்தையடைந்தனர். இவ்வாறு ஜராஸந்தனால் எல்லாவகையாலும் தீங்கு செய்யப்பட்டநாங்கள் ஸமர்த்தர்களாயிருந்ததனால் ஒன்றுசேர்ந்து மூன்றுயோசனைநீளமும் ஒவ்வொருயோசனைவிஸ்தாரமுமுள்ள மூன்றுசிகரங்களுள்ளதும் ஒவ்வொருயோசனையின்கோடியிலும் நூறு வாயில்களுள்ளதும் வீரர்களின்பராக்ரமத்தினால்காக்கப்பட்ட தோரணங்களையுடையதும் யுத்தத்திலடங்காத மதமுள்ள பதினெட்டு க்ஷத்திரியர்களால்காக்கப்பட்டதுமான கோமந்தமென்னும்மலையை ஆச்ரயித்தோம். எங்கள்குலத்தில் பிறந்தவர்கள் பதினெண்ணாயிரம் ஸஹோதரர்கள் இருக்கின்றனர். ஆகுகன்புதல்வர்கள் நூற்றுவர். ஒவ்வொருவனும் தேவர்களுக்குமேலானவன். ஸஹோதரனோடு கூடிய சாருதேஷ்ணன், சக்ரதேவன், சாத்யகி, நான், பலராமர், ஸாம்பன், பிரத்யும்னன் ஆகிய எழுவரும் மஹாரதர்கள். ராஜாவே! மற்றவரையும் சொல்லுகிறேன்; கேளும். கிருதவர்மா, அநாத்ருஷ்டி, ஸமீகன், ஸமிதிஞ்சயன், கங்கன், சங்கு, குந்தி இவ்வேழுபேர்களும் மஹாரதர்கள். [1][பிரத்யும்நன், அநிருத்தன், பானு, அக்ரூரன், ஸாரணன், நிசடன், கதன், இவர்களேழுபேரும் மஹாரதர்கள்] விக்ரமன், ஜில்லி, பப்ரு, உத்தவன், விதூரதன், வஸுதேவர், உக்ரஸேனன் ஆகியஇந்தஏழுமந்திரிசரேஷ்டர்களும் அந்தகபோஜன்குமாரர்களாகிய பிரஸேனஜித், ஸ்யமந்தகமென்னும்மணி மிகுதியாகஸ்வர்ணத்தையளிப்பதனால் குபேரனுடைய்சிறப்பையடைந்த யமலன் இவ்விருவரும் அவர்களின்தந்தையாகிய அந்தகபோஜராஜனும் ஆகப்பதின்மர் இருக்கின்றனர். வஜ்ரம்போன்ற தேகவன்மையுள்ளவர்களும் சிறந்தபராக்ரமமும் பருத்தசேனையுமுள்ளவர்களுமாகிய யாதவ வீரர்கள் மலைகளின்இடைத்தேசமாகிய குசஸ்தலியைநினைத்து அச்சமற்றவராயிருக்கின்றனர். ராஜாவே! பாண்டவர்களாலும் நாங்கள் எப்போதும் காப்புள்ளவர்கள். பாரதரே! இவ்வாறு எல்லாச்செல்

---

[1] இந்த அதிகபாடத்தில் பிரத்யும்னன் இரட்டித்து வந்திருக்கிறது.

வச்சிறப்புக்களும் அமைந்த அந்தச்சராஸந்தன் வேளுன்றியிருக்கையில் க்ஷத்திரியர்களுள் உம்மை அரசர்க்கரசனுகச்செய்யத்தகுமா? துரியோதனன், பீஷ்மர், துரோணர், அசுவத்தாமா, கிருபர், கர்ணன், சிசுபாலன், வில்லாளியானருக்மி, ஏகலவ்யன், த்ருமன், சுவேதன், சைபயன், சகுனி இவர்களைப் போரில்வெல்லாமல் யாகத்தை எவ்வாறுசெய்யமாட்டுவீர்? இவ்வரசர்கள் பெருந்தன்மையினுல் யுத்தஞ்செய்யாமலிருப்பாராயினும் இவர்களில் பலத்திறுைம் சிறந்த அஸ்த்ர பலத்திறுைம் கர்வங்கொண்டவனும் மிக்கபொருமைக்காரனும் வீர சிரேஷ்டனும் ஸௌர்யபுத்ரனுமான கர்ணனெருவன்மட்டும் யுத்தஞ் செய்வான். ராஜாவே! மஹாபலசாலியான ஜராஸந்தன் ஜீவித்திருக்கையில் ராஜஸூயயாகத்தை நீர்நிறைவேறறமுடியாதென்பதுதான் எனது அபிப்பிராயம். அந்தஜராஸந்தன் சிங்கம் மஹாகஜங்களைவெல்வதுபோல ராஜாக்களனைவரையும்வென்று கிரிவிரஜமென்னும் ஊரில் மலைக்குகையில் (அவர்களை) அடைத்திருக்கிறுன். அந்தஜராஸந்தனென்னும்ராஜா இந்தயாகஞ்செய்யநினைத்துப் பூமியையாளுகின்றவர்களாகிய எண்ணுயிரம்அரசர்களால் பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்றுன். பகைவரைவெல்லுகிறவரே! அவன் உமாபதியும் மஹாத்மாவுமான மஹாதேவனை உக்ரமானதவத்திறுல்ஆராதனஞ்செய்து ராஜாக்களைஜயித்தான் ராஜசிரேஷ்டரே! அவன் செய்தபிரதிஜ்ஞையைநிறைவேற்றினுன். அவன், ஸேனைகளோடுவந்த அரசர்களை ஜயித்து ஜயித்துத் தன்நகரத்திற்கொண்டுவந்து அடைத்துக் [1]கிரிவ்ரஜத்தை [2]புருஷவ்ரஜமாகச்செய்தான் மஹாராஜாவே! நாங்களும் அப்போது ஜராஸந்தனுக்குப்பயந்துதான் மதுரையையொழித்துத் துவாரகாபுரி சேர்ந்தோம். மஹாராஜாவே! இந்தயாகத்தை நீர்செய்யக்கருதினுல் அந்தராஜாக்களைவிடுவிக்கவும் ஜராஸந்தனைவதஞ்செய்யவும் முயல வேண்டும். கௌரவரே! புத்திமான்களிற்சிறந்தவரே! அவ்வாறின்றி ராஜஸூயயாகத்தைப்பற்றிய இந்தஆரம்பம் முழுதும்நிறைவேற்றுவதற்குமுடியாது. குற்றமற்றராஜாவே! இதுதான் என் ஆலோசனை. நீர் எவ்வாறுநினைக்கிறீரோ? காரியம்இவ்வாறிருக்கையால் விஷயத்தைப்பற்றி நீரும் யுக்திகளைக்கொண்டு நிச்சயஞ்செய்து எனக்குச் சொல்லும்" என்றுர்.

---

[1] மலைக்கூட்டம். [2] ஆள்கூட்டம்.

## பதினைந்தாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன்சொல்லைக்கேட்டுத் தர்மபுத்திரர் ராஜஸூயஞ்செய்யாதொழிவதேநலமென்றுநினைத்துக் கிருஷ்ணனைக்கேட்டதும், பீமன் தான் ஜராஸந்தனைஜயிப்பதாகச்சொன்னதையனுஸரித்துக் கிருஷ்ணன் ஜராஸந்தவதம் முதற்காரியமென்றுசொன்னதும்.)

அதைக்கேட்டு, யுதிஷ்டிரர்சொல்லலானார் :—"ஓ! விருஷ்ணிகுலச்ரேஷ்டரே! மற்றவர்சொல்லமுடியாதசொல் மேதாவியானஉம்மால் உரைக்கப்பட்டது. ஸந்தேஹங்களைவிடுவிப்பவர் உம்மைவிடவேறொருவருமிப்புவியிலில்லை. தம்தம்விருப்பத்தைச்செய்துகொள்ளும் அரசர்கள் வீடுக்குவீடு இருக்கிறார்கள். அவர்கள் ஸாம்ராஜ்யத்தையடைந்தவர்களல்லர். ஸம்ராட்என்னும்பெயர்பெறுவது கடினம். பிறர்சக்தியையறிந்தவன் தன்னைச் சிறப்பித்துப்பேசமாட்டுவனோ? பிறருடன்சேர்ந்தபோது எவன்சிலாக்கியமாயிருக்கிறானோ அவன் பூஜிக்கப்பெறுகிறான். [1]பூமி விரிவாகவும் அநேககண்டங்களுள்ளதாகவும் அநேகரத்னங்கள்நிரம்பினதாகவுமிருக்கிறது. மனிதன் வெகுதூரஞ்சென்றபிறகுதான் லாபத்தைப்பார்க்கிறான். ஒழிவடைதலையே சிறந்ததாகநினைக்கிறேன். ஒழிவையடைவதனால் எனக்கு நன்மையுண்டாகும். ராஜஸூயத்திலிறங்குவதனால் மேன்மைபெறமுடியாதென்பது என்கருத்து. ஜனார்த்தனா! உயர்ந்தமனமுள்ள இந்தஎன் [2]குலத்தோர் தம்மிலொருவர் இவ்வரசர்களெல்லாரிலும் மிகச்சிறந்தவனாகலாமென்று நினைக்கின்றனர் மஹானுபாவரே! குற்றமற்றவரே! நாமும் அக்காலத்தில் ஜராஸந்தனுடைய துஷ்டத்தனத்

1 பூமியென்னப்பட்டமந்த்ராலோசனையின்விஷயம், உபாயங்கள் அபாயங்கள்முதலிய பலவகைகளடங்கியது. பொன், பெண், சேனை, ரதனம்முதலிய அநேகம் உயர்ந்தபயன்கள்நிரம்பினது. அந்தமந்த்ராலோசனையின்விஷயத்தில் வேண்டினஸாதகங்களைக்கூட்டியும் பாதகங்களைவிலக்கியும் விடாமுயற்சிமுதலியவற்றால் மேலே வெகுதூரம்சென்றபின் சிரேயஸ் என்று சொல்லப்பட்ட காரியஸித்தியை மனிதன்அறிகிறான் என்பதும், 2 பூமியைப்போல ஸ்திரமானநிச்சயபுத்தியானது அந்தஅந்தவிஷயங்களுக்கேற்றபடி அநேகவிதமாகவும் தடையற்றதாகவும் ரதனங்கள்போன்ற பலஉயர்ந்தபயன்கள் நிரம்பினதாகவும் இருக்கிறது. மனிதன் வெகுதூரஞ் சென்றபிறகுதான் தனது நன்மையை அறிகிறான். அதாவது, மனதைக்கவரும் சப்தாதிவிஷயங்களைக் கடந்தபின் தனது ஆத்மஸ்வரூபமாகியசிரேயஸைக்கண்டறிகிறானென்பதும் பழையவுரை.

2 பீமன்முதலானவர்கள்.

தைப்பார்த்து அவனுக்கு அஞ்சியேயிருந்தோம். யார்க்கும்வெல்லக் கூடாத பிரபுவே! யான் உமதுகைவன்மையைச் சார்ந்தவனன்றோ? நீரே அவனுக்கஞ்சினபோது என்னைப் பலவானென்றுநான்நினையேன். விருஷ்ணிகுலத்தவரே! சிறந்தகைகளையுடையவரே! மாதவரே! உம்மாலாவது பலராமராலாவது பீமஸேனனாலாவது அர்ஜுனனாலாவது அவன் கொல்லப்படக்கூடியவனோ கூடாதவனோவென்று ஸந்தேகித்துத் திரும்பத்திரும்ப ஆராய்ந்துகொண்டிருக்கிறேன். கேசவரே! எல்லாக்காரியங்களிலும் எனக்கு நீர்தாம் நியமிப்பவராயிருக்கிறீர்" என்றார். அதைக்கேட்டுப் பேசுவதில் ஸமர்த்தனான பீமன் பேசத்தொடங்கினான்.

"முயற்சியைக் கடைப்பிடியாத அரசனும் தான்பலஹீனனாயிருந்து தக்கஉபாயமின்றிப் பலவானையெதிர்ப்பவனும் புற்றுப்போல உட்கார்ந்துபோகின்றனர். பலங்குறைந்தவனும் சோம்பலின்றி ராஜநீதி தவறாமல் உபாயங்களைத் திருத்தமாகச்செய்வதினால் அதிகபலமுள்ள சத்துருவையும்வென்று தனக்குவேண்டினகாரியங்களையும் பெரும்பாலும் ஸாதிப்பான். கிருஷ்ணனிடத்தில்உபாயமும் என்னிடத்தில் பலமும் தனஞ்சயனிடத்துஜயமும் இருக்கின்றன. நாங்களுமூவரும் மூன்றுஅக்னிகள் யாகத்தைமுடிப்பதுபோல ஜராஸந்தனைமுடித்து விடுவோம். கோவிந்தா! உமதுபுத்திபலத்தைப்பற்றுவதனால் தர்மராஜர் எல்லாநன்மைகளையும்அடைவர் உம்மைநாதனாகப்பெற்ற எங்களுக்கு எப்போதும் ஜயந்தானே" என்றான். அதற்குக் கண்ணபிரான், "பால்யனானவன் காரியங்களை ஆரம்பித்துவிடுவான். பின் வருவதைப்பாரான். ஆதலால், பால்யனும் பொருளையேநாடினவனுமாகிய பகைவனைப்பற்றி க்ஷத்திரியர்கள் [1]பொறுப்பதில்லை. ஜயிக்கக்கூடிய அகப்புறப்பகைவர்களை ஜயித்ததனால் மாந்தாதாவும், பிரஜைகளைப்பரிபாலித்ததனால் பகீரதனும், தவவன்மையினால் கார்த்தவீரியார்ஜுனனும், நீதிபலத்தினால் பரதனென்னுமரசனும், செல்வத்தினால் மருத்தனும் ஆகியஇந்த ஐந்துஸம்ராஜாகள் தங்கள்குலத்தோரெல்லோரையும் (தங்கள்புகழால் வியாபித்துத்) தழுவிக்கொண்டு இருந்தனரென்று கேள்விப்பட்டிருக்கிறோம். ஒவ்வொருயுகத்திலும் ஸம்ராஜர்களிருப்பதில்லை. யுதிஷ்டிரரே! ஜயிக்கவேண்டியவர்களை ஜயிப்பது, பரிபாலனஞ்செய்வது, தவம்புரிவது, பொருள் விருத்திசெய்வது, உபாயங்களைப் பிரயோகிப்பது ஆகியஐந்துவகைகளாலும் ஸம்ராட்டாகவிரும்புகிற உமக்குப் பிருஹத்ரதன்புத்ரனான ஜராஸந்

[1] அவன் பெரியவனாவதற்குமுன்னமே ஒழித்துவிடுகின்றனர்.

தன் ஜயிக்கமுடியாதவனாக இருக்கிறான். பரதச்ரேஷ்டரே! அதை அறியும். நூற்றொருகுலத்தோராகிய அரசர்களும் அவனுக்கு எதிர் யுத்தஞ்செய்யாமற்போயினர். ஆதலால், அவன் தன்பலத்தினாலேயே இவ்வுலகத்தில் ஸாமராஜ்யத்தைநடத்துகிறான். ராஜாக்கள் ரதனங்களை யெடுத்துககொண்டு ஜராஸந்தனிடம காத்திருக்கின்றனர். சிறுபிள்ளைத்தனத்தினால் அநீதியைககடைபபிடிதத அவன் அதனாலும சந்தோஷபபடுவதில்லை. மனிதாகளில முதன்மையான ஜராஸந்தன் ராஜ்யபட்டாபிஷேகஞ்செய்யபபட்ட அரசனைப பலவநதமாகப பலிக்கு எடுத்துக் கொண்டுபோகிறான். மனிதாகளில ஜராஸநதனுக்குப [1] பராக்மாயிராதவனை நாம எங்குமகண்டிலம ஜராஸநதன் நூற்றுக் குட்பட்டவராகிய ராஜாககளை இவ்வாறு முழுதும் வசபபடுததினான். குந்திபுத்ரரே! மிகவும்பலக்குறைவானராஜா அவனிடம் அணுகுவது எவ்வாறு? தண்டுலபரஸ்தமென்னுமஇடததில் ராஜாவானஜராஸந்தன் சிவபெருமானைக்குறிததுத் தவஞ்செய்கிறான். பரதசரேஷ்டரே! பசுபதியின்ஆலயத்தில் பசுக்களைபபோலப பலிகொடுபபதறகாகக் குறிபபிட்டுப் புரோக்ஷணஞ்செய்யபபட்ட அநதராஜாக்களுக்கு உயிர்விருப்பமேது? க்ஷத்திரியன் எபபோது சஸ்திரததினால் மரணத்தையடைகிறானோ அபபோது கௌரவிக்கபபடுகிறான். ஆதலால், நாம் யுத்ததததில் ஜராஸநதனையெதிாததுத் தடுபபோம. ராஜாவே! எண்பத்தாறுராஜாக்கள ஜராஸநதனால கொண்டுபோய்ச்சேர்க்கப்பட்டனர். பதினால்வா குறைவு. அவர்களையும கொண்டுபோன பிறகு கொடியசெய்கை நடக்கப்போகிறது. அதற்குத் தடை எவன் செய்வனோ அவன் உலகமெல்லாம வியாபிககுமபுகழைபபெறுவான். ஜராஸநதனை எவன் ஜயிபபனோ அவன் நிச்சயமாக ஸம்ராஜனாவான்" என்றுசொன்னார்.

---

## பதினாறாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



(ஒழிவடைகிறதைபபற்றித் தர்மராஜர் சொல்ல, அர்ஜுனன் அதனை மறுத்துப் பராக்கிரமத்தின்சிறபபைக்கூறியது.)

யுதிஷ்டிரர், "கிருஷ்ண! நான் ஸம்ராஜனுடையசிறப்பையடையக்கருதித் தன்லாபத்தையே முதன்மையாகக்கொண்டு முற்றும் ஸாஹஸமாக உங்களை எவ்வாறு அனுபபுவேன்? பீமன் அர்ஜுனன்

---

[1] வசப்படுத்தப்படாதவன்.

இருவரும், இரண்டுகண்களென்றும் ஜனார்த்தனர்மனமென்றும் நினைத்திருக்கிறேன். மனமும் கண்களுமில்லாதவனுடைய உயிர்வாழ்க்கை எவ்வாறிருக்கும்? பயங்கரமானபராக்ரமமுள்ளதும் கரைகாண முடியாததுமான ஜராஸந்தனுடைய சேனையை எதிர்த்துச்சென்று யுத்தத்தில யமனும வெல்லான். அந்தவிஷயத்தில் உங்கள்செய்கை எவ்வளவு? இந்த வேறுலாபத்தில் பிரவிருத்தித்தனைக்கு அனர்த்தம் வந்து சேருகிறது. ஆதலால, நான் இதற்கு அங்கீகாரம்கொடுப்பது யுக்தமாகாதென்று நினைக்கிறேன். கிருஷ்ண! என்மட்டில் நான்ஆலோசிப்பதைச் சொலலுகிறேன். அதைக்கேட்கவேண்டும். இந்தக்காரியத்தில் ஒழிவடைதலே நலமென்றுநினைக்கிறேன். செய்வதற்குக்கடினமான ராஜஸூயயாகமானது இபபோது என்மனத்தைத் தடுக்கிறது" என்றுசொன்னார். சிறந்தவில்லையும் சிறந்ததூணிகளையும ரததத்தையும கொடியையும குதிரைகளையுமபெற்றவனான அர்ஜுனன் யுதிஷ்டிரரிடமபேசலானான்.

"ராஜாவே! விரும்பத்தக்கவையும் பெறுவதற்கரியவையுமான வில், அஸ்திரங்கள், அமபுகள், பராக்ரமம், துணை, பூமி, கீர்த்தி, திறமை முதலியவைகள் எனக்குக்கிடைத்திருக்கின்றன. நன்றாகக்கற்றுத் தேர்ச்சியடைந்தவர்கள் உயர்குலத்திற்பிறப்பதைச் சிறப்பாகக் கூறுகின்றனர். பராக்கிரமத்திற்கொப்பானது ஒன்றுமில்லை. பராக்கிரமஞ்செய்வதே எனக்கு உசிதமாகத்தோன்றுகிறது. பராக்கிரமசாலிகளின் குலத்திற்பிறந்தும பராக்கிரமமில்லாதவன் என்னசெய்வான்? பராக்கிரமமில்லாத குலத்திறபிறந்தாலும் பராக்கிரமமுள்ளவன் சிறந்தவனாகிறான். ராஜாவே! எவன்செய்கை சத்துருஜயத்திலேயே முழுதும் பிரவிருத்திக்கிறதோ அந்தப பராக்கிரமமுள்ளக்ஷத்திரியன் மறறகுணங்கள ஒன்றுமிலலாதவனானாலும் பகைவரைமிஞ்சுவான். பராக்கிரமமில்லாதவன் எல்லாக்குணங்களும பொருந்தினவனாயிருந்தும் என்னசெய்வான்? எல்லாக்குணங்களும் பராக்ரமத்தைச் சேர்ந்தவையாகவல்லவோ இருக்கின்றன. ஜயத்திற்குக்காரணம் உத்ஸாஹந்தான். அது செய்கையையும் பாக்கியத்தையும்பற்றியிருக்கிறது. ஒருவன் ஸாதனங்களுள்ளவனாயிருந்தும் ஊக்கமின்மையினால் அவற்றை உபயோகப்படுத்துவதில்லை. அந்தவழியாகத்தான் ஒருவன் பலமுள்ளவனாகஇருந்தும எதிரிகளிடம்தோல்வியடைகிறான். பலமுள்ளவனுக்கு உத்ஸாஹக்குறைவிருப்பதுபோலவே தன்பலமறியாமையுமுண்டு. அவ்விரண்டும் கெடுப்பதற்குக்காரணங்கள். வெற்றியைவிரும்பும் அரசன் அவ்விரண்டினையும் விடவேண்டும்.

யாகத்திற்காக ஜராஸந்தனையழிப்பதையும் அரசர்களைக்காப்பதையும் செய்வோமாயின் அதைவிட மேலானதென்ன இருக்கும்? ராஜாவே! ஒருகாரியத்தைத் தொடங்காமலிருப்பதற்கு நம்மிடத்தில் தகுதியில்லையென்றநிச்சயம் அவசியமாயிருக்கவேண்டும். நமக்குத் தகுதியிருப்பதில் ஸந்தேஹமில்லாமலிருக்கும்போது தகுதியில்லையென்று நீர்நினைப்பதேன். பிற்காலத்தில் நாம் ரிஷிகளாகிச் சாந்தியைவிரும்பும்போது காஷாயவஸ்திரம் ஸுலபம். இப்போது ஸம்ராஜாவாவது நமக்குமுடியும். நாம் எதிரிகளுடன்யுத்தஞ்செய்வோம" என்றான்.

---

## பதினேழாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன்சொன்னதை அனுஸரித்துக் கிருஷ்ணன் சொல்லியதும், அவர் தர்மராஜாகேட்டதன்பின் ஜராஸந்தன் பிறப்பைப்பற்றிக்கூறியதும்.)

அதன்பிறகு கிருஷ்ணபகவான் சொல்லலானார்:—"பரதவம்சத்திற்பிறந்து குந்தியின்புத்ரனாயிருப்பவனுக்குத் தகுதியானபுத்தி தான் இப்போது அர்ஜுனனால் வெளியிடப்பட்டது. மரணமென்பது இரவிலோ பகலிலோ நாமறியோம். யுத்தஞ்செய்யாமையினால் ஒருவன் மரணமில்லாமலிருந்ததையும் நாம்கேட்டதில்லை. நீதிசாஸ்திரங்களினால் அறியப்பட்ட உபாயங்களினால் பிறரைவசப்படுத்தி அதனால் தன்மனத்திற்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணிக்கொள்வது தான் மனிதர்களால்செய்யக்கூடியது. தீங்குகளைவிலக்கி நல்லஉபாயங்களைச்சேர்ப்பதனால் ஆரம்பம்உயர்ந்ததாகிறது. ஸஹாயம்சேர்வதனால் விசேஷமுண்டாகிறது. அப்போது இரண்டுபக்ஷங்களும் ஸமமாவதில்லை. உபாயங்களும் ஆலோசனையுமில்லாதவனுக்கு யுத்தத்தில் தோல்விநிச்சயம். இருவரும் ஸமமாயிருப்பதனால் ஸந்தேஹம்உண்டாகிறது. ஜயமென்பது இருதிறத்தாருக்கும் உண்டாகாதே. ஆதலால், நாம் தந்திரமாக ஆற்றுப்பெருக்கு மரத்தினருகிற்செல்வது போலச் சத்ருவிருக்குமிடத்திற்குச்சென்று நமதுரஹஸ்யம்வெளிப்படவொட்டாமல் அவன் பலக்குறைவைக்கண்டு பராக்ரமஞ்செய்வோமாயின் ஏன் காரியஸித்தியையடையோம்? அதிகபலவான்களானசத்ருக்கள், சேனைகளைவகுத்துநிற்கும்போது அவர்களுடன் போர்செய்யலாகாதென்பது புத்திசாலிகளின் நீதி. அந்தது எனக்கும் இப்போதுசரியாகத்தோன்றுகிறது. நாம் சத்ருவுக்குத்தெரியா

மல் அவன்வீட்டில் பிரவேசித்தோமாயின் அபாயமின்றி அந்தச்சத்துருவின்தேசத்தைப் பிடித்துக்கொண்டு நம்முடையஇஷ்டத்தை யடையலாம். புருஷர்களில் சிரேஷ்டனாகிய ஒருவன்தான், ஐந்து பூதங்களின் சேர்க்கையாகிய தேகத்தை ஆத்துமா தாங்குவதுபோல ராஜ்யலக்ஷ்மியை எப்போதும் தாங்குகிறான். அவன் ஓய்ந்திருப்பதை நாம்பார்க்கவில்லை. அல்லது குலத்தோர்களைக்காப்பதையே தலைமையாகக்கொண்டநாம் ஜராஸந்தனைக்கொன்றபிறகு மிச்சமுள்ளசேனையினால் யுத்தத்திலடிபட்டாலும் அதனால் ஸ்வர்க்கத்தைச்செல்வோம்" என்றார். யுதிஷ்டிரர், "கிருஷ்ணா! ஜராஸந்தன்என்பவன் யாவன்? எத்தகைய சக்தியும் பராக்கிரமமுமுடையவன். அவன் அக்னிக்கொப்பான உம்மையணடியும் 'விட்டில்பூச்சிபோல எரிக்கப்படாமலிருக்கிறானே" என்றுகேட்க, கண்ணபிரான்சொல்லுகிறார்.

"ராஜாவே! ஜராஸந்தன்எவ்வகையான சக்தியுள்ளவன்? எப்படிப்பட்டபராக்ரமமுள்ளவன்? பலமுறைதீங்குசெய்தும் எம்மால் ஏன்விடப்பட்டானென்பதைச் சொல்லுகிறேன்; கேளும். மூன்று அக்ஷௌஹிணிசேனைகளுக்கு அதிபதியும் யுத்தத்தில் தனக்குச்சமானவனில்லையென்று கர்வித்தவனும் பலசாலியும் மகததேசாதிபதியுமானபிருஹத்ரதனென்னும் அரசன் ஒருவனிருந்தான். அழகும் பலமும் செல்வமுமநிரம்பினவனும், ஒப்பற்றபராக்ரமமுள்ளவனும், எக்காலமும் சரீரத்தில் யஜ்ஞதீக்ஷைக்குறிகளைவஹித்தவனும், இரண்டாவது இந்திரனைப்போன்றவனும், எல்லாவற்றிற்கும்மேலாகப்பிரகாசிப்பதில் ஸூர்யனுக்கும், பொறுமையில்பூமிக்கும், கோபத்தில்யமனுக்கும், பொருட்செல்வத்தில் குபேரனுக்கும் ஒப்பானவனுமாகிய அவ்வரசன் மகததேசத்தில் கிரிவ்ரஜமெனனும் நகரத்திலிருந்து தனது அரசாட்சியைநடத்தினான் பரதசிரேஷ்டரே! அவனதுஉயர்குலத்துக்குரிய [1]குணங்கள் ஸூர்யகிரணங்கள்போலப் பூமியெல்லாம்பரவின. பரதசிரேஷ்டரே! அந்தமஹாவீரன் அழகும் செல்வமுமுள்ளவர்களும் இரட்டையாகப்பிறந்தவர்களுமான காசிராஜன்பெண்களை மணம்புரிந்தான். புருஷச்ரேஷ்டனாகிய அந்தப்பிருஹத்ரதன் அவ்விருமனைவிகளின்முன்னிலையிலும், "நான், உங்களில்யார்க்கும் ரஹஸ்யத்தில் பக்ஷபாதமாகநடவேன்" என்றுவாக்குத்தத்தஞ்செய்தான். அவ்வரசன் தனக்கு ஒத்தஅன்பினர்களான அவ்விரண்டுமனைவிகளோடும்சேர்ந்து இரண்டு [2]பிடிகளோடுசேர்ந்தயானைபோலவிளங்கினான்.

---

[1] 'கணை:' என்றபாடத்தைவிட்டு 'குணை:' என்றபாடம்கொள்ளப்பட்டது.

[2] பெண்யானை.

அவ்விருவர்க்கும்நடுவிலிருந்த அவ்வரசன் கங்காதேவி யமுனாதேவிகளுக்கு நடுவில் தேகமெடுத்திருக்கும்ஸமுத்திரராஜன்போலச் சோபித்தான். சிற்றின்பங்களில்ஆழ்ந்திருக்கையிலேயே அவனுக்கு இளமைப்பருவம்தாண்டிற்று. அவனுக்கு ஸந்ததியைவிருத்திசெய்ய ஒரு புத்திரன்கூடப் பிறக்கவில்லை. அந்தராஜசிரேஷ்டன் மங்களகரமான அனேகஹோமங்களையும் புத்திரகாமேஷ்டிகளையுஞ்செய்தும் வம்சத்தின் விருத்திக்குக்காரணமான ஒருபுத்திரனையடையவில்லை. அவன் தன் இரண்டுமனைவிகளோடும் மிகவும்வெறுப்புற்றான். ராஜாவே! ராஜபக்தியுள்ள மந்திரிமுதலியவர்களால்தடுக்கப்பட்டும் அவன் ராஜ்யத்தைவிட்டு உடனே தபோவனத்தைச்சேர்ந்தான். பிறகு மஹாத்மாவும் கௌதமவம்சத்தவருமான கக்ஷீவானுடையபுத்திரரும் தவத்திற்சிறந்தவரும் உதாரகுணமுள்ளவருமான சண்டகௌசிகரைப்பற்றிக் கேள்விப்பட்டான். தற்செயலாகவந்து ஒருமரத்தடியைச்சார்ந்திருந்த அம்முனிவரை அவ்வரசன் மனைவிகளுடன்கூட எல்லாவகைச்சுச்ருஷைகளினாலும் ஸந்தோஷப்படுத்தினான். அந்தரிஷியும் பிருஹத்ரதனுக்குத் தகுதிப்படி மரியாதைசெய்தார். அவ்வரசன் அந்தமஹாத்மாவினால் அனுமதிகொடுக்கப்பெற்று உட்கார்ந்தான். அப்போது அம்முனிவர் அந்தராஜாவைப்பார்த்து, "நீ பிராம்மணர்களால்அனுஸரிக்கப்பட்டும் மனைவிகளுடன்சேர்ந்தும் வந்திருப்பது எதற்காக?" என்றுவினவினார். அவ்வரசன் அம்முனிவரைப்பார்த்து, "பகவானே! எனக்குப் புத்திரனில்லை, ஸந்ததியில்லாதவனுக்கு முதிர்ந்தபிராயத்தில் ராஜ்யத்தாலாவதென்ன? ஆதலால், நான் பாரியைகள் இருவருடனுஞ்சேர்ந்து வனத்தில்தவஞ்செய்யப்போகிறேன். முனிவரே! ஸந்ததியில்லாதவனுக்குப் புகழும்பித்ர்ச்சிராத்தமும் அழியாமலிரா" என்றுசொன்னான். அந்தஅரசன் இவ்வாறுசொல்லலும், தைரியம் தவறாதவரும் ஸத்தியவாக்குள்ளவருமான அந்தரிஷிசிரேஷ்டர், தயைகூர்ந்து அவனைப்பார்த்து, "அரசர்க்கரசே! நல்லதவமுள்ளவனே! உன்மேல் நான்ஸந்தோஷமடைந்திருக்கிறேன்; வரம்கேள்" என்று சொன்னார். உடனே பிருஹத்ரதன் பாரியைகளுடன்கூடி அவரை நமஸ்காரஞ்செய்து புத்ரனைக்காணுவோமென்ற எண்ணமில்லாமையினால் கண்ணீர்சொரிந்து பேச்சுத்தழுதழுத்து, "பகவானே! ராஜ்யத்தைவிட்டுத் தபோவனத்துக்குப்போன பாக்யஹீனனுக்கு வரம்எதற்கு? ஸந்ததியில்லாத எனக்கு ராஜ்யத்தினாலாவதென்ன?" என்றுசொன்னான். அதைக்கேட்டு மனங்கரைந்த அந்தமுனிவர் தியானஞ்செய்ய அந்தமாமரத்தின்நிழலிலேயேஉட்கார்ந்தார். உட்கார்ந்த

அம்முனிவரின்மடியில் உலராமலும் கிளியினால்கடிக்கப்படாமலுமிருக்கும் ஒருமாங்கனி விழுந்தது. அம்முனிசிரேஷ்டர் அதனையெடுத்து மனத்தைச்செலுத்தி மந்திரித்துப் புத்ரலாபத்திற்கு நிகரற்றஸாதனமான அதை ராஜாவுக்களித்தார். சிறந்தஞானமுள்ள அந்தமஹரிஷி, ராஜாவைப்பார்த்து, "ராஜாவே! மனிதர்க்கதிபதியே! உன்னிஷ்டம் நிறைவேறிற்று; திரும்பிச்செல். அரசனே! இதுதான் உனக்குப்புத்திரன்; இந்தத்தபோவனத்தில் தவஞ்செய்யாதே; தர்மமாகப்பிரஜைகளைப்பரிபாலனஞ்செய். ராஜாக்களுக்கு அதுதான் தவம்; அனேகயாகங்களைச்செய்து ஸோமரஸத்தினால் இந்திரனுக்குத் திருப்திசெய். உன்புத்திரனுக்கு ராஜ்யப்பட்டாபிஷேகஞ்செய்தபிறகு நீ தபோவனத்திற்குவா. பூமிக்கரசே! உன்புதல்வனுக்கு எட்டுவரங்கள்கொடுக்கிறேன்; பிராமணபக்தியோடிருப்பது, யுத்தங்களில்பிறரால்வெல்லக்கூடாமை, புத்திக்கூர்மை, அதிதிகளிடமன்புடைமை, ஏழைகளைக்கவனிப்பது, மிக்கஅதிகமானதேகபலம், உலகத்திலென்றுமிருக்கும்கீர்த்தி, பிரஜைகளுக்கிவனிடத்து அன்பு ஆக இந்தஎட்டுவரங்களையுங்கொடுத்தேன்; ராஜாவே! உன்காரியம்நிறைவேறிற்று; திரும்பிச்செல்லலாம்" என்றுசொன்னார். அந்தரிஷியினால் விடைகொடுக்கப்பெற்றஅவ்வரசன் ஜனநகரத்தாரால் பின்செல்லப்பட்டவனாகி மனைவிகளுடன் அந்தத்தபோவனத்திலிருந்து தன்நகரத்திற்குச் சென்றான்.

"பரதசிரேஷ்டரே! அந்த ராஜச்ரேஷ்டன் முன்னே தான் வாக்களித்திருந்ததைநினைத்து அந்தஒருபழத்தை இரண்டுமனைவிகளுக்கும் கொடுத்தான். அந்தப்பெண்ணரசிகள் அம்முனிவரிடத்துள்ள கௌரவத்தினாலும் தங்களகாலவிதியாஸத்தினாலும் அந்தமாங்கனியை இரண்டுபாகங்களாகச்செய்து புஜித்தனர். ரிஷியின்சொல் தவறாததாகையாலும் அந்தக்காரியம் அவசியம் நேரிடவேண்டியதாயிருந்ததனாலும் கனியுண்டதேகாரணமாக அவ்விருவருக்கும் கர்ப்பம் உண்டாயிற்று. அவ்விருவரையுங்கண்ட அவ்வரசன் பெருமகிழ்ச்சியடைந்தான். சிறந்தபுத்தியுள்ள தர்மராஜாவே! அதன்பிறகு கிரமமாகப் பிரஸவகாலம்நேர்ந்தபோது இரண்டுஸ்திரீகளும் ஒருதேகத்தின் இரண்டுகண்டங்களைப் பெற்றனர்; ஒருகண், ஒருகை, ஒருகால், அரைவயிறு, அரைமுகம், அரைப்பிருஷ்டமாகவிருந்த இரண்டுதேககண்டங்களைக்கண்டு மிகநடுங்கினர். ஸஹோதரிகளான அவ்விரண்டுபெண்களும் பயந்து ஒருவரோடொருவர் ஆலோசனைசெய்து உயிருள்ள இரண்டுதேகபாகங்களையும் மிகத்துயரத்தோடு விட்டுவிட்

ட்னர். அவர்களின் தாதிமார்களிருவரும் அவ்விரண்டு துண்டங்களை யும் நன்றாகமூடி அந்தப்புரத்தின்வாயிலிலிருந்து வெளியேகொண்டு போய் எறிந்துவிட்டுவந்தனர். அந்தத்தாதிகள் வெண்பட்டுக்களி னால்மூடப்பட்ட அவ்விரண்டினையும யார்க்குந்தெரியாமல் நாற்சந்தி யில்போட்டுவிட்டு உடனே மறுபடியும் அந்தப்புரத்துக்குப் போய்ச் சேர்ந்து அவ்விரண்டு அரசிகளுக்கும் தனித்தனியே தெரிவித்தனர். புருஷச்ரேஷ்டரே! அப்போது மாமஸத்தையும ரக்தத்தையும்புஜிப் பவளான ஜரையென்னும் ராக்ஷஸி நாற்சந்தியிலபோடப்பட்ட அவ் விரண்டுகண்டங்களையும் எடுத்தாள். எடுப்பதற்கு எளிதாயிருக்கும் படிசெய்யக்கருதின அவ்வரக்கி விதியின்வன்மையினால மதிகொடுக் கப்பெற்று இரண்டுகண்டஙகளையும கூட்டினாள். புருஷசரேஷ்டரே! அவ்விருதுண்டங்களும் கூட்டப்பட்டவுடன் ஒருருவமுள்ளவீரனாகிய ஒரு ராஜகுமாரன் உண்டானான. ராஜாவே! உடனே ஆசசரியத்தி னால் கண்மலர்நத அவவரக்கி வஜ்ராயுதத்தின் வயிரத்தினாற்செய்யப் பட்டவன்போன்ற அநதக்குழந்தையை எடுக்கமுடியாமறபோனாள். அந்தக்குமாரன் சிவநதஉள்ளஙகைகளோடுகூடிய கரததைபபிடியாகப் பிடித்து வாயில்வைதது்க்கொண்டு மிகுந்த கோபத்துடன் நீருண்ட மேகம் கர்ஜிப்பதுபோற் கூவினான். புருஷஸிம்மமே! வீரரே! அந் தச்சப்தத்தினால் அந்தப்புரத்துஜனங்கள் பரபரப்படைந்து ராஜா வுடன்கூட விரைவாகவெளிப்பட்டனர். பாலநிரம்பின கொங்கைகளை யுடையவரும் புத்ரலாபத்தில் எண்ணம்விட்டுத் துயரமுற்றவருமான அவ்விரண்டுமங்கையர்களும் விரைவாகவே வந்தனர். அவ்விரண்டு துண்டங்களும் அவ்வாறுசேர்ந்ததையும் அரசன சந்ததியில்விருப்ப முற்றவனாயிருத்தலையும் அநதக்குழநதை மிக்கபலமுள்ளதாயிருப்ப தையுங்கண்டு, அரக்கி, 'இநதராஜாவின்தேசத்தில வஸிக்கும் நான் புத்திரனைவிரும்பினவனும மஹாத்மாவும் தர்மிஷ்டனுமான இவ்வரச னதுபுத்ரனை இந்தக்குழநதையைக் கொல்லததகாது' என்று நினைத் தாள். அவள் மானிடரூபமெடுத்து மேகம ஸூர்யனைவஹிப்பது போல அநதக் குழநதையையெடுததுககொண்டு அரசனைநோக்கி, "ப்ருஹத்ரதனே! உனக்கு இநதப்புத்திரனைக் கொடுக்கிறேன். வாங் கிக்கொள். பிராமணசரேஷ்டருடைய கட்டளையினால் உன்னிருமனை விகளுக்கும் பிறநது தாதிமார்களால்எறியப்பட்ட இந்தக்குமாரன் என்னாற்காப்பாற்றப்பட்டான்" என்றுசொன்னாள். பரதச்ரேஷ்ட ரான தர்மராஜாவே! உடனே காசிராஜன்பெண்களாகிய அப்பெண் மணிகள் அந்தக்குழந்தையை விரைவாகவாங்கிக்கொண்டு முலைப்

பால்பெருக்கினால் நனைத்தார்கள். பிறகு அதையெல்லாம்கண்டு மகிழ்வுற்ற அவ்வரசன் பொன்னிறமுள்ளவளும் ராக்ஷஸத்தன்மையில்லாதவளுமான அவ்வரக்கியைப்பார்த்து, "தாமரைமலரின் உட்காய்போன்ற நிறமுள்ளவளே! எனக்குப் புத்ரதானம்செய்தநீ யாவள்? மங்களரூபியே! நீசொல்லாமற்போனாலும் சரி; தேவதையென்று எனக்குத் தோன்றுகிறாய்" என்றுசொன்னான்.

---

## பதினெட்டாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



(ஜரையென்னும்ராக்ஷஸி பிருஹத்ரதராஜாவுக்குத் தன்வரலாற்றைக் கூறிப் பிள்ளைக்குத் தன்பேரிடும்படி சொல்லிப்போனதும், அரசன் அவ்வாறேசெய்ததும்).

ராக்ஷஸி, "அரசர்க்கரசே! உனக்கு ஸுகமுண்டாகட்டும். நான் ஜரையென்னப்பட்ட ராக்ஷஸி; நினைத்தரூபமெடுப்பவள்; உன் அரண்மனையில்பூஜிக்கப்பெற்று ஸுகமாகவஸித்தேன். முன்னர் பிரம்மதேவரால் கிருஹதேவியென்னும் பெயரோடு படைக்கப்பட்ட ராக்ஷஸியாகிய நான் மனிதர்களின்வீடுகள்தோறும் எப்போதுமிருக்கிறேன். அஸுரர்களையழிப்பதற்காக உயர்ந்தஅழகுடன் நான் (வீடுகளில்) வைக்கப்படுகிறேன். யௌவனப்பிராயத்திலிருப்பவளும் புத்ரவதியுமாக என்னை எவன் பக்தியுடன்சுவரில் எழுதிவைப்பனோ அவன் வீடு தழைத்துவிளங்கும்; இதற்குமாறாயிருந்தால் கெடும். பிரபுவே! உன்வீட்டில் அனேகபுத்ரர்களால் சூழப்பட்டவளாகச் சுவர்களிலெழுதப்பட்டுக், கந்தங்கள் புஷ்பங்கள் தூபம பக்ஷணம் போஜனமுதலியவற்றினால் எப்போதும் நன்றாகபபூஜிக்கப்பட்டிருக்கிறேன். தர்மிஷ்டனாராஜாவே! இதற்குப் பிரதியுபகாரம்செய்வதற்காக எப்போதும் நினைத்துகொண்டிருக்கிறநான் உன்புத்திரனுடைய இவ்விரண்டுகண்டங்களையும்கண்டேன். மஹாராஜாவே! என்னால்கூட்டப்பட்ட இவ்விரண்டுகண்டங்களும் தெய்வச்செயலினாலும் உனதுபாக்கியத்தினாலும் ஒருகுமாரனாயின. இந்தவிஷயத்தில் நான் ஒருவ்யாஜமாத்திரமே. நான் மேருமலையையும்தின்னத்திறமையுள்ளவள். உன்குழந்தையைத்தின்பதுஎவ்வளவு. உன்வீட்டிற்செய்தபூஜையினால் ஸந்தோஷமடைந்தநான் உனக்குப் புத்திரனைத்திரும்பக்கொடுத்தேன். இவன் இவ்வுலகத்தில் என்பேரினால்புகழ்பெற்றிருக்கப்போகிறான்"

என்றுமறுமொழிசொன்னாள். தர்மராஜாவே! இவ்வாறுசொன்ன பின் அவ்வரக்கி அங்கேயே அந்தர்த்தானமானாள். அவ்வரசன் அந்தக்குமாரனையெடுத்துக்கொண்டு அரண்மனைக்குச்சென்றான். அவ்வரசன் அப்போதே அந்தக்குழந்தைக்குச்செய்யவேண்டிய ஜாதகர்மம் முதலியவற்றைச்செய்தான். அந்தராக்ஷஸிக்கு மகததேசமெங்கும் மஹோத்ஸவம்செய்யும்படி கட்டளையிட்டான். பிரம்மதேவருக்குச் சமானமான ப்ருஹத்ரதன், "இந்தக்குழந்தை ஜரையென்னும்அரக்கியினால் சேர்க்கப்பட்டதனால் ஜராஸந்தனென்றுவழங்கப்படட்டும்" என்று அந்தப்புத்திரனுக்கு நாமகரணஞ்செய்தான். மகததேசாதிபதியின் அந்தக்குமாரன் நெய்யினால்ஆகுதிசெய்யப்பட்டஅக்னியைப்போல வளர்ச்சியும் பலமும் சிறந்தசக்தியுமுள்ளவனாகவளர்ந்தான். ராஜாவே! தாமரைமலர்போன்றகண்களையுடைய அந்தக்குமாரன் இவ்வாறு தாய்தந்தையர்களுக்கு ஆனந்தத்தைசசெய்துகொண்டு வளர்பிறைச்சந்திரன்போல விருத்தியடைந்து வெகுகாலத்திற்குபபின் யௌவனமடைந்தான்

---

## பத்தொன்பதாவது அத்தியாயம்.

## மந்த்ரபர்வம். (தொடர்ச்சி.)



**(சண்டகௌசிகமுனிவர் ஜராஸந்தனுக்கு வரங்கொடுத்ததையனுஸரித்து இதுவரையில்அவனைக்கொல்லவில்லையென்றுகிருஷ்ணன்சொல்லியது.)**

சிலகாலத்திற்குபபிறகு சிறந்ததவமுள்ள பகவானாகிய சண்டகௌசிகமுனிவர் (ஒருமுறை) மகததேசத்திற்குவந்தார். அவர்வரவினால் ஸந்தோஷமடைந்தபிருஹத்ரதராஜன் அமைச்சரோடும் கட்டியங்கூறுபவரோடும மனைவிகளோடும் புத்திரனோடுங்கூடப் புறப்பட்டான். பாரதரே! அவ்வரசன் அர்க்கியபாத்யாசமனீயங்கள்கொடுத்து அந்தமுனிவரைபபூஜித்து ராஜ்யத்தையும புத்திரனையும் அவருக்குஒப்புவித்தான். ராஜாவே! பகவானான அந்தரிஷி அரசன்செய்த அந்தப்பூஜையைபபெற்றுக்கொண்டு உள்ளமகிழ்ந்து பிருஹத்ரதராஜனைப்பார்த்துச் சொல்லலானார்.

"ஓ! ராஜாவே! எனக்கு ஞானக்கண்ணினால் இவையெல்லாம முன்னமேதெரியும். அரசர்க்கரசனே! இந்தபபுத்திரன் எப்படிபபட்டவனாவானென்பதைக்கேள். இவனுடைய அழகும்தைரியமும் தேகபலமும் ஸ்திரமானவை. உனது இந்தப்புத்ரன் எல்லாச்சிறப்பு

களும்சேர்ந்து உண்டாயிருக்கிறுனென்பதில் ஸந்தேகமில்லை. இவன் முன்சொல்லியவற்றையெல்லாம அடைவன். பறக்கும்கருடனுடைய கதியை, மற்றபறவைகள் எவ்வாறுஅனுஸரிக்கமாட்டாவோ அவ்வாறே சிறந்தசக்தியுள்ள இவனுடையசெய்கையை மற்றஅரசர்கள் அனுஸரிக்கமாட்டார்கள். இவனுக்கு எவர்விரோதிகளோ அவர்கள் நாசமடைவார்கள். ராஜாவே! நதிப்ரவாஹங்கள எப்படிமலைக்குத்தீங்குசெய்யமாட்டாவோ அப்படியே தேவர்களாலவிடுக்கப்பட்ட அஸ்திரங்கள்கூட இவனுக்குத்தீங்குசெய்யமாட்டா. பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்ற அரசர்களெல்லாருக்கும்மேல இவன்பிரகாசிப்பான். ஸூர்யன் மற்றக்கிரகநக்ஷத்திரமுதலியவற்றின் ஒளியைவாங்குவதுபோல மற்றெல்லா அரசர்களுடையசக்தியையும இவன்வாங்கிக்கொள்வான். சேனைகளுமவாஹனங்களும்நிரம்பப்பெற்ற அரசர்களும இவனைச் சந்தித்தபின் தீயைககிட்டினவிட்டிற்பூச்சிகளபோல நாசமடைவார்கள். வருஷாகாலத்தில் தண்ணீரபபெருக்கும்பெருநதிகளைக், கடல் இழுததுக்கொளவதுபோல இவன் எல்லா அரசர்களுடையவிபவங்களையும சேர்த்தெடுததுககொள்வான். செல்வமுள்ளதும எல்லாப்பயிர்களுமநிரம்பினதும் க்ஷேமமுள்ளதுமாகிய சிறநதபூமியையும் நான்கு வருணங்களையும் நன்ருகக்காபபாற்றபபோகிறுன். எல்லாப்பிராணிகளுக்கும ஆததுமாவைபபோன்ற பிராணவாயுவுக்குப பிராணிகள் வசப்பட்டிருபபதுபோல இவன்கட்டளைககு எல்லா அரசர்களும் வசப்பட்டிருபபர். எல்லாலோகங்களுககுமமேற்பட்ட பலசாலியான இந்த மகதராஜன், திரிபுரஸம்ஹாரஞ்செய்தவரும் பாபததைப்போக்குகிறவரும் மஹாதேவருமான சிவபெருமானைபபிரத்தியக்ஷத்திற்காண்பான்" என்ருர்.

சத்ருருககளையழிபபவரானதர்மராஜாவே! அமமுனிவர் இவ்வாறுபேசிக்கொண்டிருக்கையிலேயே தாமசொநதக்காரியததை (தவத்தை) நினைத்து பிருஹத்ரதராஜாவுக்கு விடைகொடுத்தனுபபிவிட்டார். பிறகு பிருஹத்ரதன் பநதுக்களாலும சிநேகிதர்களாலும சூழப்பட்டவனுகி ஜராஸநதனுக்கு நகரப்ரவேசஞ்செய்வித்துப் பட்டாபிஷேகஞ்செய்து மிகுந்தஸந்தோஷததையடைநதான். ஜராஸநதனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்தானவுடனே பிருஹத்ரதராஜா இரண்டுமனைவிகளாலும்பின்தொடரபபெற்றுத் தபோவனஞ்சென்றுன். பாரதரே! தன்தாய்மார்களுடன்கூடத் தகப்பன் வனத்திலிருக்கையில் ஜராஸந்தன் தன்பராக்ரமத்திஞல் அரசர்களை வசப்படுத்தினுன். பிறகு வெகுகாலத்திற்குப்பின் தபோவனத்திலிருநத பிருஹத்ரதராஜன்

பாரியைகளுடன்கூடத் தவஞ்செய்து ஸ்வர்க்கமடைந்தான். ராஜாவானஜராஸந்தனும் சண்டகௌசிகர்கொடுத்த வரங்களையெல்லாம் அவர்சொன்னவாறேபெற்று ராஜ்யபரிபாலனமுஞ்செய்தான். நான் முன்னே கம்ஸனையும் ஹம்ஸடிம்பகர்களையும் வதஞ்செய்தபோது ஜராஸந்தனுடையபெண்கள் தம்தந்தையினருகிற்சென்று அழுது கொண்டிருந்தனா. பாரதரே! அப்போது அவனுக்கு என்னுடன் நீங்காதவிரோதமுண்டாயிற்று. பாரதரே! அந்தப்பலவானானஜராஸந்தன் கதாயுதத்தைத் தொண்ணூற்றொன்பது சுற்றுக்கள் சுற்றிக் கிரிவ்ரஜத்திலிருந்து எறிந்தான். நான் மதுரையிலிருக்கையில் யாவரும்வியக்கத்தக்க ஜராஸந்தனுடைய அந்தச்சிறந்தகதாயுதம் தொண்ணூற்றொன்பதுயோஜனைதூரத்தில்வந்துவிழுந்தது. அப்போது மதுராபுரத்துஜனங்கள் அந்தக்கதாயுதத்தைநன்றாகப்பார்த்து எனக்குத் தெரிவித்தனர். மதுரையின் ஸமீபத்திலுள்ள அந்தஇடத்துக்கு, [1] கதாவஸானம் என்றுபெயர்வழங்குகிறது. அஸ்த்ரங்களினால்மரணமில்லாதவர்களும் புத்திமான்களிற்சிறந்தவர்களும் ராஜநீதிசாஸ்திரத்தில் தேர்ந்தவர்களுமான ஹம்ஸடிம்பகர்கள் அவனுக்குமந்திரிகளாயிருந்தனர். அந்தமஹாபலசாலிகளிருவரையும்பற்றி முன்னமே உமக்குச்சொல்லியிருக்கிறேன். ஜராஸந்தனும ஹம்ஸடிம்பகர்களுமாகிய அம்மூவர்களும் மூன்றுஉலகங்களுக்கும் போதுமானவர்களென்பது என்அபிப்பிராயம். வீரரானமஹாராஜாவே! பலசாலிகளான குகுரர்களும் அந்தகர்களும் வ்ருஷ்ணிகளும் இவ்வாறு ரிஷியின்வரதானத்தைமாற்றத்தகாதென்பதாகிய நீதிகாரணமாகத்தான் முன்னே ஜராஸந்தனைவிட்டுவிட்டனர்.

மந்த்ரபர்வம் முற்றிற்று.

இருபதாவது அத்தியாயம்.

## ஜராஸந்தவதபர்வம்.

—❊❊❊—

**(கிருஷ்ணனும், பீமார்ஜுனர்களும் தர்மராஜாவினிடம் விடைபெற்றுக்கொண்டு ஸ்நாதகப்பிராமண வேஷம்பூண்டு மகதராஜதானிக்குச்சென்றது.)**

ஹம்ஸடிம்பகர்களிருவரும் விழுந்துபோயினர். கம்ஸனும் அவன் கூட்டத்தாருடன் கொல்லப்பட்டான். ஜராஸந்தனைக்கொல்வதற்கு

[1] கதாயுதத்தின்முடிவு.

இது தருணம் நேர்ந்திருக்கிறது. தேவாஸுரர்கள் யாவருஞ்சேர்ந்தாலும் அவனை யுத்தத்தில் வெல்லமுடியாது. தேகபலத்தைப்பற்றிய யுத்தத்தினாலேதான் அவனை ஜயிக்கவேண்டுமென்று நினைக்கிறோம். என்னிடத்தில் உபாயமிருக்கிறது. பீமனிடத்தில் பலமிருக்கிறது. எங்களிருவரையுங் காப்பவனாக அர்ஜுனனிருக்கிறான். நாங்கள் மூவரும் மூன்று அக்னிகள் யாகத்தை முடிப்பதுபோல ஜராஸந்தனை முடித்துவிடுவோம். ஸஹாயமில்லாத ஸமயத்தில் எங்கள் மூவராலும் பிடிக்கப்பட்ட அவ்வரசன் ஒருவனோடாயினும் யுத்தஞ்செய்வானென்பதில் ஸந்தேஹமில்லை. அவமானந்தாங்காமையாலும் ஜயிக்கும் ஆசையினாலும் கைவன்மையினாலும் கர்வித்து எங்களில் பீமஸேனனோடு அவசியம் யுத்தத்துக்கு வருவானென்பது நிச்சயம். விருத்தியடைந்த உலகங்களையழிப்பதற்கு யமனெப்படியோ அப்படியே அவனையழிப்பதற்குச் சிறந்த கைகளையுடையவனும் மஹாபலசாலியுமான பீமஸேனன் போதுமானவன். பீமனுடைய பலமும் உமக்குத் தெரிந்தது. என்னிடத்தில் உமக்கு நம்பிக்கையுமிருக்குமாயின் உடனே பீமஸேனனையும் அர்ஜுனனையும் என்னிடம் அடைக்கலமாக ஒப்புவியும்" என்றார். இவ்வாறு பகவானாற் சொல்லப்பட்ட யுதிஷ்டிரர், பீமார்ஜுனர்கள் முகமலர்ச்சியோடிருக்கக்கண்டு கிருஷ்ணபகவானுக்கு மறுமொழி கூறலானார்.

"அச்சுதரே! அச்சுதரே! பகைவரையழிப்பவரே! நீர் இவ்வாறு சொல்லாதீர்; சொல்லாதீர். பாண்டவர்களுக்கு நீர்தாம் நாதர். உம்மையே! நாங்கள் அடுத்திருக்கிறோம். கோவிந்தா! நீர்சொல்லுகிறபடியே எல்லாம் பொருத்தமுள்ளது. கிருஷ்ணா! எவர்களுக்கு லக்ஷ்மி முகங்கொடாமலிருப்பளோ அவர்களுக்கு நீர்முன்னிற்பதில்லை. எவர்களுக்கு லக்ஷ்மிமுகங்கொடுப்பாளோ அவர்களுக்கே நீர்முன்னிற்பவர். உமது கட்டளைப்படியிருக்கும் எனக்கு ஜராஸந்தவதமும் அவனிடத்திலிருந்து அரசர்களைவிடுவிப்பதும் ராஜஸூயயாகத்தைமுடிப்பதும் நடந்தவைபோலவே ஆயின. ஜகத்துக்கு நாதரே, புருஷோத்தமரே! எவ்வகையில் இந்தக்காரியம் சீக்கிரமாகக்கூடிவருமோ அவ்வகையை ஜாக்கிரதையாகச்செய்வீர். நான் உங்கள் மூவரையும் விட்டு தர்மார்த்தகாமங்களையிழந்த ரோகியைப்போலத் துக்கத்துடன் ஜீவிக்கக்கருதேன். அர்ஜுனன் கிருஷ்ணனை விட்டிரான். கிருஷ்ணனும் அர்ஜுனனைவிட்டிரார். இவ்விரண்டு கிருஷ்ணர்களாலும் ஜயிக்கப்படத்தக்கவன் உலகத்திலில்லையென்று நான் நினைக்கிறேன். வீரரே! பலவான்களிற்சிறந்தவனும் ஜயலக்ஷ்மி

பொருந்தினவனும் பெரும்புகழ்பெற்றவனுமாகிய இந்தவ்ருகோதான் உங்களிருவருடனுமசேர்நது எதைத்தான்செய்யான். பெருஞ்சேனையும் நன்ருகநடத்தபபட்டுத்தானே சிறநதகாரியத்தைச்செய்யும்; ஸேனை கண்ணில்லாதகென்றும அறிவில்லாதகென்றும் தெரிந்தவர்களால் நடத்தப்படவேண்டுமென்றும சொல்லுகிறூர்களன்றோ! புத்தியிற்சிறநதவர்கள் எங்கே பள்ளமிருக்கிறதோ அங்கேயன்றோ ஜலத்தைப்போக்குகின்றனர். எவ்விடத்தில் துவாரமிருக்கின்றதோ அந்த வழியாகவும் ஜலத்தைப்போக்குகின்றனர். ஆதலால், ராஜ்யதநதிரங்களின்முறையை நடத்ததகெரிநதவரென்று உலகத்தில் பெயர்பெற்ற புருஷனுகிய கோவிநதனை(உம்மை)ச்சார்நது நாம காரியததை ஸாதிக்க முயல்வோம கிருஷ்ணு! காரியங்கள்செய்யுமபோது எடுத்தகாரியத்தின் பயனைபபெறுவதறகாகச் செய்கையோடும் உபாயத்தோடுங் கூடிய புத்திபலத்தையும் யுகதிபலத்தையும் இவ்வாறு முன்னிட்டுக்கொள்ளவேண்டும். யாதவசிரேஷ்டரே! இவ்வாருகவே செய்யத்தக்க காரியங்களெல்லாவறறையும முடிபபதற்கு அர்ஜுனன் கிருஷ்ணனையனுஸரித்தும பீமன் அர்ஜுனனையனுஸரிததும் இருககக்கடவர். நீதியும் ஜயிககிறசக்தியும தேகவன்மையுமசேர்ந்தால் தானே "யுத்தத்தில் பயனைத்தரும" என்ருர். பெருஞ்சக்தியுள்ளவர்களான கிருஷ்ணுர்ஜுன பீமர்களாகிய பிராதாக்கள் அனைவரும் தர்மபுத்ரரால் இவவாறுசொல்லபபட்டபிறகு ஜராஸநதனைநோக்கிப புறப்பட்டனர் கிருஷ்ணபீமார்ஜுனர்கள உயர்நத பிரம்மதேஜஸுள்ள [1]ஸ்நாதகபபிராமணர்களின் உடைகளையுடுத்துத தவவேஷநதரிநது நண்பர்களின்இன்சொறகளிஞல ஆசீரவதிக்கபபெற்றவர்களாய்ப புறபபட்டனர். தங்கள்குலததோரான க்ஷத்திரியாகளடைநதிருக்கிற துயரததைபபற்றிய கோபததிஞல கொதிபபுற்றவர்களும் ஸூர்யன் சந்திரன் அக்னி இமமூவரைபபோலச் சிறநதசக்தியுள்ளவர்களுமாகிய அவர்களின்தேகங்கள் அபபோது ஸூர்யசநதிராககினிகள்போல ஜ்வலித்தன. யுத்தத்தில்தோல்வியடையாத கிருஷ்ணுர்ஜுனர்கள் பீமனைமுன்னிட்டுக்கொண்டு ஒருகாரியத்தில் முயல்வதைக்கண்டு 'ஜராஸநதன் கொலலபபட்டதாகவே தர்மராஜாநினைத்தார். அவவிரண்டுமஹாதமாககளும் எலலாக்காரியங்களையுமநடத்து

---

[1] பிரம்மசாரிவிரதம் முடித்துக் குருவிஞல் விடைகொடுக்கப்பெற்றபிறகும் கிருஹஸ்தாச்ரமம எடுத்துககொள்வதறகு முன்னும் ஸ்நாதகர்ஆவார். அவர்களுககு ராஜாவுக்குமேற்பட்ட மரியாதைசெய்யும்படி தர்மசாஸ்திரம் விதிக்கிறது.

கிறவரும் தர்மார்த்தகாமங்களையும் உலகங்களையும் பிரவிர்த்திக்கச் செய்பவருமான ஈசுவரர்களன்றோ? அந்தக்கிருஷ்ணார்ஜுனபீமர்கள் புறப்பட்டுக் குருக்ஷேத்திரத்திலிருந்து குருஜாங்கலமென்னும் இடத்தின்வழியால் அழகான பத்மஸரஸுக்குச்சென்று காலகூடமலையையும் ஏகபர்வதத்திலுள்ள கண்டகிநதியையும மஹாசோணமென்னும்நதத்தையும் ஸதாநீரையென்னுமநதியையும முறையேதாண்டிச் சென்றனர். அழகான ஸரயூநதியைததாண்டிக் கோஸலதேசததின் கீழ்ப்பாகங்களைக்கண்டு அவற்றைததாண்டி மிதிலைக்குச்சென்றனா. மாலை, சர்மண்வதி, கங்கை, சோணமஎன்னும ஆறுகளையும்தாண்டி அம்மூவரும கிழக்குநோக்கிசசென்றனர். தோலவியடையாதவர்களாகிய அவாகள் தாபஸைகளையும மரவுரிகளையும தரிததுக்கொண்டு ஜராஸநதனிடமசென்றனா. அவாகள இடததுககிடம்[1] கோதனங்கள்நிரமபியிருபபதும நீர்வளமுள்ளதும அழகியமரங்களுள்ளதுமான கோரதமென்னும மலையைச்சேர்ந்து மகததேசத்து ராஜதானியைக் கண்டனர்

---

இருபத்தோராவது அத்தியாயம.

ஜராஸந்தவதபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணபீமார்ஜுனர்கள் ஜராஸந்தன்வீடடுக்குச்சென்று அவனிடம்பேசியது.)

அப்போது கிருஷ்ணன் அர்ஜுனனுக்குச்சொல்லுகிறார். "அர்ஜுனா! இந்தமகததேசததின்பெரியநகரம பசுக்கள்நிரமபவுள்ளதும எப்போதுமநீர்வளமுள்ளதும அழகானவீடுகள்நிரம்பினதும் ரோகங்களில்லாததுமாய் விளங்குகிறது கிளைகளின் நுனிகள் புஷ்பங்களினாலமறைக்கப்பட்டு இனியமணமுள்ளவையும் மனததைக்கவருகின்றவையும யௌவனபிராயததிலிருப்பவா விரும்பத்தக்கவையுமான லோததிரமென்னுமமரககாடுகளினால மறைககபபட்டனவும உயர்நதகொடுமுடிகளுமகுளிர்நதமரங்களுமுள்ளனவுமான விளையாட்டிற்குரியவிபுலமலை, வாராகமலை, விருஷபமலை, ரிஷிமலை, சைத்யகம என்னும் இவ்வைந்து அழகியமலைகள ஒன்றுசேர்ந்து கிரிவ்ராஜமென்னும்ஊரைக்காப்பவைபோலிருக்கின்றன. இவ்விடத்தில் மஹாத்மாவும் கடுந்தவமுள்ளவரும் ஐம்புலன்களையுமமிகவுமஅடக்கியவரும்

[1] பசுக்கள.

கோதமகோத்திரத்திற் பிறந்தவருமான [1]தீர்க்கதமஸ்என்னும் ரிஷி உசீநரன்புத்திரியும் மகதராஜன்மனைவியுமான ஸுதேஷ்ணையினிடமும் அவள்தாஸியினிடமும் கக்ஷீவான்முதலியபுத்திரர்களை உண்டுபண்ணினர். அந்தமுனிவர் அந்தஸ்நேஹத்தினால் அந்தக்கிருஹத்திலிருந்துகொண்டு மகதராஜர்களின்வம்சத்தைவிருத்திசெய்தது அந்தராஜாக்களுக்கு அவர்செய்யும்அருள்தான். அர்ஜுனா! முற்காலத்தில் மிகச்சிறந்தபலசாலிகளாயிருந்த அங்கர்வங்கர்முதலியராஜாக்களும் கௌதமராகியதீர்க்கதமஸ் இருக்குமிடத்துக்குவந்து மகிழ்ந்திருந்தனர். பார்த்தனே! கௌதமருடையகிருஹத்துக்குஅருகில் உண்டாயிருக்கும், அரசமரங்களும லோத்திரமரங்களும் செழுமையாகவும் அழகாகவும்வரிசையாகவுமிருக்கின்ற இந்தக்காடுகளைப்பார். சத்துருக்களுக்குத் தாபமுண்டுபண்ணுபவர்களாகிய அர்ப்புதன் சக்ரவாபிஎன்னும் இரண்டு [2]நாகர்கள் இங்கிருக்கின்றனர். ஸ்வஸ்திகன் மணிநாகன் இவ்விரண்டுநாகர்களுடைய சிறந்தகிருஹங்களும் இங்கிருக்கின்றன். மேகங்கள் மகததேசத்தைவிட்டுப்போகாமலிருக்கும்படி மனுவேசெய்திருக்கிறார். கௌசிகன் மணிமான்என்னும் நாகர்களிருவரும [3]அனுக்ரஹஞ்செய்திருக்கின்றனர். [4]பாண்டரம், விபுலம், வராகம், சைத்யகம், மாதங்கம்என்னும் இவ்வைந்துசிறந்த பர்வதங்களிலும் ஸகலஸித்தர்களின்கிருஹங்களும மஹாத்மாக்களானஸந்யாஸிகள் ரிஷிகள்இவர்களின்ஆச்ரமங்களும் விருஷபன், தமாலன், மஹாவீர்யன்என்னும நாகர்களுடையகிருஹங்களும கந்தர்வர்கள் ராக்ஷஸர்களின்வீடுகளும் இருக்கின்றன. கக்ஷீவானென்னும்முனியின்தவப்பெருமையினால [5]தபோதங்கள்என்றுபெயர்பெற்ற புண்ணியதீர்த்தங்கள்இருக்கின்றன. அவையெல்லாம் ஸித்ததீர்த்தங்களெனவும் சொல்லப்படுகின்றன. மணிமானென்னும நாகனைக் கண்டமாத்திரத்தினாலேயே மனிதன்க்ஷேமத்தையும் ஸுகத்தையும அடைவான். இப்படி நாற்புறங்களிலும வெல்லமுடியாத அழகியநகரத்தையடைந்துதான் ஜராஸந்தன் ஒப்பற்றகாரியஸித்தியைநினைக்கிறான். நாம் இப்போது ஸமீபத்தில்போய் அவன்கர்வத்தைப்போக்கிவிடுவோம்" என்றுசொன்னர்.

---

[1] இக்கதையின்விரிவை ஆதிபர்வம் 418-ம் பக்கத்தில்காண்க.

[2] நாகர்கள்புருஷரூபியாயிருப்பவர்கள்.

[3] காப்பாற்றுகின்றனர்.

[4] விருஷபமலை ரிஷிமலை என்றவை பாண்டரம் மாதங்கம்என்றுகூறப்பட்டிருக்கின்றன.

[5] தவத்தைக்கொடுப்பவை.

இவ்வாறு கிருஷ்ணன்சொன்னபிறகு, கிருஷ்ணனும் பாண்டவர்களுமாகிய பெருஞ்சக்தியுள்ள பிராதாக்களனைவரும் ஜராஸந்தனுடையநகரத்துக்குச் சென்றனர். மகிழ்ச்சியும் செல்வமுமுள்ள ஜனங்கள்நிரம்பினதும் நால்வருணத்தாருமநிறைந்திருப்பதும உத்ஸவச்சிறப்புக்களுள்ளதும் வெல்லமுடியாததுமான கிரிவ்ராஜத்தைச்சேர்ந்தனர். அப்போது அந்நகரத்தின்வாயிலவழியேசெல்லாமல் பிருஹத்ரதன்வமசத்தாராலும் நகரத்துஜனங்களாலும் பூஜிக்கப்படுவதும் மகததேசத்திற்கு அலங்காரமாயிருப்பதுமான உயர்ந்தகுன்றாகிய சைத்யகத்தின்சநதுவழியாகச் சென்றனர். அந்தஇடத்திலேதான் பிருஹத்ரதராஜன், மாம்ஸத்தைத்தின்னும விருஷபரூபமாகவந்த அஸுரனைப பிடித்துக்கொன்று ஒருமாதம்வரையில் நாதமகாக்கின்ற மூன்றுபேரிகைகளைச் செய்வித்து அவன்தோலினால் அவற்றைக்கட்டித் தன்நகரத்திலஸ்தாபித்திருந்தான். அந்தப்பேரிகைகள் எங்கே முழங்கினவோ அங்கே தேவர்களால் மலர்மாரிபொழியப்பட்டது. அந்தக்கிருஷ்ணார்ஜுனபீமர்கள் அம்மூன்றுபேரிகைகளையும் உடைத்து அந்தஊருக்குமதிலாயிருக்கும சைத்யகமலையினிடம்செல்லத் தொடங்கினர். அப்போது அவர்களனைவரும கோட்டைவாயிலைவிட்டு மகததேசத்திற்கு மிக்கஅலங்காரமான அந்தச்சைத்யகமலையைநோக்கி விரைவாகநெருங்கிச்சென்றனர். ஜராஸந்தனைக்கொல்லக்கருதின அந்தவீரர்கள் நெடுங்காலமாக அழியாமலிருப்பதும் மிக்கஅகலமும உயரமுமுள்ளதும சந்தனங்களாலும புஷ்பங்களாலும் எப்போதும் பூஜிக்கப்பட்டதும திடமாகநிலைபெற்றிருப்பதுமாகிய அம்மலைச்சிகரத்தைப் பெரியகைகளினாலேயே அவன்தலையையுடைப்பதுபோல உடைத்துவீழ்த்தினர். அதன்பிறகு, அவர்கள் உத்ஸாஹத்துடன் அந்நகரத்துக்குள் பிரவேசித்தனர். வேதங்களிலக்கரைகண்டவரான பிராமணர்கள் அநேககாலத்தில அபசகுனங்களைக்கண்டு ஜராஸந்தனுக்குத் தெரிவித்தனர். புரோஹிதர்கள் யானைமேலிருந்தராஜாவுக்குத தீபஹாரத்திசுழற்றினர். பராக்ரமசாலியான ஜராஸந்தராஜா அப்போது அந்தத்தோஷங்களுக்குச் சாந்திசெய்வதற்காகத் தீக்ஷையெடுத்துக்கொண்டு விரதத்தையும உபவாஸத்தையுமநடத்தினான். ஜனமேஜயரே! ஸ்நாதகவிரதமஎடுத்துக்கொண்ட கிருஷ்ணனும அர்ஜுனனும பீமனும் ஆயுதங்களைவிட்டுக் கைகளையே ஆயுதங்களாகக்கொண்டு ஜராஸந்தனிடம யுத்தஞ்செய்யக்கருதினவர்களாய் (நகரத்தில்) பிரவேசித்தனர். எல்லாக்குணங்களுமுள்ளதும் வேண்டியவெல்லாம் நிரம்பினதும விலைபெற்றதுமாயுள்ள பக்ஷணக்கடை பூக்

கடைகளின் மிகுந்த சிறப்பைக்கண்டனர். புருஷோத்தமர்களும் மஹாபலசாலிகளும் மஹாரதர்களுமான அந்தக் கிருஷ்ணார்ஜுன பீமர்கள் ராஜமார்க்கமாகப் போய்க்கொண்டே அந்தவீதியிலுள்ள அந்தச்சிறப்பைக்கண்டு புஷ்பக்காரனிடமிருந்து புஷ்பமாலைகளையும் கடையிலுளிருக்கும் வர்த்தகனிடமிருந்து கர்பூரச்சிமிழையும் கோஷ்டத்தையும் கனிகளையும் பலவந்தமாகவெடுத்துப் பூமாலைகளையணிந்து வெண்மையானவஸ்திரங்களையும் பிரகாசமான குண்டலங்களையுந் தரித்து, இமயமலையிலுள்ளசிங்கங்கள மாட்டுத்தொழுவத்தைப் பார்ப்பதுபோலப் புத்திமானான ஜராஸந்தன்வீட்டைப் பார்த்துக்கொண்டே சென்றனர். ஜனமேஜயராஜாவே! யுத்தத்திலபிரகாசிப்பவர்களான அவர்களுடைய ஆச்சாமரங்களைப்போன்றகைகள் சாந்தையும அகிலையுமணிந்து அழகாகவிளங்கின. ஆனைகளைப்போன்றவர்களும் பெருமரங்களின்தண்டுகள்போல் வளர்ந்தவர்களும அகன்றமார்புகளையுடையவர்களுமான அவர்களைக்கண்டு மகததேசத்தவர்கள்வியப்புற்றனர். அவர்கள், வாயிலவழியைவிட்டு மறிகுதித்து ஜராஸந்தன்வீட்டிற்புகுந்தனர். புருஷசரேஷ்டர்களான அவர்கள் ஜனங்கள்நிரம்பின மூன்றுகட்டுக்களைததாண்டி அச்சமின்றித் தாம்உயர்குலத்தோரென்னுமகர்வத்தோடு ராஜாவினிடமசென்றனர். மஹாரதர்களான அவர்கள், 'ஓ!' என்னுமசொல்லின்மேலேயே ராஜாவையழைத்தனர். அர்க்கியபாத்தியங்களையும [1]மதுபாக்கமென்னும்சிறறுணவோடு [2]பசுவையும்கொடுத்து உபசரிக்கத்தகுதியுள்ளவர்களும விசேஷமரியாதைபெறறிருப்பவர்களுமான அவர்களை ஜராஸந்தன் எதிர்கொண்டழைத்துச் சாஸ்திரப்படி பூஜித்தான். ஸமர்த்தனான அவ்வரசன் அவர்களைப்பார்த்து, 'உங்களுக்குநலவரவுஉண்டாகட்டும்' என்றுசொன்னான். ஜனமேஜயரே! அப்போது அர்ஜுனனும் பீமனும மௌனமாகஇருந்தனர். அவர்களுக்குள் சிறந்தபுத்திசாலியானகிருஷ்ணன் ஜராஸந்தனைப்பார்த்து, "அரசர்க்கரசே! இவர்களிருவரும் இப்போது ஒருவிரதம்வஹித்திருப்பதனால நடுஇரவுக்குமுன் பேசலாகாது அதன்பிறகு உன்னுடன்பேசுவார்கள்" என்றுசொன்னார். ஜராஸந்தன் அவர்களைத் தன்யாகசாலையில்இருக்கச்செய்து தன் அரண்

[1] மதுபர்க்கமென்பது ஜலம் ஸ்வல்பமும், தயிர் நெய் சர்க்கரைஸமனும் தேன்எல்லாவற்றிலும் அதிகமுமாகச்சேர்த்துச்செய்யப்பட்டது.

[2] யோக்கியர்களான வேதவித்துக்கள் வந்தபோது கனறையாவது பெரியவிருஷபத்தையாவது ஆட்டுக்கிடாயையாவது மதுபர்க்கத்தோடு கொடுக்கவேண்டுமென்று ஆபஸ்தம்பர்சொல்லுகிறார்.

மனைக்குச்சென்றான். பிறகு அர்த்தராத்திரிகாலம்வந்தபோது அந்தப்பிராம்மணர்களிருக்குமிடத்திற்குச் சென்றான். ஜனமேஜயராஜாவே! யுத்தங்களில்ஜயிப்பவனான அந்தஜராஸந்தன், ஸ்நாதகர்களான பிராம்மணர்கள்வந்திருப்பதாக அர்த்தராத்திரிவேளையிற்கேட்டாலும் அவர்களையெதிர்கொண்டழைப்பதை விரதமாகவைத்திருந்தானென்பது உலகப்பிரஸித்தம். அந்தராஜச்ரேஷ்டனானஜராஸந்தன் அவர்கள் அற்புதமான வேஷத்தோடிருப்பதைக்கண்டு மரியாதைசெய்து திகைத்துநின்றான். பரதச்ரேஷ்டரும் ராஜச்ரேஷ்டருமான ஜனமேஜயரே! சத்துருக்களையழிப்பவரான அந்தப்புருஷச்ரேஷ்டர்களெல்லாரும் ஜராஸந்தராஜாவைக்கண்டவுடன், "ராஜாவே! மங்களமுண்டாகட்டும்; க்ஷேமமுண்டாகட்டும்" என்றுசொல்லி அவ்வாசனைப்பார்த்தும் தம்மில் ஒருவரையொருவர்பார்த்தும் அங்கேநின்றனர். ஜனமேஜயரே! ஜராஸந்தன் அவ்வாறு பிராம்மணவேஷத்தால் மறைந்திருக்கும் அந்தப்பாண்டவர்களையும் கிருஷ்ணனையும்பார்த்து, "உட்காரலாம்" என்றுசொன்னான். உடனே அம்மூன்றுபுருஷச்ரேஷ்டர்களும் மஹாயாகத்தின் மூன்றுஅக்னிகளைப்போல ஒளியினால் மிகப்பிரகாசித்துக்கொண்டு உட்கார்ந்தனர். ஜனமேஜயரே! ஸத்தியந்தவறாதவனான ஜராஸந்தன், தகாதஅலங்காரங்களைச்செய்து வேஷமெடுத்துக்கொண்டதனால் உருமாறியிருந்த அவர்களையிகழ்ந்து பேசலானான். "இம்மானிடலோகத்தில் ஸ்நாதகவிரதம் வஹித்திருக்கும் பிராம்மணர்கள் வெளிப்படையாகப் பூமாலைசூடிச் சாந்தணிந்திராரென்று எனக்குநன்றாகத்தெரியும். நீங்களியாவர்? பூமாலைகளையணிந்தும் கைகளில் நாண்உரைந்த காய்ப்புக்களினால் க்ஷத்திரியசக்தியின் குறிப்புக்களைத்தாங்கியுமிருக்கிறீர்கள்; பிராம்மணர்களென்று சொல்லுகிறீர்கள். இவ்வுலகத்தில் இவ்வாறு வெள்ளாடையுடுத்து வெளிப்படையாகப் புஷ்பசந்தனங்களைத்தரித்திருப்பவர்கள் க்ஷத்திரியர்கள்தாமென்று எனக்குச் செவ்வையாகத்தெரியும். நீங்கள்யார்? உண்மையைச்சொல்லுங்கள்; ராஜாக்களிடத்தில் உண்மைதான் மேன்மையாகும்; ராஜாபராதத்தில் அச்சமின்றிச் சைத்யகமலையின்சிகரத்தையுடைத்து வாயிலைவிட்டு வேறுவழியால் இந்தவீட்டில் ஏன்நுழைந்தீர்கள்? மேலும் பிராம்மணருக்குச் சொல்லின்வன்மையதிகம்; உங்களுடையஇந்தச்செய்கை உங்கள்வேஷத்துக்கு மாறாயிருக்கிறது. இப்போது உங்களெண்ணமியாது? சொல்லுங்கள்; இவ்வாறு என்னிடம்வந்தும் சாஸ்திரப்படி நான்செய்தமரியாதையை நீங்களேன் பெற்றுக்கொள்ளவில்லை? என்னிடம்வந்தகாரியந்தான் யாது?" என்

ருன். அவன் இவ்வாறுசொல்ல, சிறந்தஅபிப்பிராயமுள்ளவரும் பேசுவதில்ஸமர்த்தருமான கிருஷ்ணன் மதுரமும் கம்பீரமுமான மறுமொழிகூறலானார்.

"ராஜாவே! மனிதர்களுக்குப பிரபுவே! நீ, எங்களை [1]ஸ்நாதகபபிராமணர்களென்றே அறி. ராஜாவே! ஸ்நாதகவிரதமுளளவர்கள் பிராமணராகவும் க்ஷத்திரியராகவும வைசியராகவும இருக்கலாம். இவர்கள் ஒவ்வொருவருக்குபயாருக்கும் சிறபபான நியமங்களும யாவருக்கும்பொதுவான நியமயங்களுமுண்டு. சிறபபானநியமமுள்ள க்ஷத்திரியன்தான் எப்போதுமஐசுவரியததையடைவான். புஷ்பங்கள்தரிதத வரிடத்தில் லக்ஷமி ஸ்திரமாயிருக்கிருள். அதனுல நாங்கள புஷ்பங்களைத்தரிததிருககிறோம. க்ஷததிரியன் கைவன்மையுள்ளவன்தான்; சொல்வன்மையுளளவனுகான். பிருஹதரதபுதரனே! ஆதலால், க்ஷதரியன்வாக்குக் கமபீரமாயிராதென்று சொல்லபபடுகிறது. பிரம்மதேவா தமதுசக்தியை க்ஷததிரியர்களின்கைகளிலவைததிருக்கிருர். ராஜாவே! அதை நீபாரககவிருமபுகிருயாயின் இபபோதே பார்ககலாம; ஸநதேஹமில்லை. தைரியமுளளபுருஷாகள் சத்துருவின்வீட்டில் வாயிலல்லாவழியாலும மிததிரர்களவீட்டிலநோவழியாலும பிரவேசிக்கின்றனர். அநதத்தாமபபடி இவையெலலாம் வழிகள்தாம. நாங்கள் காரியததோடு சத்துருவின்வீட்டிறகுவநது அவனிடம அதிதிபூஜையைபபெறறுககொளளமாட்டோம. இஃது எங்கள்உறுதியானவிரதமென்று நீயறி" என்ருர்.

---

## இருபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஜராஸந்தவதபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணனுக்கும் ஜராஸந்தனுக்கும் ஸம்பாஷணம்நடந்தபிறது ஜராஸந்தன் யுத்தத்துக்கு ஆரம்பம்செயதது.)

ஜராஸநதன், "ஓ! பிராமமணர்களே! உங்களோடு நான்விரோதஞ்செய்துகொண்டது எபபொழுதென்று எனக்கு நினைவிலலை. ஆராய்ந்துபார்த்தும உங்களுககு நான்தீங்குசெய்ததாக எனக்குத தெரியவில்லை. தீங்குசெய்திருநதால என்னைக் [2]குற்றமில்லாதவனுக

---

[1] மூலத்தில, 'ஸ்நாதகப்பிராம்மணர்களையும் எஙகளையும் நீபகுத்தறி' என்றகருத்தும்அடங்கியிருக்கிறது.

[2] ஆசீர்வாதம்செய்ததனுல் குற்றமில்லாதவனுகநினைத்ததாகிறது.

நீங்கள்நினைப்பதெவ்வாறு? [1]சத்துருவென்றே சொல்லுங்கள். [2]இது தானே சான்றோர்ஒழுக்கம். அர்த்தத்தையும தர்மத்தையும்கெடுப்பதனாலன்றோ மனமகொதிப்பது. தாமநதெரிநதவனும மஹாரதனுமாயிருக்கும க்ஷத்ரியன் இதற்குமாறாகநடநது குறறமில்லாதவனிடத்தில் குற்றத்தைஏறபடுத்துவானாயின், அவன் தனதுபுண்ணியலோகங்களைக்கெடுத்துக்கொண்டு பாவகதியையடைகிறான். ஸநதேஹமிலலை. ஒழுங்காகநடபபவர்களுககு க்ஷததிரியதாமநதான் மூன்றுலோகங்களிலும் சிலாக்கியமானது. தாமநதெரிநதயாவரும (க்ஷததிரியதர்மந் தவிர) மறறததர்மத்தைச்சிலாகிப்பதில்லை அப்படியே மனவுறுதியோடு என்க்ஷததிரியதர்மத்திலிருநதுகொண்டு பிரஜைகளுக்குத்தீங்குசெய்யாமலிருககும என்னைபபழிறறி நீங்கள (பேசல்) தவறுதலாகப் பிதறுவதுபோலிருக்கிறது" என்றுசொல்ல, கிருஷ்ணன்சொல்லலானார். "சிறநதகைகளையுடையவனே! குலததைத்தாங்குகிறவனாகிய ஓர் ஒப்பறறமனிதன் தன்குலத்தோரின்காரியத்தைத தானெடுத்துக்கொண்டிருக்கிறான். அவனுடையகட்டளையினால நாம உன்னையெதிர்ததுவநதிருககிறோம. ராஜாவே! இநதஉலகததிலுளளக்ஷததிரியர்களை நீபலியாக்ககொண்டுவநதிருக்கிறாய். அநதக்கொடியகுறறத்தையுண்டாககியபின் நீகுறறமிலலாதவனாகநினைததுக்கொள்வது எப்படி? ராஜசரேஷ்டனே! ராஜாவாயிருப்பவன் ஸாதுக்களானராஜாக்களைத் துன்பஞ்செய்யலாமா? நீ அநதராஜாக்களைபபிடித்து ருத்திரபகவானுக்குப்பலியாகக்கொடுக்க நினைததிருககிறாய். பிருஹத்ரதபுத்திரனே! உன்னாறசெய்யபபடட அநதப்பாவம் எங்களையும் சேரும். ஏனெனில, நாங்கள தர்மததைச்செயபவாகள. தாமததைரக்ஷிப்பதில் சக்தியுளளவாகள. பிருஹதரதபுததிரனே! அதறகாக இபபோது உன்னிடமவநதிருக்கிறோம. மனிதர்களைக்கொன்று யாகம் செய்வதை ஒருகாலும கண்டதில்லை. அவ்வாறிருக்க நீ மனிதாகளைத் தேவரானசங்காருக்குப் பலிகொடுககநினைபபதெபபடி? ஜராஸநதா! பயன்படாதஅறிவுளள நீசெய்வதுபோல வேறெவன் ஒரேகுலததிற்பிறநது தன்குலத்தோருக்கே பசுக்களென்றுபெயரிடுவான்? எவனெவன் எந்தெந்தககாலத்தில என்னென்னகர்மத்தைச்செய்கிறானோ அவனவன் அதனதன் பயனை அநதநதக்காலததிலேயே அடைவான். ஆதலால், துககபபடடவரிடததில் பரிதாபமுளளநாங்கள்

---

[1] சத்துருவானஎன்னைக் குற்றமற்றவனாக நினைப்பதெவ்வாறு? அதைச் சொல்லுஙகளென்பதுபழையஉரை.

[2] ஸத்தியம்சொல்வது.

குலத்தோர்விருத்தியின்நிமித்தமாகவே குலத்தோரைநாசஞ்செய்கிற உன்னைக்கொல்ல இங்கேவந்தோம். ராஜாவே! இவ்வுலகத்தில் க்ஷத்திரியர்களுக்குள் வேறுஆண்பிள்ளையில்லையென்று நீநினைத்துக்கொண்டிருக்கிறாயே, அஃது உன்னுடைய பெரும்புத்திமாறாட்டம். ராஜாவே! தன்குலத்தையறிந்த உயர்ந்தமனமுள்ள எந்தக்ஷத்திரியன் யுத்தத்தினால் நேரிடுவதும் சாசுவதமானதும் ஒப்பற்றதுமான ஸ்வர்க்கத்தைவிரும்பமாட்டான்? மனிதர்களிற்சிறந்தவனே! க்ஷத்திரியர்கள் ஸ்வர்க்கத்தைக்கருதியேதான் யுத்தங்களென்னும்யாகங்களில் தீக்ஷைசெய்துகொண்டு உலகங்களைஜயிக்கின்றனரென்பதை நீயறி. விரிவானவேதமும் ஸ்வர்க்கத்திற்குக்காரணம். பெரும்புகழும் ஸ்வர்க்கத்திற்குக்காரணம். தவமும் ஸ்வர்க்கத்திற்குக் காரணம். ஆனால், யுத்தத்திலமரணம் ஸ்வர்க்கத்திற்குத்தவறாதகாரணம். இந்த [1] யுத்தமரணந்தான் வைஜயந்தமென்னும்இந்திரனுடைய அரண்மனை. இதனாலுண்டான குணங்களநிரம்பின தேவேந்திரன் அஸுரர்களை வென்று எப்போதும் உலகங்களைக்காப்பாற்றுகிறான். உனக்குநேர்ந்திருப்பதுபோல ஸ்வர்க்கத்துக்குமார்க்கமாய் (எங்களோடுஇப்போது நேர்ந்திருக்கிற) யுத்தம் மற்றெவனுக்குநேரிடும்? ராஜாவே! மகததேசத்துஸேனைகள் மிகுதியாயிருப்பதனால் அச்சேனைமிகுதியையே பலமாகநினைத்துக் கர்வங்கொண்டு பிறரையவமதிக்காதே. ஒவ்வொரு மனிதனிடத்தும் சக்தியிராது. ராஜாவே! உனக்குச்சரியானதும் உனக்குமேற்பட்டதுமாகிய பராக்ரமமிருக்கிறதை எதுவரையில் நீ அறியவில்லையோ அதுவரையில்தான் பராக்ரமம் உன்னுடையது. ராஜாவே! உன்பராக்ரமம் எங்களால் தாங்கக்கூடியதுதான். அதனால் உனக்குச்சொல்லுகிறேன். மகதராஜாவே! உனக்குச்சரியானவர்களிடத்தில்மட்டும் கோபத்தையும் அகங்காரத்தையும்ஒழித்துவிடு. பிள்ளைகளுடனும் அமைச்சர்களுடனும் சேனைகளுடனுஞ்சேர்ந்து யமலோகம்போகாதே. இவ்வுலகத்தில் தம்போத்பவன், கார்த்தவீரியன், உத்தரன், பிருஹத்ரதன்என்னுமிவ்வரசர்கள் தமக்குமேற்சிறந்தவரை அவமதித்துத்தான் சேனைகளோடு அழிந்துபோயினர். நாங்கள் உன்னை மோசமாகக் கொல்லக்கருதினவர்கள்; உண்மையில் பிராமணர்களல்லோம். நான் ஐம்பொறிகளுக்கும் ஈசுவரனான வாஸுதேவன். இவ்விரண்டுவீரபுருஷர்களும் பாண்டுபுத்திரர்கள். இவர்களுக்குமாமன்மகனும் உனக்குப்பகைவனுமான கிருஷ்ணனென்று

---

[1] மரணத்துக்கஞ்சாமல் யுத்தஞ்செய்பவன் இந்திரபதத்தையும் ஜயத்தையும் அடைவானென்பது கருத்து.

என்னையறி. மகதராஜாவே! உன்னைச சண்டைக்கழைக்கிறோம். நின்றுசண்டைசெய்; ராஜாக்களெல்லாரையுமாவதுவிடு; நீயாவது யமலோகத்திறகுசசெல்" என்றுசொன்னார்.

ஜராஸந்தன் இதைக்கேட்டுக கோபங்கொண்டு பேசததொடங்கினன். "நான் கமஸனல்லேன்; பிரலம்பனல்லேன்; பாணனல்லேன்; முஷ்டிகனல்லேன்; நரகனல்லேன்; இந்த்ரதபனனல்லேன்; கேசியல்லேன்; பூதனையுமல்லேன்; காலயவனனுமல்லேன்; அவர்களெல்லரோ உன்னால்யுத்தத்தில கொலலப்படடவர். நீ இடைக்குலததிற்பிறந்தவன. உன்முனஜாதியைநினை. நீ நமமிடமபயநதோடி நாடோடிமனிதனைபபோலப பிறபபிடமானமதுரையைவிடடுக் கடல் தீவைச்சார்நதாயனறோ? கிருஷ்ணா! அபபடிபபட்ட நீ, இப்போது கார்காலமகடநதபிறகு மேகமகாஜிபபதுபோல வீணாககர்ஜிக்கிறாய். மாதவா! உனனைககொன்று என்மருமகனும உகரஸேனன்புத்ரனும் சிறநதபுத்திமானுமாகிய கமஸன்கடனை இப்போதே தீர்க்கபபோகிறேன். உன்னையும உனக்குவேண்டினவர்களையும் கொல்வதற்காக உன்னுடன் யுததஞ்செய்ய எனககு நெடுநாளாகவிருபபமிருநதது. நல்லகாலமாதலால, இநதிராதிதேவாகள என்ஆரமபத்தைப பயன்படச்செய்தனா. கோவிநதா! இநதபீமஸேனனும அர்ஜுனனுமாகியஇருவரும் அசக்தாகள. நான் இவர்களை யுததத்தில்பிடிதது ஒருசிங்கம சிறியமிருகங்களைக கொலவதுபோலக கொலவேன்" என்றான். அநதஜராஸநதன் கோபமூண்டு காஜிததபோது அங்கிருநத எல்லாபபிராணிகளும நடுங்கின. அபபோது ஸ்ரீபகவான், "ஜராஸந்தா! ஏன்கர்ஜிக்கிறாய்? நீசொலவதைச செய்கையால்நடத்து. ராஜாக்களுள் இழிவானவனே! அமைசசர்களுடனும புத்திரர்களுடனும உன்னை நான் இபபோது சண்டையில எனதுகட்டளையைசசெய்பவர்களான இவவிருபாணடவாகளால கொல்லுவிககபபோகிறேன். நீ, எபபாடுபட்டாலும உயிரோடு உன்நகரத்தில் பிரவேசிக்கமாட்டாய்" என்றுசொன்னார். அதைககேட்ட ஜராஸநதன், "நான், ராஜாக்களில எவரையும ஜயிககாமலகொண்டுவநதிருக்கவில்லை. என்னால்ஜயிக்கபபடாதவ திரியார? கிருஷ்ண! க்ஷத்ரியன் பராக்ரமத்தினால் பிறரைஜயிதது அவாகளவிஷயததில தன் இஷ்டபபடி நடபபதே அவனுக்குநியாயமானவிருததியென்று தெரிநதவா சொல்லுகின்றனர் கிருஷ்ணா! க்ஷத்திரியர்களின்விரததததை மறவாத நான் ராஜாக்களைத தேவதைக்குப்பலியாகநிச்சயஞ்செய்து இப்போது பயத்தினால்விடுவதேது? நான் ஸேனையைவகுதததுக்கொண்டு

எதிரிஸேனையோடு யுத்தஞ்செய்வேன். ஒருவனேடொருவனுகவும் யுத்தஞ்செய்வேன். இருவர் அல்லது மூவரும் தனித்தனியேவந்தாலும் சேர்ந்துவந்தாலும் யுத்தஞ்செய்வேன்" என்றுசொன்னன். ராஜாவானஜராஸந்தன் இவ்வாறுசொன்னபிறகு பயங்கரமானசெய்கையையுடைய கிருஷ்ணபீமார்ஜுனர்களோடு யுத்தஞ்செய்யக்கருதி உடனே தன்புத்திரனுகிய ஸஹதேவனென்பவனுக்கு ராஜ்யாபிஷேகஞ்செய்யக் கட்டளையிட்டான். ஜனமேஜயராஜாவே! அந்தஜராஸந்தன் அந்தயுத்தம்நேர்ந்தபோது மானிடலோகத்திலுள்ளமனிதரால் கௌரவிக்கப்பெற்ற ஹம்ஸன் டிபகனென்னும் இரண்டுபெயர்கள் உமக்குச்சொன்னேனே, அந்தப்பெயர்களுள்ள கௌசிகன் சித்ரஸேனனென்னும் இரண்டுஸேனுபதிகளையும் நினைத்தான். ஜனமேஜயராஜாவே! பிரபுவும் புருஷோத்தமரும் மதுவென்னும்அஸுரனை ஸம்ஹரித்தவரும் பலராமருக்குஇளையவரும் ஸத்தியஸந்தரும் ஞானவான்களிற்சிறந்தவருமான கிருஷ்ணபகவான் பலவான்களிற்சிறந்தவனும் புலியைப்போலப் பூமியில் பயங்கரமானபராக்ரமமுள்ளவனுமாகிய ஜராஸந்தராஜன் யாதவவம்சத்தாரால் கொல்லப்படத்தகாதவனும் வேறொருவனுக்குப் பாகமாகக் குறிப்பிடப்பட்டவனுமாயிருப்பதைநினைத்து, பிரமதேவரின்கட்டளையைக் கௌரவிப்பதற்காகத் தாமே அவனைக்கொல்ல யத்தனிக்கவில்லை.

---

## இருபத்துமூன்றுவது அத்தியாயம்.

## ஜராஸந்தவதபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணனுக்கும் ஜராஸந்தனுக்கும் த்வேஷம்வந்தகாரணத்தை ஜனமேஜயர்கேட்க, வைசம்பாயனர்சொல்லியது.)

ஜனமேஜயா, "வைசம்பாயனரே! கிருஷ்ணனும் ஜராஸந்தனுமாகியஇருவருக்கும் யாதுகாரணம்பற்றி ஒருவருக்கொருவர் விரோதமுண்டாயிற்று? கிருஷ்ணன், ஜராஸந்தனுல் யுத்தத்தில் எவ்வாறு ஜயிக்கப்பட்டனர்? கம்ஸன் ஜராஸந்தனுக்கு என்னமுறையாகிருன்? கம்ஸன் நிமித்தமாகவன்றோ ஜராஸந்தன் கிருஷ்ணனுக்குப்பகையாளியானன். இவற்றையெல்லாம் எனக்குத் தெளிவாகச்சொல்லக்கடவீர்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லுகிருர்.

"உக்ரஸேனனுக்குமந்திரியும் மஹாபுத்திசாலியுமான வஸுதேவரென்பவர் யாதவவம்சத்திற்பிறந்தவர். கௌரவரே! உக்ரஸேன

னும் மஹாபலசாலியுமான தந்தவக்ரனை ஜயித்துக் கப்பங்கட்டுவித்து அவனை அவன் ராஜ்யத்தில் நிலைநிறுத்தினான். ஸுகுமாரன் ஸுமித்ரானென்னும் அரசர்களை வசப்படுத்தினான். அப்படியே மத்ஸ்யதேசத்தின் மேற்பக்கத்தாரையும் பட்சசரர்களென்னும் திருடர்களையும் அவன் ஜயித்தான். புத்திமானான ஸஹதேவன் நிஷாதர்களின் தேசத்தையும் கோச்ருங்கமென்னும் சிறந்த மலையையும் அதன்பிறகு ஸ்ரேணிமானென்னும் அரசனையும் பராக்ரமத்தினால் ஜயித்தான். நரராஷ்ட்ரமென்னும் தேசத்தை ஜயித்துக் குந்திபோஜனிடம் சென்றான். அந்தக் குந்திபோஜன் அவன் கட்டளையை அன்புடன் அங்கீகரித்தான். அதன்பிறகு சர்மண்வதி நதிக்கரையில் தன் பிதாவுக்குச் சத்துருவும் கிருஷ்ணனால் (கொல்லாமல்) மிகுந்து வைக்கப்பட்டிருப்பவனும் ஜம்பகபுத்திரனுமான அரசனைக் கண்டான். ஜனமேஜயரே! அவ்வரசன் ஸஹதேவனோடு யுத்தஞ்செய்தான். அந்த யுத்தத்தில் ஸஹதேவன் அவனை ஜயித்துத் தென்றிசை நோக்கிச் சென்றான். மிகச் சிறந்த பலசாலியான ஸஹதேவன் அந்த ஜம்பகபுத்திரனுடன் கூடவே ஸேகர்கள் அபரஸேகர்களென்னும் தேசத்தாரை ஜயித்து அவர்களிடமிருந்து பலவகை ரத்தினங்களைக் கப்பமாகப் பெற்றுக்கொண்டு நர்மதை நதியை நோக்கிச் சென்றான். அங்கே நரகாஸுரன் மகனும் சிறந்த கைகளையுடையவனுமாகிய பகதத்தனென்னும் அரசன் அர்ஜுனனுக்குக் கப்பங்கொடுத்ததாகக் கேட்டுத் திரும்பினான். அச்வினீதேவர்களின் புத்திரனும் சிறந்த பராக்ரமசாலியுமான ஸஹதேவன் பெரும்படையினால் சூழப்பட்டவர்களும் வீரர்களுமாகிய விந்தன் அனுவிந்தனென்னும் அவந்திதேசத்தரசர்களைப் போரில் வென்று அவர்களிடம் ரத்தினங்களைப் பெற்றுக்கொண்டு போஜகடமென்னும் நகரத்துக்குச் சென்றான். ஓ! ஸத்தியந்தவறாத ஜனமேஜயராஜாவே! அந்த நகரத்தில் இரண்டுநாள் யுத்தம் நடந்தது. மாத்ரியின் புதல்வனும் மஹாபலசாலியுமான அந்த ஸஹதேவன் யார்க்கும் வெல்லமுடியாத பீஷ்மகராஜனையும் கோஸலதேசத்தரசனையும் வேண்ணாநதிக்கரையிலுள்ள அரசனையும் ஜயித்து அதன்பிறகு காட்டிலுள்ள அரசர்களையும் பிராகோடகர்கள் நாடகேயர்கள் ஹேரம்பகர்களென்னும் அரசர்களையும் மாருதம், ரம்மியக்ராமமென்னும் ஊர்களையும் நாசீனர்கள், அர்ப்புகர்கள் முதலான பற்பல காட்டரசர்களனைவரையும் பலத்தினால் ஜயித்தான். மஹாபலசாலியான அந்த ஸஹதேவன் வாதாதிபனென்னும் அரசனை வசப்படுத்தினான். புளிந்தர்களென்னும் ஜாதியாரைப் போரில் வென்று தென்திசை நோக்கியே சென்றான். சிறந்த கைவன்மையுள்ள அந்த ஸஹதேவன் பாண்டிய

தேசத்தரசனேடு ஒருநாள போர்செய்து அவனை ஜயிததுத்தென் திசை மார்ககமாகசசென்று கிஷ்கிநதையென்று உலகததில்பெயாபெறற குகையையடைநதான். வாலியென்னும்வானாராஜனல் முன்னர்ஆளப படடதும பிறகு கோஸலதேசாதிபதியான ஸ்ரீ ராமபிரானையடுத்த ஸுக்ரீவனல்காபபாறறபபடடதுமான அநதக்குகையிற பிரவேசிதது அவ்வாசனையழைததான். அநதக்குகையில மைநதன் துவிவிதனென னும இரணடுவானாஅரசாகளோடும ஏழுநாள யுததஞசெய்தான். அவர்களும சோாவடையவிலலை. மஹாதமாககளாகிய அவவிரண்டு வானாாகளும அநதயுததததினல ஸஹதேவன்மேல திருபதியடை நது மனமகிழ்நது அன்புடன, "ஓ! பாண்டவசரேஷ்டனே! இங் குளள ரததினஙகளனைததையுமு எடுததுககொண்டுசெல. சிறநத அறிவாளரான தாமராஜாவின்யாககாரியம இடையூறிலலாமலிருக்க வேண்டும" என்றுசொன்னர்கள. அநதஇரததினங்களைபபெறறுக் கொண்டு அஙகிருநது மாஹிஷ்மதியென்னும் நகரததுக்குப்போனன். புருஷசரேஷ்டனும பகைவாகளான வீரர்களையழிக்குமபராக்ரமசாலி யும பாணடுபுததிரனுமான ஸஹதேவன் அஙகே நீலனென்னுமஅரச னுடன் போாபுரிநதான். அபபோது பயமுளளவர்களுக்குபபயங்கா முமு ஸஹதேவனுடையஸேனைக்ருசசேதததையும உயிருககேஸந தேகததையுமுண்டாககுவதுமாகிய பெரியயுததம் உண்டாயிறறு. அநத நீலராஜனுககு அகனிபகவான்ஸஹாயஞ்செய்தாா. அதனல, ஸஹதேவனுடையசேனையிலுளளதோகளும குதிரைகளும யானைக ளும காலாடகளும் கவசங்களும எரிநதவைபோலககாணபபட்டன. ஜனமேஜயரே! அதனல கௌரவசரேஷ்டனன ஸஹதேவன் மனத தில மிகபபரபரபபுளளவனகி மறுமொழிசொலலவும சக்தியறறவன ன்" என்று வைசமபாயனாசொலல, கேடட ஜனமேஜயா, "ஓ! பிராம்மணரே! யாககாரியத்துக்காக ஆரமபித்த ஸஹதேவனுககு அக்னிபகவான் யுத்தததிலஎதிராகநின்றது எனனகாரணததினலே?" என்றுகேட்க, வைசமபாயனர் சொலலத்தொடங்கினா.

"ஜனமேஜயராஜாவே! முன்னம் அக்னிபகவான் அநத மாஹி ஷ்மதிநகரத்தில வாஸஞசெய்துகொண்டு பரஸ்திரீயினிடம விருப்பம வைத்தவனகக் கண்டுபிடிககபபடடானென்று கேட்டிருக்கிறீரல லவா? நீலனென்னும ராஜாவின்மகள மிக்கஅழகுளளவளாயிருந தாள். அவள தன்தநதைக்கு ஹோமகாலததைத் தெரிவிபபதறகாக எபபோதும அக்னிஹோததிரததைக் காததிருநதாள். அநதஅக்னி பகவான் அவ்வளுடைய அழகான இதழ்க்குவிவின்வழியாகவருமகாற்

றினால் ஊதப்படும்வரையில்,விசிறப்பட்டாலும் ஜ்வலிப்பதில்லை. [1] அந்த அழகியபெண்ணின்மேல் விருப்பமுற்றஅந்த அக்னிபகவான் நீலராஜா வினாலும் மற்றவர்களாலும் குறிப்பாக அறியப்பட்டான். அதன்பிறகு அக்னிபகவான் பிராமமணவடிவமெடுத்து யதேச்சையாக உல்லாஸ மாய் உலாவிக்கொண்டு, கருநெய்தல்மலர்போன்ற கண்களையுடையவ ளும் அழகியநிதம்பமுள்ளவளுமாகிய அந்தப்பெண்ணின்மேல் ஆசை யைக்காண்பித்தான். அப்போது தர்மிஷ்டனான நீலராஜன் அந்த அக்னிபகவானைச் சாஸ்திரப்பிரகாரம் தடுத்தான். உடனே அக்னி பகவான் கோபத்தினால் ஜ்வலித்ததைக்கண்டு வியப்புற்றஅரசன் தன் தலை தரையில்படும்படி வணங்கினான். அதன்பிறகு சிலகாலத்துக் கெல்லாம் அவ்வரசன் அந்தப்பெண்ணைப் பிராம்மணவடிவமாகவந்த அக்னிபகவானுக்குக் கன்னிகாதானஞ்செய்தான். அழகியபுருவங் களையுடையவளாகிய அந்த நீலராஜன்புதல்வியைப் பெற்றுக்கொண்ட பின் ஒளிபைத்த தனமாக்வுடைய அக்னிபகவான் அவ்வரசனுக்கு அனுக்ரஹஞ்செய்தான். யாகங்களை மிகச்சிறப்பாகச் செய்பவனாகிய அக்னிபகவான் வரமகேட்கும்படி அவ்வரசனைத் தூண்டினான். அவ் வரசன் தன்சேனைக்கு அபயத்தையே வரமாகப்பெற்றுக்கொண்டான். அதுமுதல் எந்த அரசர்களாவது அறியாமையினால் தம்வலிமையைக் கொண்டு அந்தநகரத்தைஜயிக்க யத்தனிப்பார்களாயின் அவர்கள் தீயினால்எரிக்கப்படுவர். கௌரவசரேஷ்டரான ஜனமேஜயரே! அந் தக்காலத்தில் அந்த மாஹிஷ்மதிநகரத்துப்பெண்கள் அதிகக் கட்டுக் குட்படாதவர்களாய்த் தமமனமபோனபடி இருந்தனர். பெண்க ளுக்குக் கட்டுப்பாடில்லாமலிருக்கும்படி அக்னி வரமகொடுத்தான். அங்கே மங்கையர்கள் சுதந்திரர்களாகத் தங்கள்விருப்பப்படி நடப் பதுவழக்கம். பரதச்ரேஷ்டரான ஜனமேஜயமஹாராஜாவே! அக் காலம்தொடங்கி அரசர்கள் அக்னிபயத்தினால் அந்தநகரத்தை எப் போதும் விட்டுவிடுவதுவழக்கம். ராஜாவே! தர்மத்தில் மனம்வை த்த ஸஹதேவன் தன்படை தீப்பிடித்துப் பயத்தினாற்கலங்கினதைக் கண்டு மலைபோல்அசையாமலிருந்தான். பிறகு அவன் ஆசமனஞ் செய்து பரிசுத்தனாகி அக்னியைத்துதித்தான்.

"ஓ! அக்னிபகவானே! உனக்குநமஸ்காரம். இந்த என்முய

[1] 'அக்னிபகவான் மானிடவடிவத்தோடு தன்விருப்பத்தை வாய்விட்டுச் சொன்னான். எல்லாருடைய கிருஹங்களிலும் இவ்வாறே சொன்னான். அந் தப்பெண்ணினாலும் அவன் அங்கீகரிக்கப்பட்டான்' என்பதும், 'இது நீல ராஜனுக்குத் தெரியாது என்று வருவித்துக்கொள்க' என்பதும் பழையஉரை.

ற்சி உனக்காகத்தான். பாவகனே! நீ தேவர்களுக்கு [1]முகமாயிருக்கிறாய். நீ யஜ்ஞபுருஷனாயிருக்கிறாய். எல்லாவற்றையும் பரிசுத்தஞ் செய்வதனால் பாவகனாகிறாய். ஹோமஞ்செய்தனவற்றைத் தேவர்களுக்குச் சேர்ப்பிப்பதனால ஹவ்யவாஹனனாகிறாய். உனக்காக வேதங்கள் உண்டாயினவாதலின் நீ ஜாதவேதனாகிறாய். அக்னியே! நீ [2] சித்ரபானு; தேவர்களிற்சிறந்தவன். நீ அனலன்; ஸ்வர்க்கத்தின் வாயிலைத் திறப்பவன்; ஹோமங்களைப் புஜிப்பவன்; ஜ்வலிப்பவன்; [3] சிகி; நீ [4]வைசுவானரன்; [5]பிங்கேசன்; [6]பிலவங்கன்; [7]பூரிதேஜன்; நீ சுப்பிரமணியக்கடவுளையீன்றவன்; மகிமையுள்ளவன்; [8]ருத்திர கர்ப்பன்; பொன்னுக்குக்காரணமானவன்; அக்னிபகவான் எனக்குச் சக்தியையும், வாயுபகவான் உயிரையும், பூமிதேவி வன்மையையும், ஜலம் ஸுகத்தையும் தரவேண்டும். ஜலத்தின் [9]கர்ப்பமாக இருப்பவனே! பெருஞ்சக்தியுள்ளவனே! ஜாதவேதனே! தேவர்க்கரசனே! தேவர்களுக்கு முகமாகியநீ இந்தஸத்தியத்தினால் என்முன்னின்று என்னைப் பரிசுத்தஞ்செய். ரிஷிகளாலும் பிராமமணர்களாலும் தேவர்களாலும அஸுரர்களாலும் யாகங்களில எப்போதும் நன்றாக ஹோமஞ்செய்யப்பட்டவனே! இந்தஸத்தியத்தினால் என்னைக்காப்பாயாக. புகைக்கொடியுள்ளவனும ஜ்வாலையுள்ளவனும் பாவங்களையழிப்பவனும காற்றினால் விருத்தியாகிறவனும எல்லாப் பிராணிகளிடத்தும் எப்போதுமிருப்பவனுமாகிய நீ இந்தஸத்தியத்தினால் என்னைக் காப்பாற்றக்கடவாய். அக்னிபகவானே! நான் பரிசுத்தனாகப் பக்தியுடன் உன்னைத் துதித்திருக்கிறேன். ஸந்தோஷத்தையும் தேசபுஷ்டியையும சாஸ்திரஜ்ஞானத்தையும் மேன்மேலும் பக்தியையும் எனக்குத்தருவாயாக" என்றான். அக்னிபகவானுக்குரிய இம்மந்திரத்தை இவ்வாறுபடித்து அக்னியில்ஹோமஞ்செய்பவன் நீங்காதசெல்வத்துடன் எப்போதும, ஜிதேந்திரியனாகி எல்லாப் பாவங்களாலும் விடப்படுவான். ஜனமேஜயரே! புருஷச்ரேஷ்டனான ஸஹதேவன், "யஜ்ஞங்களைநடத்துகிற அக்னியே! நீ யாகத்திற்கு இந்தஇடையூற்றைச் செய்யத்தகாது" என்றுசொல்லிப் பயத்தினால் நடுங்கின அந்தச்சேனையின் முன்னிலையில் பூமிமறையத் தர்ப்பைக

[1] அக்னியில்ஹோமஞ்செய்வதனால் தேவர்களுக்குத்திருப்தியுண்டாகிற [து.
[2] பலவர்ணங்களான கிரணங்களையுடையவன்.
[3] ஜ்வாலையுள்ளவன். [4] எல்லாமனிதர்களிடத்து மிருப்பவன்.
[5] பசுமைநிறமுள்ளவற்றுள் சிறந்தவன். [6] தாண்டிச்செல்லுகிறவன்.
[7] பேரொளியுள்ளவன். [8] சிவனுக்குள்ளிருப்பவன். [9] வடவாமுகாக்னி.

ளைப் பரமபிச் சாஸ்திரப்பிரகாரம் அக்னியைக்குறித்துத் தவஞ்செய் தான். அக்னியும் கருங்கடல் கரைகடவாமலிருப்பதுபோல ஸஹ தேவன் பிரார்த்தனையை அதிக்கிரமியாமலிருந்தான். அக்னி கௌர வர்களில் ச்ரேஷ்டனும் மனிதர்களுக்குப்பிரபுவுமான அந்தஸஹதேவ னிடம்வந்து மென்மையாகவும் இன்சொல்லாகவும, "கௌரவனே! எழு; எழு; உனக்கு இந்தப்பரீக்ஷையை நான்செய்தேன். உனக் கும் தர்மராஜருக்குமுள்ள அபிப்பிராயங்களெல்லாவற்றையும் நான் அறிவேன். பரதச்ரேஷ்டனே! நீலராஜாவின் குலத்தைச்சேர்ந்த ஸந்ததிகளுள்ளவரையிலும் நான் இந்தநகரத்தைக் காக்கவேண்டிய வனாக இருக்கிறேன். பாண்டவனே! ஆனாலும் உன்மனத்தின்விருப பத்தைச்செய்வேன்" என்றுசொன்னான்.' ஜனமேஜயரே! உடனே ஸஹதேவன் மனமகிழ்ந்து எழுந்து கரங்கள்குவித்துத் தலைவணங்கி அக்னிபகவானைப் பூஜித்தான். அக்னிபகவான் திரும்பிச்சென்ற பிறகு நீலராஜன் அக்னிபகவானுடையகட்டளையினாலேயே புருஷச் ரேஷ்டனும் யுத்தவீரருக்குத் தலைவனுமாகிய ஸஹதேவனை மரி யாதையாக எதிர்கொண்டழைத்துப் பூஜித்தான். ஸஹதேவன் அவன் செய்தமரியாதையைப் பெற்றுக்கொண்டு அவனைக் கப்பங்கட்டுவித்த பிறகு அங்கிருந்து தென்திசையை ஜயிக்கச் சென்றான்.

சிறந்தகைவன்மையுள்ள அந்தஸஹதேவன் அளவற்றசக்தியுள்ள திரைபுரனென்னும்அரசனை உட்படுத்தி, பராக்ரமத்தினால் பௌரவ ராஜனை ஜயித்தான். சிறந்தகைகளையுடையஸஹதேவன் பிறகு கௌ சிகரை ஆசாரியராகவுடைய ஆகிருதியென்னும ஸௌராஷ்டிரதேசாதி பதியைப் பெருமுயற்சியினால் வசப்படுத்தினான். தர்மாத்மாவான அந்தஸஹதேவன் ஸௌராஷ்டிரதேசத்திலிருந்துகொண்டே சிறந்த கௌரவமுள்ளவனும் சிறந்தபுத்திமானும போஜகடமென்னும்நகரத் திலிருப்பவனும இந்திரனுக்குநேரில சினேகிதனுமான பீஷ்மகனுக் கும் அவன்புத்திரனான ருக்மியென்பவனுக்கும தூதனுப்பினான். ஜனமேஜயமஹாராஜாவே! பீஷ்மகனும அவன்மகனானருக்மியும் ஸஹதேவனிடம் அன்புபற்றியும கிருஷ்ணனைநினைத்தும ஸஹதேவ னுடையகட்டளையைஏற்றுக்கொண்டனர். சிறந்தபலமும பராக்ரம முமுள்ளவனும யுத்தவீரரிற்சிறந்தவனும சிறந்தபுத்திசாலியுமான ஸஹதேவன் அவர்களிடம ரத்தினங்களைப்பெற்றுக்கொண்டு மறு படியும் சென்று சூர்ப்பாரகம் தாலாகடமென்னும்தேசங்களையும் தண் டகாவனத்தையும கடலிலுள்ளதீவுகளில்வஸிக்கும மிலேச்சஜாதி யிற்பிறந்த நிஷாதர்கள் புருஷாதர்கள் கர்ணப்ராவர்ணர்கள் காலமுகர்

களென்னும் நராராக்ஷஸருக்குப்பிறந்த அரசர்களையும் கோலகிரிமுழுவதையும் ஸுராபி பட்டணத்தையும் தாம்ரமென்னும்பெயருள்ள தீவையும் ராமகமென்னும்பாவதத்தையும் திமிங்கிலனென்னுமாராஜாவையும் வசப்படுத்தி ஒற்றைக்காலையுடையமனிதர்களையும் கோளர்களையும் காட்டிலுள்ளவர்களையும் ஸஞ்சயந்தி பாஷண்டம் கர்ஹாடகமென்னும்நகரங்களையும் தூதர்களாலேயேவசப்படுத்தி அவர்களைக் கப்பங்கட்டுவித்தான். பாண்டியர்கள், திராவிடர்கள், ஓட்ரர்கள், கோளர்கள், ஆந்திரர்கள், தாளவனர்கள், கலிங்கர்கள், [1]உஷ்டிரகர்ணிகர்கள் ஆகிய இவர்களையும் அழகானகாடுகளையும் நகரங்களையும் யவனர்களின்பட்டணத்தையும் தூதர்களைக்கொண்டே உட்படுத்தி அவர்களைக் கப்பங்கட்டுவித்தான். அதன்பிறகு தாம்ரபர்ணிநதிக்குச்சென்று கன்யாதீர்த்தத்தைக்கடந்து, தென்தேசமெல்லாம்ஜயித்தபின் ஸஹதேவன், அலைகளநிரம்பின கடலின்வடகரையைஅடைந்து பீமஸேனனுடையபுத்திரனான கடோத்கசனை நினைத்தான். நினைத்தவுடன் ராக்ஷஸனான கடோத்கசன் எதிரிற்காணப்பட்டான். பகைவரையழிப்பவனும் சிறந்தபுத்திமானுமாகிய ஸஹதேவன் கடற்கரையிலுள்ள அந்தத்தாழ்வரையிலிருந்துகொண்டே மேருமலைச்சிகரம்போலவந்த கடோத்கசனைப்பார்த்து தர்மராஜருடையகட்டளைக்காக வரவேண்டுமென்று இன்சொல்லாகச் சொன்னான். உடனே கடோத்கசன் ராக்ஷஸசேவகர்களோடு ஸஹதேவனைவணங்கிநின்றான். தர்மாத்மாவும் பகைவரைஜயிப்பவனுமாகிய ஸஹதேவன் அங்கிருந்துகொண்டே மிக்கதைரியமும் பயங்கரமாகியஉருவமுமுள்ளவனாகிய கடோத்கசனைப் புலஸ்தியகுலத்தோரும் மஹாத்மாவுமாகிய விபீஷணருக்கு ஸ்நேஹத்தைமுன்னிட்டுத்தூதுவிடுத்தான். சிறந்த புத்தியுள்ளவரும் பிரபுவுமான விபீஷணரும் அது கிருஷ்ணனாற் செய்யப்பட்டதென்றுநினைத்து ஸஹதேவனுடையகட்டளையை அன்புடன்அங்கீகரித்தார். அதன்பிறகு சந்தனக்கட்டைகளையும் அகிற்கட்டைகளையும் உயர்ந்த ஆபரணங்களையும் பெருவிலைபெற்றஆடைகளையும் மணிகளையும் இன்னும் பலவகையானசிறந்தபொருள்களையும் அனுப்பினார்" என்றார்.

[1] ஒட்டகக்காதர்கள்.

## முப்பத்துமூன்ருவது அத்தியாயம்.

## திக்விஜயபர்வம். (தொடர்ச்சி.)



(ஜனமேஜயர் மறுபடியும் கேட்க, வைசம்பாயனர் ஸஹதேவன் சோழநாட்டுக்கும் பாண்டியநாட்டுக்கும்சென்றதைச் சொல்லியது.)

ஜனமேஜயர், "பிராம்மணோத்தமரே! கடோத்கசன் வரவையும் அவன் இலங்கைக்குப்போனதையும் விபீஷணரைக்கண்டதையும் காவேரியைப்பார்த்ததையும் கேட்க விரும்புகிறேன். வரிசையாக எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்.

"ஜனமேஜயரே! ஸஹதேவன்பராக்ரமத்தை நடந்தவாறு சொல்லுகிறேன்; கேளும். அவன் தன்பராக்ரமத்தினால் காடுகளிலும் தீவுகளிலுமுள்ளவர்களைப் போரில்வென்று தென்திசையைவசப்படுத்திக் கொண்டு சோழநாடுசென்றான். அப்போது ஸஹதேவன் புண்ணிய தீர்த்தமுள்ளதும் பலவகைப்பறவைக்கூட்டங்களினால் அடையப்பட்டதும் முனிவர்களினால்அலங்கரிக்கப்பட்டதும் ஆச்சா, லோத்திரம், மருதம், வில்வம், நாவல், இலவு, முருக்கு, கடம்பு, ஏழிலைப்பாலை, குமிழ், நெல்லி, பெருங்கிளைகளுள்ள ஆல், புளி, அத்தி, வன்னி, பலாசம், அரசு, கருங்காலி, இலந்தை, அசவகர்ணம், மா, புண்டரகம், வாழைமுதலிய மரங்களினால் வியாபிக்கப்பட்டுவிளங்குவதும் சக்ரவாகம், வாத்து, நீர்க்காக்கை, கடற்காக்கை, அன்றில், நீர்க்கோழிமுதலியநீர்ப்பறவைகள் அனேகம்கூவப்பெற்றதும் அனேக ரிஷிஆசிரமங்களினாலும் பூஜிப்பதற்குரியமரங்களினாலும்விளங்குவதும் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்ட பரிசுத்தரான பிராம்மணர்களினால்விளங்குவதும் சிலவிடங்களில் கரையில்முளைத்திருக்கும் மரங்கள் நிரம்பப்பூத்திருப்பதனால் மாலைகளை அணிந்திருப்பதுபோன்றதும் சிலவிடங்களில் செங்கழுநீர், குவளை, செவ்வல்லி, ஆம்பல், தாமரைமுதலியவைகள்மலர்ந்து அழகாயிருப்பதுமாகிய நதிகளிற்சிறந்த காவிரியைக்கண்டு, 'நமது தேசத்தில் கங்கை எவ்வாறோ அவ்வாறே இந்தக்காவேரி சிறந்தது' என்று ஸந்தோஷமடைந்தான். ஸஹதேவன் அந்தநதியைச் சேனைகளுடன் தாண்டி, தென்கரைசேர்ந்து செல்லத்தொடங்கினான். பாண்டவன் அந்தத்தேசத்தில்வந்திருப்பதைக்கேட்டு அத்தேசத்திலுள்ளவர்கள் விருப்பத்துடன் அவனைக்காணச்சென்றனர். காண்பதற்கழகான [1]தமிழ்நாட்டாராகிய ஆடவரும்மங்கையரும் அங்கேசென்று

[1] மூலத்தில், 'த்ரமிடா:' எனறிருக்கிறது.

அந்தப்பாண்டவனை ஸந்தோஷத்துடன்கண்டனர். மிருதுவானதேக மும் விசாலமானகண்களுமுள்ளவனும் தேவதைக்கொப்பானவனும் இவ்வுலகத்துள் மிக்க அழகுள்ளவனும் ஆச்சரியப்படத்தக்கவனு மாகியஸஹதேவன் போகும்போது அந்ததமிழ்நாட்டார்கள்கூடிக் கண்ணிமைகொட்டாமற்பார்த்தனர். குமாரக்கடவுளுக் கொப்பான அந்தஸஹதேவனைக்கண்டு மங்களகானங்களோடுகூடிய ஸ்தோத்திரங்களைச்செய்து, விரும்பத்தக்க பற்பல உயர்ந்தபொருள்களையும் மற் றும்விரும்பத்தக்க பலஸௌக்கியங்களையும்அளித்து உபசரித்தனர். சிறந்தகைகளையுடையஸஹதேவனும ஸந்தோஷத்தோடு அந்தத்தமி ழர்களைக்கண்டு அவர்களுக்குவிடைகொடுத்தனுப்பித் தென்திசைக் குப்புறப்பட்டான். தமிழ்நாட்டரசனுகியசோழராஜனைத் தனதுதூத னலேயே விரைவில்வசப்படுத்தி அவனிடமிருந்து ரத்தினங்களைப பெற்றுக்கொண்டு பாண்டியநாடுசென்றான். சோழநாட்டிலுள்ள மற்ற மனிதர்கள் ஸஹதேவனைக்காண்பதில ஆசைதீராதவர்களாக அவன் செல்லும்போது ஸந்தோஷத்துடன் பின்சென்றுகொண்டே பாண் டியதேசம்போயினர். ஜனமேஜயராஜாவே! பிறகு ஸஹதேவன் காட்டிற்சஞ்சரிக்கும்யானைகளையும் புலிகளையும் மான்களையும் மற்று முள்ள அநேகமிருகக்கூட்டங்களையும கிளிகளையும் மயில்களையும் கழுகுகளையும் காட்டுக்கோழிகளையும் பார்த்துக்கொண்டு பாண்டிய நாட்டைச்சேர்ந்து அர்ஜுனனுக்குமாமனுகிய பாண்டியராஜனுக் குத தூதர்களையனுப்பினன். [1]மலயத்வஜனுகியபாண்டியன் ஸஹ தேவன்கட்டளையை அன்புடன்அங்கீகரித்தான். அர்ஜுனன்மனைவி யும பாண்டியராஜபுத்திரியும அழகிற்சிறந்தவளும நல்லலக்ஷணங்கள் பொருந்தினவளும பெண்களிற்சிறந்தவளுமாகியசித்ராங்கதையென்று பெயர்பெற்ற தமிழ்ப்பெண் ஸஹதேவன்வந்ததைத தன்தந்தையினுல் அந்தப்புரத்திற்கேள்வியுற்று மரியாதைக்காக மிகுதியானரத்னங்களை அன்புடன் அனுப்பினள். புகழ்பெற்ற பாண்டியராஜனும பலவகை யான விலையுயர்ந்தபொருள்களையும மணிகளையும முத்துக்களையும் பவ ழங்களையும் தூதர்களையும ஸஹதேவனுக்கு அனுப்பினன். ஜனமே ஜயராஜாவே! அந்தநிகரற்ற மரியாதையைக்கண்டு ஸஹதேவனும் ஸந்தோஷத்தோடு தனதுஸஹோதரன் புதல்வனுகிய பப்ருவாகன னுக்கு ரத்னங்களை மிகுதியாகஅளித்து அர்ஜுனன்மாமனும் திரா விடதேசத்துக்கும் மணலூர்நகரத்திற்கும ராஜாவுமான மலயத்வஜ

[1] ஆதிபர்வம் 836 - வதுபக்கத்தில் சித்ரவாகனனென்றுபெயர்கூறப்பட் டிருக்கிறது.

பாண்டியனைத் தூதர்களைக்கொண்டே வசப்படுத்தி அவனிடத்திலிரு ந்து ரத்தினங்களைப்பெற்றுக்கொண்டு தமிழர்களாற்சூழப்பட்டவனாக அகஸ்தியருக்கு இருப்பிடமும் தேவலோகத்துக்குச்சமானமுமான சிறந்தமலையைச்சேர்ந்தான். ஜனமேஜயரே! அந்தஸஹதேவன் அந்த மலயமலையைப் பிரதக்ஷிணஞ்செய்து தெளிவும் குளிர்ச்சியுமுள்ள தீர்த்தமுடையதும் மனத்தைக்கவர்கின்றதுமான தாமிரபர்ணி என்கிற ...யைக்கடந்து கடற்கரைசேர்ந்து அங்(

## முப்பத்துநான்காவது அத்தியாயம்.

## திக்விஜயபர்வம். (தொடர்ச்சி.)



(ஸஹதேவனால்அனுப்பப்பட்ட கடோத்கசன் விபீஷணரிடம்சென்று காணிக்கை வாங்கிவந்துகொடுத்ததும், ஸஹதேவன் இந்திரப பிரஸ்தம்சேர்ந்து தர்மராஜருக்கு ஒப்பித்ததும்.)

அரசர்க்கரசரும் பாரதருமான ஜனமேஜயராஜாவே! அதன் பிறகு சிறந்தகைகளையுடைய ராஜாவான ஸஹதேவன் புத்திமான்களுட்சிறந்தவரும் நல்லஆலோசனையுள்ளவருமான மந்திரிகளுடன் கூட ஆலோசனைசெய்துநிச்சயித்துக்கொண்டு ஆவலோடு தனது ஸஹோதரன்மைந்தனாகிய கடோத்கசனைநினைத்தான். நினைத்தமாத்திரத்தில் அந்தராக்ஷஸன்காணப்பட்டான். மிக்கஉயரமும் பெருங்கைகளுமுள்ளவனும் இருண்டமேகம்போன்றவனும் மாற்றேறின பொற்குண்டலங்களையும் விசித்ரமானமுத்தாரங்களையும் தோள்வளைகளையும் ரத்தினச்சதங்கைகளையும் பொன்மாலையையும் அரைக்கட்டையும் கடகங்களையும் தோளவளைகளையும் கிரீடத்தையும் மற்றுமுள்ள ஆபரணங்களெல்லாவற்றையும் அணிந்துகொண்டவனும் நீண்டகோரப்பற்களும் சிவந்தகூந்தலும் செம்பட்டைநிறமானமீசையுமுள்ளவனும் பயங்கரமான தேகமுள்ளவனும் செஞ்சந்தனமணிந்தவனும் மெல்லிய ஆடைதரித்தவனும் பலசாலியுமானஅந்தக் கடோத்கசன் தன்வலிமையினால் பூமியைநடுங்கச்செய்பவன்போல அங்கேவந்தான். ராஜாவே! மலைபோல்வருகின்ற அந்தக்கடோத்கசனைக்கண்டு அங்குள்ள ஜனங்களனைவரும் சிங்கத்தைக்கண்ட அற்பமிருகங்கள்போலப் பயந்தோடினர். ராவணன் புலஸ்தியரிடம்வருவதுபோல அவன் ஸஹதேவனிடம்வந்தான். ராஜாவே! பிறகு கடோத்கசன் ஸஹதேவனை நமஸ்கரித்துக் கரங்குவித்து வணக்கமாகநின்று, 'யான்செய்யத்தக்

கதுயாது?' என்றுகேட்டான் மேருமலையின்சிகரம்போல வந்துநிற்கும் அந்தக்கடோத்கசனைப் பாண்டவனான அந்தஸஹதேவன் இரண்டுகைகளாலும்தழுவி உச்சிமோந்து மந்திரிகளுடன்கூடி அவனுக்குமரியாதைசெய்து அன்புடன், "மஹாபலசாலியானகுழந்தாய்! கப்பத்தின்பொருட்டு நான்அனுப்பினதாக லங்காபுரிக்குச்சென்று அங்கு ராக்ஷஸர்களுக்குஅரசரும் மஹாத்மாவுமான விபீஷணரைக் கண்டு ராஜஸூயயாகத்திற்காகப் பலவகைகளான ரத்தினங்களை மிகுதியாகப்பெற்றுக்கொண்டு திரும்பிவா" என்றுசொன்னான்.

ஜனமேஜயரே! ஸஹதேவனால் இவ்வாறுஉரைக்கப்பட்ட கடோத்கசன் மனமகிழ்ந்து 'அவ்வாறேஆகட்டும்' என்றுசொல்லித் தென்திசைநோக்கிச்சென்றான். ராஜாவே! ஸஹதேவனைப் பிரதக்ஷிணஞ்செய்து லங்கையைநோக்கிப்புறப்பட்ட அந்தக்கடோத்கசன் ஆமைகளும் முதலைகளும் சிறுமீன்களும் பெருமீன்களும் நீர்யானைகளும் சிப்பிகளும் சங்குகளும் மிகுதியாகநிரம்பியிருக்கும் கடலைக்கண்டான். அரசர்க்கரசே! அந்தக்கடோத்கசன் ஸ்ரீராமபிரானுடைய திருவணையைக்கண்டு, அவருடையசக்தியைநினைந்துகொண்டே கடலின்தென்கரையைச்சேர்ந்து ஸ்வர்க்கம்போல அழகானதும், சுற்றுமதிலுள்ளதும், அழகானகோபுரவாயில்களினால் விளங்குவதும், வெண்மையும்செம்மையுமான அனேகமாடமாளிகைகள்நிரம்பியதும், அழகான மிருதங்கசப்தமுள்ளதும், எக்காலத்திலும்காய்த்தும் பூத்துமிருக்கும் மரங்களுள்ளதோட்டங்களினால் அழகாயிருப்பதும், மலர்களின் மணம்நிரம்பிய அழகான ராஜமார்க்கங்களுள்ளதும், அனேகரத்தினங்கள்நிரம்பினதும், இந்திரனுடைய அமராவதிநகருக்கு நிகராயிருப்பதும், ராக்ஷஸர்களாலடையப்பட்டதுமான லங்காநகரத்தைக்கண்டு அதில் பிரவேசித்தான். அந்தக்கடோத்கசன் சூலம் பராஸம்முதலிய ஆயுதங்களைத்தரித்துப் பலவிதஅலங்காரங்களையணிந்திருக்கும் வீரர்களான அனேகராக்ஷஸர்களையும் தெய்வலோகத்துப் பூமாலைகளசூடியும் திவ்யாபரணங்களையணிந்தும் மதுபானத்தினால் கடைக்கண்கள் சிவந்துமிருப்பவரும், பருத்தநிதம்பங்களும் தனங்களுமுள்ளவருமான அழகியபெண்களையுங்கண்டான். பீமஸேனன்புதல்வனான கடோத்கசனைக்கண்டு அவர்கள் மகிழ்ச்சியையும் வியப்பையுமடைந்தனர். அந்தக்கடோத்கசன் இந்த்ரக்ருஹத்திற்கு நிகரான ராஜக்ருஹத்தைச்சேர்ந்து துவாரபாலகனைச் சந்தித்து, "பாண்டுவென்று பெயர்பெற்றவரும் மஹாபலசாலியும் கௌரவச்ரேஷ்டருமான அரசர்ஒருவர் இருந்தார். அவருடைய இளையமைந்தர் ஸஹதேவரென்பவரைக்

கேள்வியுற்றிருக்கலாம். நான் தர்மராஜாவின்கப்பத்திற்காக அவ ரால்அனுப்பப்பட்டதூதன். அரசர்க்கரசரான விபீஷணரைப் பார் க்கவிரும்புகிறேன். நீ சீக்கிரம் என்னைப்பற்றித்தெரிவி" என்று சொன்னான்.

ஜனமேஜயராஜாவே! அந்தத் துவாரபாலகன் அவனுடைய அந் தச்சொல்லைக்கேட்டு 'அப்படியேஆகட்டும்' என்றுசொல்லித் தெரி விப்பதற்காக அரண்மனைக்குட்போனான். அவன், கைகூப்பி நின்று தூதனுடைய சொல்லைமுழுதும ராஜாவுக்குச்சொன்னான். தர்மாத்மா வும் ராக்ஷஸராஜாவுமான விபீஷணா துவாரபாலகன்சொன்னதைக் கேட்டு 'அந்ததூதனை யென்னிடமஅழைத்துவா' என்றுசொன் னார். தர்மநெரிந்த மஹாத்மாவாகிய ராஜாவினால இவ்வாறுகட்டளை யிடப்பட்ட அந்தத் துவாரபாலகன் விரைவாகவெளியிலவந்து கடோத் கசனைக்கண்டு, "தூதனே! சீக்கிரம ராஜாவைப்பார்க்கலாம்; நேரே உள்ளேசெல்லலாம்" என்றுசொன்னான். த்வாரபாலகனுடைய சொல லைக்கேட்டுக கடோத்கசன் உள்ளேசென்று, கைலாசகிரிக்கொப பானதும, மாறறுயாந்த பொன்மயமான தோரணங்களுள்ளதும, சுற்றுமதிலுள்ளதும், கோபுரங்களினால்சோபிப்பதும, நிலாமுற்றங்க ளும் தேவதாகிருஹங்களும நிரம்பியதும, அனேகரதனங்கள் விளங் குவதும, பொன்னினாலும தங்கத்தினாலும படிகத்தினாலும் வெள ளியினாலும் வச்சிரங்களினாலும வைடூரியங்களினாலும்செய்யப்பட்ட மிக்கஅழகானதூண்களும பலவகைக்கொடிகளும கொடிமரங்களு முள்ளதும், ரத்தினங்களிழைத்துப பலநிறமாயிருப்பதும, எங்கும மலர்மாலைகள்தொங்குவதும, உயர்ந்த தங்கமேடைகளுள்ளதுமான அழகிய அந்தக்கிருஹத்தை முழுவதுமபார்த்தான். பீமஸேனனுக் கும் ஹிடிமபிக்கும புதல்வனான கடோத்கசன், தந்திநாதமும குர லும்சேர்ந்து ஸமதாளமும அக்ஷரகாலஅளவுமுள்ளதும தேவதுந்து பிவாத்தியங்கள இடைவிடாமல முழங்குவதுமான இனியஸங்கீதத் தைக்கேட்டு ஸந்தோஷமடைந்தான். பாரதரான ஜனமேஜயரே! அதன்பிறகு அந்தக்கடோத்கசன் அந்தத்துவாரபாலகனுடன்கூடவே அழகான அனேகங்கட்டுகளுள்பிரவேசித்து ஆகாயத்தில ஸூர்யனிரு ப்பதுபோலச் சிறந்தஸிம்மாஸனத்தில் வீற்றிருப்பவரும், முத்துக்க ளும ரத்னங்களும் பறபலஉயர்ந்தஆபரணங்களும் அணிந்துகொண்ட வரும, தேவதைபோன்ற உருவமுள்ளவரும், தேவலோகத்திய சிற ந்தபுஷ்பமாலைகளையும் ஆடைகளையும்தரித்து உயர்ந்தசாந்தணிந்து கொண்டு ஸூர்யனைப்போலும அக்னியைப்போலும் ஒளியுள்ளதே

கத்தினால் விளங்குகின்றவரும், தேவர்களுடன் தேவேந்திரனிருப்பதுபோல மந்திரிகளுடன் கூடியிருப்பவரும், மஹாத்மாக்களான யக்ஷர்களும், அழகியஒளியுள்ளதெய்வப்பெண்களும், மங்களகானங்கள்செய்து ஸ்வர்க்கத்திலிருப்பவர்போலக் கொண்டாடப்பெற்றவரும், இரண்டுசிறந்தபெண்களினால் பொற்காம்புள்ளவையும் உயர்ந்த விலைபெற்றவையுமான இரண்டுசாமரங்களைப்பிடித்துத் தலைக்குமேல் வீசப்பெற்றவரும், குபேரனைப்போலவும் வருணனைப்போலவும் மஹிமையும் ஐசுவரியமும்பெற்றவரும், எக்காலமும்தர்மத்திலேயேயிருப்பவரும், ஆச்சரியமான ராக்ஷஸராஜாவும், இக்ஷ்வாகுகுலநாதராகிய ஸ்ரீராமபிரானை என்றும் மனத்திலநினைத்திருப்பவரும், மஹாத்மாவுமான விபீஷணரைககண்டு கைகூப்பி வந்தனஞ்செய்தான். மஹாவீரனான கடோத்கசன், இந்திரனிடத்தில் சித்ரரதனென்னும் கந்தர்வன்நிற்பதுபோல அவரிடத்தில வணங்கிநின்றான். ராக்ஷஸராஜாவான அந்தவிபீஷணர் தூதனாகவந்த அந்தக் கடோத்கசனைக் கண்டு முறைப்படி மரியாதைசெய்து இனசொல்லாக, "கப்பத்தை விரும்புகின்ற அவ்வரசன் யாருடையவம்சத்தில் பிறந்தவன். அவன் உடன்பிறந்தவர்களனைவரையும் அவனுடையநகரத்தையும் தேசத்தையும் உன்னையும் நீவந்தகாரியத்தையும் எல்லாவற்றையும்பற்றித் தெளிவாகக்கேட்கவிரும்புகிறேன். இவற்றையெல்லாம் தனித்தனியே எனக்கு விரித்துச்சொல்" என்றுகேட்டார். மஹாத்மாவான விபீஷணரால் இவ்வாறுவினவப்பெற்ற கடோத்கசன் கைகூப்பிநின்று பின்வருமாறு பொருத்தமான மறுமொழி சொல்லலானான்.

"சந்திரவம்சத்திற்பிறந்த மஹாபலசாலியான பாண்டுவென்னும் ஓர் அரசர்இருந்தார். பாண்டுவுக்கு இந்திரனுக்கொப்பான பராக்ரமமுள்ள ஐந்துகுமாரர்கள் பிறந்தனர். அவர்களுள் மூத்தவர் யுதிஷ்டிரரென்றும அஜாதசத்ருவென்றும் பெயர்பெற்றவர்; தர்மத்திலேயே மனமுள்ளவர்; தர்மமேஉருவங்கொண்டதுபோன்றவர். அந்தயுதிஷ்டிரரென்னுமராஜா கங்கைக்குத்தென்கரையில அஸ்தினநகரத்தில் ராஜ்யாதிபத்யம்அடைந்து ராஜ்யத்தைஆண்டார். ஓ! ராஜச்ரேஷ்டரே! அந்தராஜ்யத்தைத் திருதராஷ்டிரனுக்குக்கொடுத்துவிட்டுப் பிறகு இந்த்ரப்ரஸ்தம்சென்றார். அந்தஇரண்டுநகரங்களும் கங்கைக்கும்யமுனைக்கும் இடையிலிருக்கின்றன. ராஜச்ரேஷ்டரானவிபீஷணரே! அந்தஇந்திரப்ரஸ்தத்தில் தமதுஸஹோதரர்களுடன் மகிழ்ச்சியோடிருந்து எங்கள்ராஜா அரசுநடத்துகிறார். அவருக்கிளையவர் சிறந்தகைகளையுடையவர்; பீமஸேனனென்றுக்யாதிபெற்றவர்; பெருஞ்

சக்தியும்கீர்த்தியுமுள்ளவர்; இந்திரனுக்கொப்பான பராக்ரமமுள்ளவர். அந்தப்பாண்டுபுத்ரர் பலத்திலபதினாயிரமயானைகளுக்குச்சமமானவர். அவருக்கிளையவர் அர்ஜுனனென்பவர். சிறந்த பராக்ரமமுடையவர். மிருதுவானதேகமும சிறந்தசக்தியுமுள்ளவர். சூதத்தனத்தினால் உலகத்திலபெயர்பெற்றவர். சூாத்தனத்தில் கார்த்தவீர்யனுக்கும பலத்தில்கடலுக்கும அஸ்த்ரவித்தையில பரசுராமருக்கும் யுத்தஞ்செய்வதில் ஸ்ரீ ராமபிரானுக்கும வடிவிலஇந்திரனுக்கும பிரகாசத்தில்ஸூர்யனுக்கும ஒப்பானவர். அந்தப்பற்குனர், தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள, பிசாசர்கள், நாகர்கள், அரக்கர்கள், மனிதர்களாகிய இவர்களனைவரும் சேர்ந்தாலும யுத்தத்தில் (அவர்களால்) வெல்லமுடியாதவர். அவர், தேவககூட்டங்களோடு யுத்தத்திற்குவந்த இந்திரனைத் தம்பராக்ரமத்தினால்ஜயித்துக் காண்டவவனத்தை அக்னிக்குஎரிக்கக்கொடுத்து அக்னியைத்திருப்திசெய்வித்தவர். அக்னியைத்திருப்திசெய்வித்ததினால அவருக்குத் திவ்யாஸ்திரங்கள்கிடைத்தன. ராஜாவே! தேவர்களும்அடைவதற்கரிய ஸுபத்ரையென்றுபெயர்பெற்ற கிருஷ்ணஸஹோதரி அவரால்அடையப்பெற்றாள். ராஜாவே! அர்ஜுனனுக்குஇளையவர் நகுலன்என்றுபெயர்பெற்றவர். அவர் உருவமெடுத்துவந்த மன்மதன்போல உலகத்தில் மிக்கஅழகானவர். அவருக்கிளையவர் ஸஹதேவனென்று கியாதிபெற்றவர்; மஹாபராக்ரமசாலி; யுத்தத்திலகுமாரக்கடவுளுக்குநிகரானவர். நான் அவரால உமமிடம்அனுப்பப்பட்டவன். எனக்குக் கடோத்கசனென்றுபெயர். நான்பீமஸேனராஜாவின்புத்திரன்; மிக்கபலசாலி. என்தாயார் மஹாபாக்யசாலியான ஹிடிம்பையென்னுமரக்கி. நான் பாண்டவர்களுக்கு உபகாரஞ்செய்வதற்காக இந்தப்புவனியெல்லாம ஸஞ்சரிக்கிறேன் யுதிஷ்டிரர் இந்தப்பூமிமுழுமைக்கும் அரசராய்விட்டார். அவர் ராஜஸூயமென்னும சிறந்தயாகத்தைசசெய்ய ஆரம்பித்துக் கப்பமவாங்குவதற்காகத் தமஸஹோதரர்களை எல்லாத்திசைகளிலும அனுப்பியிருக்கிறார். அவர் கிருஷ்ணனுடன் சேர்ந்து (யோசித்துத) தம்பிமாரையனுப்பினார். ராஜாவே! அவர்களில் மஹாரதரும மஹாபலசாலியுமான அர்ஜுனர் விரைவாக வடக்கேசென்று மேருமலையைததாண்டி லக்ஷமயோஜனைதூரம்சென்று ராஜாக்களெல்லாரையும் தமதுபராக்ரமத்தினால்யுத்தத்தில் ஜயித்தும் கொன்றும வசப்படுத்தி ஸ்வர்க்கத்தின்அருகேசென்று அதிகமான ரத்னங்களையும் உயர்ந்தகுதிரைகளையும பலவகையான தனங்களையும் கொண்டுவந்து அவற்றையெல்லாம் தர்மராஜாவுக்குக் கொடுத்தார்.

அரசர்க்கரசே! பீமஸேனரும் தம்வலிமையினால் கீழ்த்திசையைஜயி த்து அரசர்களைவசபபடுத்தித் தர்மராஜாவுக்குத் தனத்தையளித்தார். அவ்வாறே நகுலரும் கபபத்திற்காக மேற்றிசைக்குப்புறப்பட்டார். ராஜச்ரேஷ்டரே! ஸஹதேவர் தென்திசையைச்சேர்ந்து எல்லாஅர சர்களையும்ஜயித்து அவர்களால் மரியாதைசெய்யபபெற்றுக் கப்பத் திறகாக என்னை இங்கேயனுப்பினர். பாண்டவர்களுடையசரித்தி ரத்தை உமக்குச சுருக்கமாகச்சொன்னேன். மஹாராஜாவே! தர் மநதெரிநதவரே! தர்மராஜாவானயுதிஷ்டிரரையும் பரிசுத்தமானராஜ ஸூயயாகத்தையும ஜகத்பிரபுவான கிருஷ்ணபகவானையும் நினைத் துபபார்த்து இப்போது நீர் கபபமகொடுப்பதற்குரியவராகிறீர்" என் றான்.

அவன்சொன்னதைக்கேட்டு ராக்ஷஸர்க்குராஜாவும் தர்மாத்மாவு மாகிய விபீஷணர் ராக்ஷஸர்களுடன் அந்தஆஜ்ஞையை அங்கீகரித் தார். சிறந்தஅறிவாளரான அந்தப்பிரபு அது கண்ணபிரான்செய்த தென்று நினைத்தார். அதன்பிறகு அனேகவிதமான சால்வைகளை யும், விரிப்புகளையும, மணியினாலும பொன்னினாலும் அலங்கரிக்கப் பட்ட தந்தக்கட்டில்களையும, பொற்கட்டிலகளையும, பெரியவிலைபெ ற்ற ஆபரணங்களையும், பவழங்களையும, முத்துக்களையும், பொற்பாண் டங்களையும, பொற்கலசங்களையும, பொறகுடங்களையும, விசித்திரங்க ளான அண்டாக்களையும, கொப்பரைகளையும, வெள்ளிப்பாத்திரங்களை யும், ரத்னகுண்டலங்களையும, பொன்மலர்களையும், சிறநதபொன்னால் செய்யப்பட்ட மற்றும அனேகமபொருள்களையும், விசித்திரமானசுழி களோடுகூடியவையும சந்திரனைப்போன்றவையுமான சங்குகளையும், யாகசாலையின் தோரணஸ்தம்பங்களாயிருக்கததக்க பதினான்குபனை மரங்களையும், பொற்றாமரைமலர்களையும, ரத்னமயமானபல்லக்குக்களை யும்,மிகுநதவிலைபெற்ற கிரீடங்களையும், ரத்னங்கள் இழைத்தவளைகளை யும, உயர்நதசநதனங்களையும, பலவகைவஸ்திரங்களையும், ராஜாவான விபீஷணர் ஸஹதேவனுக்குஅளித்தார். மதுபானமசெய்த மததத் தால் கண்கள்சிவநத எண்பத்தெண்ணாயிரம்அரக்கர்கள் அந்தவிலை யுயர்ந்த பொருள்களனைத்தையும கொணர்நதனர். அநத ரத்தினங்க ளெல்லாவற்றையுமவாங்கிக்கொண்டு கடோத்கசன் புறப்பட்டான். அவன் ராஜாவானவிபீஷணருக்கு வநதனஞ்செய்து கைகூப்பிப் பிர தக்ஷிணஞ்செய்து புறபபட்டான். கடோத்கசன் ராக்ஷஸர்களோடு கூட ரத்தினங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு லங்கையிலிருந்து ஸஹதேவனிருக்குமிடத்திற்கு விரைவாகச்சென்றான். அவர்களை

வரும் கடலைக்கடந்து ஸஹதேவனிடம்சேர்ந்தனர். ஜனமேஜய ராஜாவே! ரத்தினங்களைக்கொண்டுவந்திருக்கும் பயங்கரமான அரக்கரையும் கடோத்கசனையும் ஸஹதேவன்கண்டான். அங்குள்ள தமிழர்கள் அரக்கரைக்கண்டு பயந்தோடினர். பிறகு கடோத்கசன் ஸஹதேவனையடைந்து கரங்குவித்துநின்றான். ஸஹதேவனும் ரத்தினக்குவியலையும் கடோத்கசனையுமகண்டு களிப்புற்றான். தன் இருகரங்களினாலும் கடோத்கசனைத்தழுவியும மற்ற அரக்கரைப்பார்த்தும் அன்புபாராட்டினான். தமிழர்களனைவருக்கும விடைகொடுத்தனுப்பின பிறகு தான் புறப்படத்தொடங்கினான். புத்திமானான ஸஹதேவனென்னும்அரசன் அங்கிருந்து திரும்பினான். இவ்வாறு பராக்ரமத்தினாலும் இனியசொல்லினாலும ஜயலக்ஷ்மிபொருந்தியிருப்பதனாலும் ராஜாக்களைஜயித்துக் கப்பங்கட்டுவித்து அந்தவீரன் திரும்பிவந்தான். ராக்ஷஸர்களுடன்கூட ரத்தினமயமான பணிமரங்களையெடுத்துக்கொண்டு பூமியை அதிரச்செய்கிறவன்போல இந்திரப்பிரஸ்தத்தில் பிரவேசித்தான். ஜனமேஜயராஜாவே! ஸஹதேவன் யுதிஷ்டிரரைக் கண்டு கரங்குவித்துவணங்கி வந்தனஞ்செய்துநின்று அவராற்கொண்டாடப்பெற்றான். யாருக்குமகிடையாத மிகுதியான தனக்குவியல்கள் இலங்கையிலிருந்து வந்தனவற்றைக்கண்டு தாமரானா மிகுந்த ஸந்தோஷத்தையும் மிக்கவியப்பையுமடைந்தார். பரதச்ரேஷ்டரான ஜனமேஜயராஜாவே! ஆயிரங்கோடிகளுக்கு மேற்பட்டபொன்களையும் பலவகைரத்தினங்களையும் பசுக்களையும வெள்ளாடுசெம்மறியாடு எருமைகளையும் மஹாத்மாவானதர்மராஜருக்கு ஒப்பித்துத் தன்காரியத்தைச்செய்து ஸஹதேவன் ஸுகமாகவஸித்தான்.

## முப்பத்தைந்தாவது அத்தியாயம்.

## த்க்விஜயபர்வம். (தொடர்ச்சி.)



(நகுலன் மேற்றிசையையஜயித்துக் காணிக்கையுடன் இந்திரப்பிரஸ்தம்வந்துதர்மராஜருக்குஒப்பித்தது.)

வைம்பாயனர்: — தர்மபுத்ரனான நகுலன் [1]வாஸுதேவனென்னும் அரசனால்ஜயிக்கப்பட்ட திக்கை ஜயித்தவகையையும அவனுடையசெய்கைகளையும சொல்வேன். புத்தியிற்சிறந்தநகுலன் காண்டவப்ரஸ்தத்திலிருந்து புறப்பட்டு மேற்றிசையைநோக்கிப் பெருஞ்சேனையுடன்சென்றான்.

[1] பௌண்ட்ரகவாஸுதேவன்.

தனதுபெரியஸிம்மநாதத்தினாலும படைவீரர்களின் கர்ஜனைகளினாலும தேருருளைகளின்ஒலியினாலும் இந்தபூமியை அதிரச்செய்துகொண்டு தனங்களும் தான்யங்களும பசுக்களும் மிகுதியாகநிரம்பினதும் சுபபிரமணியக்கடவுளுக்குப்பிரியமுள்ளதுமான ரோகீதகமலைக்குச் சென்றான். அவ்விடத்தில சூரர்களான மத்தமயூரகரென்னும் அரசர்களோடு அவனுக்குப பெரியசண்டைநடந்தது. சிறந்தசக்தியுள்ள அந்தநகுலன் நீரில்லாக்காடானதேசமனைத்தையும் தானியங்கள்மிகுதியாகவுள்ள சைரீஷகம, மஹேத்தமென்னும் தேசங்களையும் ஆக்ரோசனென்னும் ராஜரிஷியையும வசபபடுத்தினான். ஆக்ரோசனோடு நகுலனுக்குப பெருஞ்சண்டைநடந்தது அந்தபபாண்டவன் ஆக்ரோசனுடையதேசமாகிய தசார்ணதேசத்தைஜயித்து அங்கிருந்துபுறப்பட்டான். சிறந்தபராக்ரமமுள்ள புருஷச்ரேஷ்டனானநகுலன், சிவிகள், திரிகர்த்தர்கள், அமபஷ்டர்கள், மாலவர்கள், காப்படர்களென்னும் ஐந்துதேசத்தரசர்களையும மத்தியமகேயர்கள், வாடதானர்களென்னும [1]பிராமமணர்களையுமஜயித்து மறுபடியும் திருமபிவந்து புஷ்கரக்ஷேத்திரமாகிய வனத்திலவஸிக்கும் உத்ஸவஸங்கேதர்களின்கூட்டத்தாரை ஜயித்தான். ஸிந்துநதிக்கரையிலிருக்கும் மஹாபலசாலிகளான கிராமணீயரென்பவரையும ஸரஸ்வதிநதியைச்சார்ந்து மத்ஸ்யங்களினால்ஜீவிக்கும சூத்திரர்கள் இடையர்களின்கூட்டங்களையும மலைகளிலவஸிபபவரையும்ஜயித்துப பஞ்சநதமென்னும்தேசத்தையும அமரபர்வதமென்னுமமலையையும உத்தரஜ்யோதிஷம், திவ்யகடமென்னும நகரஙகளையுமஜயித்து அவற்றின் [2]தவாரபாலகனைப பராக்ரமத்தினால வசபபடுத்தினான். அந்தநகுலன் ராமடர்களையும் ஹாரர்களையும ஹூணர்களையும மற்றுமுள்ளமேற்றிசைராஜாக்களனைவரையும தன்கட்டளையினாலேயேகீழ்ப்படுத்தினான். பரதரான ஜனமேஜயரே! அங்கிருந்துகொண்டே வாஸுதேவனுக்குத்தூதனையனுப்பினான். ராஜாவே! அச்சமற்றவனான அவ்வரசன் இவன்கட்டளையைஏற்றுக்கொண்டான். அதன்பிறகு பலவானானநகுலன் மத்ரதேசத்துராஜதானியாகிய சாகலநகருக்குச்சென்று தனதுமாதுலனானசல்லியனைச் சிநேகத்தினாலவசபபடுத்திக்கொண்டான். ஜனமேஜயராஜாவே! மரியாதைக்குரியவனும யுத்தவீரரிற்சிறந்தவனுமாகிய நகுலன் அந்தசசல்லியராஜனால் மரியாதைசெய்யப்பெற்று மிகுதியான ரத்னங்களைப பெற்றுக்கொண்டு புறப்பட்டான். கௌரவச்ரேஷ்ட

---

1 மூலத்தில், 'தவிஜாங்' என்றிருக்கிறது.

2 தேசங்களின்வழிக்காவலானஅரசன்.

னும விசித்ரமானயுத்தங்கள்தெரிந்தவனுமான நகுலன் அதன்பிறகு கடலின்உள்தீவுகளில்வஸிக்கும மிகக்கொடியவரான பஹ்லவர், பார்ப்பார், கிராதர், யவனர், சகரென்னும மிலேச்சராஜாக்களைவசபபடுத்தி அவர்களிடமிருந்து ரத்தினங்களைபபெற்றுக்கொண்டு திரும்பினன். மஹாராஜாவே! அந்தமஹாத்மாவினுடையபொக்கிஷமாகிய பெருந் தனத்தைப் பதினுயிரம்ஒட்டகங்கள் கஷ்டபபடடுச்சுமந்தன. பரதச்ரேஷ்டரானஜனமேஜயரே! ஜயலக்ஷ்மிபொருநதியவனும மாத்ரிபுத்திரனுமானநகுலன் வருணனுல்ரக்ஷிக்கபபட்டதும (பௌண்டரக) வாஸுதேவனுல்ஜயிக்கபபட்டதுமாகிய மேற்றிசையைஜயித்து இந்திரப்பிரஸ்தத்திலிருக்கும் வீரரான யுதிஷ்டிரரிடம்வந்து அந்ததனத்தை அவருக்குஒப்பித்தான்.

**திக்விஜயபர்வம் முற்றிற்று.**

---

முப்பத்தாறுவது அத்தியாயம்.

# ராஜஸூயபர்வம்.

(ராஜஸூயயாகத்தின் ஆரம்பம்.)

தர்மபுத்திரர் ஜனங்களைரக்ஷித்ததினுலும ஸத்தியத்தைக் காபபாற்றினதினுலும் பகைவர்களையொழித்ததினுலும பிரஜைகள் தம்தம கருமங்களில் தவறுமலிருநதனா. வரிகளைச் சரியாகவாங்குவதினுலும் தர்மமாகஆள்வதினுலும் மேகம நிரமபவர்ஷித்தது. தேசம செழிப்பாயிருந்தது. எல்லாததொழில்களும் நன்றுகநடந்தன. பசுக்காத்தல் பயிர்செய்தல் வர்த்தகம இவையெல்லாம் ராஜாவின்ஆளுகையினுல் சிறபபாகநடநதன. ஜனமேஜயராஜாவே! திருடர்கள் மோசம்செய்பவர்கள் ராஜாவின்அபிமானம்பெறறவர்கள் ஆகிய இவர்களிடத்திலும் ஜனங்களில் ஒருவர்க்கொருவரிடததிலும் வஞ்சகப் பேச்சுக்கள் யாராலும்கேட்கபபடவிலலே. யுதிஷ்டிரர் தர்மநதவறுமலிருநததனுல் அநதக்காலத்தில் அனுவிருஷ்டி, அதிவிருஷ்டி, வியாதிகள், தீப்பிடித்தல் இவையெல்லாம்இருக்கவில்லே. அரசர்கள், பிரியத்தைச்செய்வதற்கும் அடுப்பதற்கும் வழக்கமாயுள்ள கப்பத்தைக் கொடுப்பதற்கும் யுதிஷ்டிரரிடம செனறுர்களேயல்லது வேறுகாரியங்களைப்பற்றிச் சென்றதேயில்லே. தர்மராஜருடையபொக்கிஷம் நியாயமாகவந்தபொருள்களினுலேயே அனேகநூற்றுண்டுகள்செலவுசெய்தாலும் அழியாதபடி பெருகியிருந்தது. தர்மராஜாவானவர் தமது

தான்யமமுதலியவற்றின் அளவையும் பொக்கிஷத்தின் அளவையுமறிந்து யாகஞ்செய்வதற்கே நிச்சயஞ்செய்தார். அவருக்குவேண்டியவரனைவரும் தனித்தனியாகவும் சேர்ந்தும், "பிரபுவே! நீர்யாகஞ்செய்வதற்கு இதுதருணம்; இப்போதேசெய்வது யுக்தம" என்றுஉரைத்தனர். அவர்கள் இவ்வாறுபேசிக்கொண்டிருக்கையிலேயே பழமையானரிஷியும் வேதமூர்த்தியும் [1]ஞானிகள்மாத்திரமேகாணக்கூடியவரும் அழிவில்லாதவருட்சிறந்தவரும் உலகத்தின்உற்பத்திக்கும் பிரளயத்துக்கும்காரணரும் சென்றன வருவன நிகழ்வனவாகியஅனைத்துக்கும் ஈசுவரரும் கேசியென்னுமஅஸுரனை ஸம்ஹாரஞ்செய்தவரும் யாதவர்களனைவாக்கும விரோதிகளைக்கொன்று ஆபத்காலங்களில்அபயங்கொடுத்து மதில்போலக்காப்பவரும் புருஷோத்தமருமாகிய கண்ணபிரான் வஸுதேவரை மரியாதையுடன் சேனைத்தலைவராகஏற்படுத்திய பெருஞ்சேனையினாலசூழப்பெற்றவராகத் தர்மராஜாவுக்கு அளவற்றதனக்குவியலை எடுத்துககொண்டுவந்தார். முடிவில்லாததும் அழியாததுமாகிய ரத்னக்கடலான அநந்தத் தனககுவியலையெடுத்துக்கொண்டு தமதுதேரினொலியினால் எங்குமமுழங்கச்செய்து இந்திரப்பிரஸ்தத்தில்பிரவேசித்தார். முன்னமேநிரம்பின அந்நகரத்தை மறுபடியும்நிரப்புவதனால் பாண்டவர்களின்பகைவர்களுக்குத் துயரஞ்செய்பவரானார். கிருஷ்ணபகவான் எழுந்தருளினதினால் பாண்டவர்களின்நகரமானது ஸூரியனில்லாதஇடத்தில ஸூர்யோதயமானதுபோலவும் காற்றில்லாதவிடத்தில்காற்றடித்ததுபோலவும் மகிழ்ந்திருந்தது. அந்தபபுருஷசிரேஷ்டரான யுதிஷ்டிரர், தௌமியர் வியாஸர்முதலியபுரோஹிதர்களோடும் பீமார்ஜுன நகுலஸஹதேவர்களோடும்கூடி மனக்களிப்புடன் கண்ணபிரானையெதிர்கொண்டழைத்து, சாஸ்திரப்பிரகாரம் அதிதிஸத்காரஞ்செய்து ஸுகமாகஉட்கார்ந்தபிறகு குசலப்ரச்னமசெய்து பின்வருமாறு பேசலுற்றார்.

"கிருஷ்ண! உமமாலேதான் இந்தப்புவனிமுழுதும் என்வசத்திலிருக்கிறது. யாதவரே! மிகுந்ததனம் உமது அனுக்ரஹத்தினால ஸம்பாதிக்கப்பட்டது. தேவகிபுத்ரரே! மாதவரே! உமது அனுக்ரஹம்பெற்றநான் இதையெல்லாம் சாஸ்திரப்பிரகாரமாகப் பிராம்மணச்ரேஷ்டர்களுக்கும அக்னிபகவானுக்கும் உபயோகப்படுத்தக்கருதுகிறேன். பகவானே! சிறந்தகைகளையுடையவரே! அதற்காக உம்மோடும் என்தம்பிகளோடும்சேர்ந்து யாகஞ்செய்யவிரும்புகிறேன்.

---

[1] 'தெரிந்தவர்களாகநினைப்பவருக்குத் தெரியாதவரும்' என்பதுபழைய உரை.

அதுவிஷயத்தில் நீர் அனுமதிகொடுக்கக்கடவீர். சிறந்தபுஜங்களை யுடையகோவிந்தா! நீர் உமக்குத் தீக்ஷையைச்செய்வித்துக்கொள் ளக்கடவீர். பகவானே! நீர் யாகஞ்செய்தால் நான் பாவமநீங்கினவ னுவேன். பிரபுவே! அல்லது இந்தத்தம்பிகளுடன் வேள்விசெய் யும்படி எனக்கேஉத்தரவுகொடும். கிருஷ்ணா! உம்மால் அனுமதி கொடுக்கப்பெற்றுத்தான் நான் சிறந்தயாகத்தைச்செய்வேன்" என் றார். அதைக்கேட்டகண்ணபிரான் தர்மராஜாவின்குணங்களின்மிகு தியைப்பற்றி நிரம்பப்பேசி, "ராஜசரேஷ்டரே! நீர்தாம் அரசர்க்கும அரசர்; இந்தமஹாயாகத்திற்குத்தகுதியுள்ளவர். நீரே யாகதீக்ஷை செய்துகொள்ளும். நீர் செய்வதனாலேயே நாங்கள் கிருதார்த்த ராவோம. உமதுநன்மைக்கு நாங்களிருப்பதனால் நீர் நினைத்தயாகத் தைச்செய்யும். என்னையும் காரியங்களில்கட்டளையிடும். நீர்சொல லுவனவற்றையெல்லாம செய்வேன்" என்று யுதிஷ்டிரருக்கு மறு மொழிகூறினார். யுதிஷ்டிரர், "கிருஷ்ணா! ஹ்ருஷீகேசா! நான் நினைத்தபடி நீர்வந்துசேர்ந்ததனால் என்எண்ணம பயன்பட்டது. எனக்குக் காரியஸித்தி நிச்சயம்" என்றுசொன்னார். கிருஷ்ணனால் அனுமதிகொடுக்கப்பெற்ற தர்மராஜா ஸஹோதரர்களுடன்கூட ராஜ ஸூயயாகமசெய்வதற்கு வேண்டியஸாதனங்களைச் சேகரித்தார். அப்போது சத்துருக்களையடக்குகிறவராகிய தர்மராஜர், யுத்தவீரர் களிற்சிறந்தவனாகிய ஸஹதேவனையும மந்திரிகளனைவரையுமபார்த்து, "இந்தயாகத்தின்அங்கங்களையும கருவிகளையும மங்களத்திரவியங் களையும் ஹோமத்துக்குரியபதார்த்தங்களையும தௌமயமுனிவர்முத லியபிராமமணர்களின்சொற்படி பூர்ணமாகவும விரைவாகவும் மனி தர்கள், அவரவர்தகுதிக்குத்தக்கபடி முறையேகொண்டுவரக்கடவர். என்விருப்பப்படி இந்திரஸேனன், விசோகன், அர்ஜுனனுடைய ஸாரதியாகியபூரு இவர்கள் அன்னம்முதலியவற்றைக்கொண்டுவருவ தற்கு நியமிக்கப்படக்கடவர். கௌரவசரேஷ்டனான ஸஹதேவனே! பிராமமணர்களுடையவிருப்பத்தைப் பூர்த்திசெய்யத்தக்கவையும் ருசியும்மணமுமுள்ளவையுமாக எல்லாஉணவுகளும செய்விக்கப்பட வேண்டும்" என்றுகட்டளையிட்டார். யுத்தவீரர்களிற்சிறந்தவனான ஸஹதேவன் தர்மராஜாவானயுதிஷ்டிரர்சொன்னபோதே, "எல்லாம் ஸித்தமாயிருக்கிறது" என்றுஅவருக்குத்தெரிவித்தான். ஜனமேஜய ராஜாவே! பிறகு வியாஸமஹரிஷி வேதங்கள்உருக்கொண்டுவந்தது போன்ற மஹானுபாவர்களான பிராம்மணர்களை ரித்விக்குக்களாக அழைத்துவந்தனர். ஸத்தியவதிபுத்ரரான அவர் தாமே அந்தத்தர்ம

ராஜாவுக்கு பிரம்மாவின்ஸ்தானத்தைவஹித்தார். தனஞ்சயகோத்திரத்தாரிற்பிறந்தவரான ஸுஸாமா என்பவர் ஸாமகானஞ்செய்யும் உத்காதாவாயிருந்தார். பிரம்மஜ்ஞானிகளிற்பிறந்தவரான யாஜ்ஞவல்கிய மாமுனிவர் சிறந்த அத்வர்யுக்களிலதலைவராயிருந்தார். வஸுவின்புத்திரரான பைலர் தௌமியருடன்சேர்ந்து ஹோதாவாயிருந்தார். ஜனமேஜயராஜாவே! வேதங்களிலும் வேதாங்கங்களிலும்கரைகண்டவர்களாகிய இவர்களுடைய புத்திரர்கள் சிஷ்யர்களனைவரும் ஹோதாவின்வேலையைச் செய்துகொண்டிருந்தனர். அவர்கள் புண்ணியாகவாசனஞ்செய்வித்துச் சாஸ்திரோக்தப்பிரகாரம் அந்தயாகத்துக்கு ஸங்கல்பஞ்செய்துகொண்டு அந்தயாகத்துக்குக்குறிப்பிடப்பட்ட பெரியயாகபூமியைப் பூஜைசெய்தனர். அந்தப்பூமியில் ராஜாவினால் அனுமதிகொடுக்கப்பெற்ற சிற்பவேலைக்காரர்கள் தேவகிருஹங்களைப்போல நல்லவாஸனையுள்ளவையும் விசாலமுமானகிருஹங்களைக்கட்டினர். ராஜாக்களிலும் மனிதர்களிலும்சிறந்தவரான அந்ததர்மராஜா தமக்கு அந்தஸமயத்துக்கு மந்திரியாயிருந்தஸஹதேவனைப் பார்த்து, "நீ ராஜாக்களையழைப்பதற்கு விரைவாகச்செல்லும்தூதர்களை உடனே அனுப்பு" என்று கட்டளையிட்டார். ராஜாவின்சொல்லைக்கேட்டவுடன் ஸஹதேவன் தூதர்களையழைத்து, "தேசங்களிலுள்ளபிராமணர்கள் க்ஷத்திரியர்கள் வைசியர்கள் கௌரவிக்கத்தக்க சூத்திரர்கள் எல்லாரையுமழைத்துவாருங்கள்" என்றுகட்டளையிட்டான். அந்தத்தூதர்கள் ஸஹதேவன்கட்டளைப்படி எல்லாராஜாக்களையுமழைத்தனர். இன்னும் அனேகதூதர்களையும் ஸஹதேவன் அனுப்பினான். தூதர்கள் குதிரைகளிலேறிப் பலதேசங்களுக்குச் சென்றனர். ஜனமேஜயராஜாவே! ராஜாவானயுதிஷ்டிரர் பீஷ்மரையும் த்ரோணரையும் திருதராஷ்டிரனையும் விதுரரையும் கிருபரையும் தமதுபிராதாக்களான துரியோதனன்முதலியோரையும் தம்மன்பர்களையும் அழைப்பதற்காக நகுலனை அஸ்தினபுரத்துக்கனுப்பினார். பாரதரே! அதன்பிறகு அந்தப்பிராமணர்கள் குந்திபுத்திரரானயுதிஷ்டிரருக்குக் குறித்தகாலத்தில் ராஜஸூயயாகதீக்ஷைசெய்வித்தனர். தர்மமேயுருவமெடுத்ததுபோன்றவரும் புருஷச்ரேஷ்டரும் தர்மத்தில்மனமுள்ளவருமான யுதிஷ்டிரர், கேட்டையுமமூலமும்சேர்ந்த அமாவாசையில் மான்தோலைப்போர்த்துப் புள்ளிமான்தோலையுடுத்துத் தேகத்தில்வெண்ணெயைத்தடவித் தீக்ஷைசெய்துகொண்டு ஆயிரக்கணக்கானபிராம்மணர்களால்சூழப்பட்டவராகித் தம்ஸஹோதரர்களோடும் சுற்றத்தாரோடும் ஸ்நேஹிதர்களோடும் மந்திரிகளோடும்

பலதேசங்களிலிருந்துவந்த க்ஷத்திரியஜாதியாரான அரசர்களோடும் ஸபையாரோடுங்கூடி யாகசாலைக்குச்சென்றார். எல்லாவித்தைகளிலும் தேர்ந்தவர்களும் வேதவேதாங்கங்களிற் கரைகண்டவர்களுமாகிய பிராம்மணர்கள் பற்பலதேசங்களிலிருந்து அங்கேவந்தனர். உடனே ஆயிரக்கணக்கான சிறபவேலைக்காரர்கள் தர்மராஜாவின்கட்டளையினால் அவர்களுக்கும் அவர்களுடன்கூடவந்தவர்களுக்கும் தனித்தனியே மிகுதியானபோஜனங்களும் வஸ்திரங்களுமுள்ளவையும் எல்லாப்பருவங்களின்பலன்களுமநிரமபினவையுமான வீடுகளைக்கட்டினர். ராஜாவே! ராஜாவினால் பூஜிக்கபபெற்றஅநதபபிராமணர்கள் நாட்டியங்களையும் நர்த்தனங்களையும் பார்த்துக்கொண்டும பலகதைகளைச்சொல்லிக்கொண்டும் அந்தவீடுகளில்வஸித்தனர். ஸந்தோஷத்துடன்பூஜித்துக்கொண்டும் பேசிக்கொண்டுமிருக்கும மஹாத்மாக்களான பிராமமணர்களின்பெருங்கோஷம அங்கே எப்போதும் கேட்கப்பட்டது. ‘இவர்களுக்குக் கொடுங்கள்கொடுங்கள்’ என்றும் ‘நீங்கள் புஜியுங்கள் புஜியுங்கள்’ என்றும இவ்வகையானபேச்சுக்களே அங்கே எபபோதுமகேட்கபபட்டன. பாரதரே! லக்ஷக்கணக்கான பசுக்களையும படுக்கைகளையும பொன்களையும வேலைக்காரிகளையும ஒவ்வொருவருக்கும தர்மராஜாகொடுததனர். ஸ்வர்க்கத்துக்கு இந்திரனைபபோலப் பூமிககு ஒபபற்றவீரரும மஹாத்மாவுமான தர்மராஜாவின் அந்தயாகம இவ்வாறுநடநதது.

---

## முப்பத்தேழாவது அத்தியாயம்.

## ராஜஸூயபர்வம். (தொடர்ச்சி.)



(அழைக்கப்பட்டவர்கள்எல்லாரும் யாகத்துக்குவந்துசேர்ந்தது.)

ஜனமேஜயராஜாவே! அதன்பிறகு மரியாதைசெய்துஅழைக்கப்பட்டஅரசர்கள், தேவவிமானங்களிலிருநது தேவர்கள புறப்படுவதுபோலத் தமதமகிருஹங்களிலிருநதுபுறபபட்டனர். பாரதரே! அந்தராஜாக்கள் மிககவிலைபெற்ற பலவகைரத்னங்களையெடுத்துக்கொண்டு அநத அநதத்திசைகளிலிருநது அங்கேவந்தனர். புருஷச்ரேஷ்டரே! அந்தயாகத்தைப்பற்றித்தெரிந்த அனேகஅரசர்கள் தூதர்கள் சொன்னதைக்கேட்டு ,மனமகிழ்சசியுடன் பலவகைத்திரவியங்களை மிகுதியாகஎடுததுக்கொண்டு தர்மராஜாவையும அவருடையஸபையையும்பார்க்கவிரும்பி அவருடையயாகத்துக்குச்சென்றார்கள். யுத்தங்

களில்ஜயிப்பவனுகிய அந்தநகுலன் ஹஸ்தினுபுரம்சேர்ந்து பீஷ்மரை யும் திருதராஷ்டிரனேயுமழைத்தான். கரங்களேக்குவித்துவணங்கி நின்று பாதகுலத்தோராகிய திருதராஷ்டிரனேயும் பீஷ்மரையும் சிறந்த புத்திமானுனவிதுரரையும் அழைத்தான். பிறகு துரியோதனன்முத லான பிராதாக்களனேவரையும அழைத்தான். துரோணுசாரியர்முத லான அனேவரும மரியாதையோடு அழைக்கபபட்டனர். அதன்பிறகு திருதராஷ்டிரனும பீஷ்மரும புததியிற்சிறநதவிதுரரும துரியோத னன்முதலானஸஹோதரர்களனேவரும மனமகிழ்ந்து பிராமமணர் களேமுன்னிட்டுக்கொண்டு யாகத்துக்குச்சென்றனர்.

காந்தாரதேசத்தரசனுகிய ஸுபலன், மஹாபலசாலியானசகுனி, அசலன், விருஷகன், ரதயுத்தஞ்செய்பவரில்சிறந்தவனுகிய கர்ணன், பலவானுனசல்லியன், மிக்கபலசாலியானபாஹ்லீகன், குருவம்சத்தவ னுன ஸோமதததன், பூரி, பூரிச்ரவன், சலன், அசவ்ததாமா, கிருபர், த்ரோணர், ஸிநதுதேசத்தரசனுனஜயத்ரதன், புத்திரர்களுடன்கூடிய துருபதன்,சால்வராஜன், பிராக்ஜ்யோதிஷநகரத்தரசனும் மஹாரதனு மான பகதத்தராஜன் இவர்களும்சென்றனர். அந்தப்பகதத்தராஜன் கடலிலுள்ளதீவுகளில்வஸிக்கும் மிலேச்சராஜரெல்லாருடனும் சென் ருன். மலேநாட்டரசர்களும் ப்ருஹத்பலனென்னும்அரசனும், பௌ ண்ட்ரகவாஸுதேவனும, வங்கம, களிங்கம், ஆகர்ஷம், குந்தலம், காலவம், ஆநதிரம், திராவிடம, சிங்களம, காச்மீரமென்னும்தேசத் தரசர்களும், மஹாபராக்ரமசாலியான குந்திபோஜன், கௌரவாகன னென்னுமரசன், மறறுமுள்ளசூரர்களானபாஹ்லீகதேசத்தரசர், இர ண்டுபுததிரர்களுடன்கூடியவிராடன், மஹாபலசாலியான மாவேல் லன், மஹாவீரனுன சிசுபாலன்ஆகியஇவர்களும, யுத்ததில்அடங்கா தகொழுப்புள்ளபலராமர், அனிருததன், கங்கன்,சாரணன்,கதன்,பிரத் யும்னன், ஸாம்பன், சூரனுனசாருதேஷ்ணன், உல்முகன், நிசடன், வீர னுனஅங்காவஹன்முதலான மஹாரதர்களான யாதவர்களனேவரும், மத்தியதேசமுதலான அனேகதேசங்களுக்கதிபதிகளான ராஜாக் களும, தர்மராஜாவின்ராஜஸூயயாகததிற்கு வநதனர். ராஜாவே! தர்மராஜாவின்கட்டளேயினுல் பலவகைபபக்ஷணங்களுள்ளவையும்வா விகளாலும் சோலேகளாலுமசோபிபபவையுமான விடுதிகளே அவர் களுக்கு மநதிரிகள்கொடுததனர். தர்மபுத்திரர் அந்தமஹாத்மாக் களுக்குச் சிறந்தமரியாதைசெய்தனர். மரியாதைசெய்யப்பெற்ற அர சர்கள் கைலாஸமலேயின்சிகரங்களுக்கொப்பானவையும் மனத்திற்கினி யவையும் சிறந்தபொருள்களினுல்அலங்கரிக்கப்பட்டவையும் செவ்

வையாகக்கட்டப்பட்ட உயர்ந்தவெண்மையானமதில்களினுல் நாற்புற மும்சூழப்பட்டவையும் பொன்மயமானபலகணிகளுள்ளவையும ரத்தினத்தளவரிசைகளினுல்அலங்கரிக்கப்பட்டவையும் ஏறுதற்குச்சுக மானபடிகளுடையவையும உயர்ந்த ஆஸனங்கள்முதலியசாமான்களுள்ளவையும் புஷ்பமாலைகளாலமறைக்கப்பட்டவையும உயர்ந்தஅகில்மணமகமழ்கின்றவையும ஹமஸத்திற்குமசந்திரனுக்கும் ஒப்பான நிறமுள்ளவையும ஒருயோஜனைதூரத்திலேயே எளிதாகக்காணப்படுகின்றவையும் விசாலமானவையும நேருக்குநேரானவாயில்களுள்ளவையும் இன்னும்அனேகம்சிறபபுக்களுளளவையும் பலவகைத்தாதுக்கள்சேர்ந்த இமயமலைசிகரங்கள்போன்றவையுமான அவரவர்களுடையவிடுதிகளுக்குசசென்றனா. அவ்வரசர்கள அங்கங்கே சிரமபரிகாரஞ்செய்துவிட்டு, பெருந்தக்ஷிணைகொடுபபவரும ஸபையோர்கள் அனேகரால்சூழப்பட்டவரும தர்மராஜாவுமான யுதிஷ்டிரரைக்கண்டனர். அப்போது அரசர்களும பிராமமணர்களும மஹரிஷிகளும நிரமபின அநதச்சபை தேவர்கள்நிரம்பின தேவலோகமபோலவிளங்கிற்று.

## முப்பத்தேட்டாவது அத்தியாயம்.

## ராஜஸூயபர்வம். (தொடர்ச்சி)



### (ராஜஸூயயாகம்நடத்தியது.)

ராஜாவே! பிறகு யுதிஷ்டிரர், பீஷ்மரையும த்ரோணரையும எதிர்கொண்டழைத்து அபிவாதனஞ்செய்து, பீஷ்மர், த்ரோணர், கிருபர், அசுவத்தாமா, துரியோதனன், விவிமசதிஇவர்களைப்பார்த்து, "நீங்கள்எல்லாரும் இநதயாகத்தில் என்னைசசிறபபிககக்கடவீர்; இங்கே எனக்குள்ளசெல்வங்களெல்லாமஉங்களுடையனவே. என்னுல்அழைக்கப்பட்டநீங்கள் உங்களிஷ்டபபடி என்னை நடத்தக்கடவீர்" என்றுசொன்னுர். தீக்ஷைசெய்துகொண்ட அந்தப்பாண்டவஜ்யேஷ்டரான தர்மராஜர் அவர்களெல்லாரையும பார்த்து இவ்வாறு சொல்லி உடனே அவரவருக்கு ஏற்றவேலைகளில் அவரவர்களை நியமித்தார். போஜனத்துக்கு வரிசையாக உட்காரவைபபதிலும் எச்சிலைச்சுத்திசெய்விபபதிலும். போஜனங்களைவிசாரிப்பதிலும் யுயுத்ஸுவையும், பக்ஷணங்களையும் போஜனங்களையும்பற்றியவேலைகளில் துச்சாஸனனையும், பிராம்மணர்களையழைப்பதில் அசுவத்தாமாவையும், ராஜாக்களுக்குமரியாதைசெய்வதில் ஸஞ்சயனையும், செய்தவற்

றையும் செய்யவேண்டியகாரியங்களையும் செம்மையாகபபார்பபதில் பீஷ்மத்ரோணர்களையும, பொன்னையுமபொன்நாணயங்களையும ரத்தினங்களையுமபார்த்துக்கொள்வதிலும் தக்ஷிணைகொடுபபதிலும் கிருபாசாரியரையும ஏற்படுத்தினார். அவ்வாறே மறறபபுருஷசரேஷ்டர்களையும் அவாவருக்குததகுதியானகாரியங்களில் பிரவிர்த்திக்கச் செய்தார். நகுலனுலஅழைததுவரப்பட்ட பாஹ்லீகன, திருதராஷ்டிரன், ஸோமதத்தன், ஜயத்ரதன்முதலானவர்கள் அங்கேராஜாவைப போலவிளங்கினர். எலலாத்தாமங்களும் தெரிநதவரான க்ஷததாவென்னபபட்ட விதுரா பொருட்செலவுசெய்பவராயிருநதார். துரியோதனன், எல்லாரிடங்களிலுமிருநதுவருப காணிக்கைகளைவாங்கினன். பதிவரதைகளான குநதியும காநதாரியும் ஸ்திரீகளுக்குமரியாதைசெய்தனர். அவாகளுடைய மருமக்கள்மாரனைவரும அவாகளின்கட்டளைகளை விரைவாகசசெய்தனர். அரஜுனன் காரியம்நிறைவேற்றுவதற்காகக் கிருஷ்ணன்ஸமீபததிலேயேயிருந்தான். எல்லா உலகங்களாலுமபூஜிக்கப்பட்ட கிருஷ்ணபகவான் மேலானபலனைப் பூரணஞ்செய்யவிரும்பி, பிராம்மணர்களின் பாதப்ரக்ஷாளனகாரியத்தில் தாமேஅமர்நதார். தாமாராஜரையும அவாஸபையையும பார்க்க விரும்பி வநதவர்கள்எவரும் ஆயிரத்துக்குததாழ்நத காணிக்கையை அங்கே கொண்டுவரவில்லை. அநத யாகததில அனேகரத்தினங்களினல் ராஜாக்கள் தர்மராஜரைச் சிறபபிததனா. நாமகொடுக்குமரத்னங்களினலேயே தர்மராஜர் யாகத்தை முடிக்கவேண்டுமேயென்று தாம் மற்றவர்களிலும் மேற்போகவிரும்பி ராஜாக்கள் திரவியங்களையளித்தனர். மஹாத்மாவான தர்மராஜாவின்ஸபையானது மேல்மாளிகைகளும்சிகரங்களுமுள்ளவையும் சேனைகளால் சூழபபட்டவையும் அனேகரதனங்களினல விசிதரங்களானவையும சிறநதஐசுவரியமும் மிக்கஅழகுமபொருநதியவையும தேவவிமானங்களைப்போலச செய்யபபட்டவையுமான ராஜகிருஹஙகளாலும் பலதேசங்களிலிருந்து வநதிருக்கும்அரசர்களின் சிறநதஅரண்மனைகளாலும யாகததுக்காக வநத திக்பாலகர்களின்விமானங்களென்னும ரதங்களாலும் பிராம்மணர்கள்வஸிக்குமகிருஹங்களாலும் மிக்கஅழகாயிருந்தது. ஐசுவரியத்தினல வருணபகவானைவெலலுகிற யுதிஷ்டிரர், [1] ஆறுஅக்னிகளும் நிரம்பின தக்ஷிணைகளுமுள்ள யாகத்தைச்செய்தார். வேண்டினவற்றையெல்லாம் நிரமபக்கொடுதது எல்லாஜனங்களையும் திருப்திசெய்வித்

---

[1] ஆறுஅக்கினிகளாவன : ஆரம்பணீயம், க்ஷத்திரத்ருதி, வியுஷ்டி, த்விராத்திரம், தசபேயம், ஸப்தபேயம்.

தார். அன்னமும் அனேகபக்ஷணங்களுமுள்ளதும் புஜித்துத்திருப்தியடைந்தஜனங்கள்நிரம்பினதும ரதனங்களாகிறகாணிக்கைகள் மிகுந்ததுமாக அந்தச்சபையிருந்தது. மந்திரதந்திரங்களிலும ஸ்வரலக்ஷணங்களிலும் தேர்ந்தவர்களானமஹாரிஷிகளால் நடத்தப்பட்ட அந்த யாகத்தில் [1]இடாஹோமம் ஆஜ்யஹோமமென்னும்கிரியைகளால் தேவர்கள் திருப்தியடைந்தனர். தேவர்களைப்போலவே பிராம்மணர்கள் முதலான எல்லாவருணத்தாரும தக்ஷிணைகளாலும போஜனங்களாலும் மிக்கபொருள்களாலும அந்தயாகத்தில மிகுந்தஸந்தோஷத்தோடு திருப்தியடைந்தனர்.

ராஜஸூயபர்வம்முற்றிற்று.

---

முப்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## அர்க்காஹரணபர்வம்.



(தர்மபுத்திரர் கிருஷ்ணனுக்கு முதல்மரியாதைசெய்ததைப்பற்றிச் சிசுபாலன் ஆக்ஷேபித்தது.)

பிறகு அபிஷேசனீயமென்னும் ராஜஸூயத்துக்கு அங்கமான ஸோமயாகஞ்செய்யுங்காலத்தில் பூஜிக்கத்தக்கமஹரிஷிகளும் பிராம்மணாகளும ராஜாக்களுடன்கூட அந்தாவேதியென்னும யாகசாலையில் பிரவேசித்தனா. அப்போது மஹாத்மாவானயுதிஷ்டிரருடைய அந்த அந்தர்வேதியில் ராஜரிஷிகளுடன்கூட உட்கார்ந்திருந்த நாரதர்முதலிய தேவரிஷிகளும தேவாகளும பிரம்மஸபையில் சேர்ந்திருப்பதுபோல விளங்கினா. மிகுந்தமகிமையுள்ள அவர்கள் யாககாரியங்களின்இடையில் ராஜாவினருகில் வாதங்கள்செய்தனர். இஃது இவவாறே ஆகுமென்றும இவ்வாறுகாதென்றும் இஃது இவ்வாறும்ஆகலாமென்றும இது வேறுவிதமாகக் கூடாதென்றும பலா ஒருவர்க்கொருவர் [2]விதண்டாவாதம பேசினா. அப்போது அவர்களிலசிலர் தர்ககசாஸ்திரத்தினால நிச்சயிக்கப்பட்ட யுக்திகளைக்கொண்டு சிறியவிஷயங்களைப பெரியவைகளாகவும பெரியவிஷயங்களைச் சிறியவைகளாகவும் செய்தனா. அவர்களில் சிலமேதாவிகள் பருந்துகள் ஆகாயத்திலுள்ள மாமஸத்தையடிப்பது போலப் பிறர்சொன்ன

---

1 அன்னமாகிய அவிஸினால்செய்யும்கிரியை.

2 விதண்டாவாதம் = தன்மதத்தை வலியுறுத்தாமலே பிறர்சொல்வதைக் கண்டிப்பது.

விஷயங்களை [1]அடித்தனர். சிலர் தர்மசாஸ்திரங்களிலும் சிலர் ராஜ நீதிசாஸ்திரங்களிலும் ஸமர்த்தருமு சிலர் சிறந்ததவமுள்ளவரும் எல்லாப் பாஷ்யங்களையும் கற்றுணர்ந்தவர்களில் சிறந்தோருமாகிய அந்தச்சபையோர் வாதஞ்செய்து மகிழ்ந்தனர். வேதங்களெல்லாம் தெரிந்த மஹரிஷிகளும் பிராமணர்களும் தேவர்களுமநிரம்பின அந்தப்பெரிய அந்தர்வேதியானது நக்ஷத்திரங்கள்நிரம்பின ஆகாயம் போல விளங்கிற்று. ஜனமேஜயராஜாவே! அப்போது யுதிஷ்டிரருடையகிருஹத்தில் அந்த அந்தர்வேதியிலுள்ளஸபையில் சூத்திரனாவது அனுஷ்டானம்தவறினவனாவது ஒருவனும இல்லை. சிறந்த ஐசவரியமுள்ளவரும சிறந்த ஞானமுள்ளவருமான தர்மராஜாவின் யாககாரியத்திலுண்டான அந்தச்சிறப்பைப்பார்த்து நாரதர்மகிழ்ந்தார். ஜனமேஜயராஜாவே! அப்போது க்ஷத்திரியர்கள்எல்லாரும் வந்துசேர்ந்திருப்பதைக்கண்டு அந்தநாரதமுனிவர் ஒருசிந்தையுற்றார். புருஷச்ரேஷ்டரே! முன்பு தேவர்கள் தங்கள் அம்சங்களினால் பூமியில்அவதரிக்கும் தருணத்தில் பிரமமலோகத்திலநடந்த பூர்வகதையைநினைந்தார். ஜனமேஜயரே! அது தேவர்களின்சேர்க்கையென்றுஅறிந்து நாரதர் தாமரைக்கண்ணராகிய திருமாலை மனத்தில்தியானித்தார். "எல்லாவற்றையும் படைப்பவராகிய எவர் முன்பு தேவர்களைக்கட்டளையிட்டாரோ அந்தப்பிரபுவும் அஸுரர்களை யழிப்பவருமாகிய மகாவிஷ்ணு அஸுரர்களைக்கொன்று தம்பிரதிஜ்ஞையைக் காப்பதற்காகத் தாமே க்ஷத்ரியவம்சத்தில வீரராகப்பிறந்திருக்கிறார். சிவஸ்வரூபியும பிரம்மதேவரூபியுமான பகவான் நாராயணன் தேவர்கள்எல்லாரையும் பார்த்து, 'நீங்கள் ஒருவரையொருவர் கொன்றுவிட்டுத திரும்பவும உங்கள லோகங்களை அடைவீர்கள்' என்று கட்டளையிட்டுத் தாமும யதுவம்சத்திலவதரித்தார். வம்சத்தை விருத்திசெய்கிறவரில் சிறந்தவரான பகவான் பூமியிலுள்ள அந்தகர்களும் விருஷ்ணிகளுமாகிய இவர்களின் வம்சத்தில் நக்ஷத்திரங்களுக்கிடையில் சந்திரன்போல மிகச்சிறப்புற்று விளங்கினர். இந்திராதி தேவர்அனைவரும எவருடைய கைவன்மையைப் பற்றிக் கொண்டிருக்கின்றனரோ சத்துருஸம்ஹாரம்செய்பவரான அந்தத் திருமால் மனிதனைப்போலிருக்கிறார். பெருமபொருளும தாமேயவதரிப்பவருமான பகவான் இவ்வளவுபலமுள்ள இந்தக்ஷத்திரியஜாதியைத் திரும்பவும் தாமே ஸம்ஹரிக்கப்போகிறாரே, ஓ! ஓ! ஆச்சரியம்" என்று எல்லாந்தெரிந்தநாரதர் சிந்தித்தார். தர்மந்தெரிந்த

[1] ஜயித்தனர்.

வர்களில் ச்ரேஷ்டருமசிறந்தபுத்தியுள்ளவருமான அந்தநாரதமுனி வர் யாகங்களாலாராதிக்கததக்க ஈசுவரரான நாராயணனைக் கண்ண பிரானென்றறிந்து விவேகமுள்ள தர்மராஜருடைய அந்தப்பெருவேள் வியில் கௌரவத்தோடிருந்தார்.

அதன்பிறகு சிறநதகுணங்களெல்லாம் பொருநதினவரும் குண சாலிகளிற்சிறநதவரும் பரிசுத்தமானமனமுடையவரும் பகைவரை வெல்லுகிறவரும் பாஞ்சாலசேனைகளின்முன்னே செலலுகிறவருமான யாதவர்களனைவரும் தங்கள் கடமையென்றுநினைத்துத தங்கள்மனை விகளோடும் சுறறததாரோடும மநதிரிகளோடுங்கூட ரத்னக்குவியல் களையெடுதது கொண்டுவநதனர். தூரதேசமாயிருநததனுலும் பார மதிகமாயிருநததனுலும் ஸநதோஷமுள்ள அவர்கள் பகவானுக்குப் பின்வநதுசேரநதனா. பகைவர்கூட்டங்களையழிபபவரும் ஜனனமில் லாதவரும சகராயுததாரியும யாதவசரேஷ்டருமானகண்ணன் பின் வநதுசேர்ந்தசேனையையழைதது வஸுதேவரைச சேனைக்கதிபதி யாகவைத்து யாகஞ்செய்யும யுதிஷ்டிரரிடமசென்ருர். மாதவர் தர்ம ராஜாவுக்காக அளவறறதனக்குவியலை முன்னிட்டுக்கொண்டு காண்ட வபரஸ்தத்துக்குவநதார். அவ்விடததில யஜ்ஞத்திறகாகவநது மின்ன லோடுகூடிய மேகங்கள்போன்ற தேகமுளளவர்களும் ஸிம்மங்கள போன்ற பலசாலிகளுமாகப பூமியைமறைததுநிற்கும் சிசுபாலன் பக்ஷத்திறசேர்நத அரசக்கூட்டங்களையெல்லாம யானைக்கூட்டததலை வன் யானைக்கூட்டத்தலைவர்களைபபாாபபதுபோலப பார்த்துக்கொண் டும ஜனக்கூட்டங்கள்வற்றுத கடலபோன்ற ராஜக்கூட்டத்தைத் தம ரதகோஷததினுல கலக்கிக்கொண்டும் கண்ணபிரான்வநதார். கிருஷ் ணன்வநததனுல பாண்டவர்களின்நகரம் ஸூர்யனில்லாதவிடத்தில் ஸூர்யன் உதயமானறபோலவும காறறிலலாதவிடத்திற காற்றடித் தாற்போலவும் ஸந்தோஷமடைநதது.

ராஜநீதியும தர்மசாஸ்திரமும்தெரிநதவனும் மனிதர்களின்தாா தாம அறிந்தவனும மாத்ரிபுதானுமான ஸஹதேவன் பிராம்மணர்களை யும க்ஷத்ரியர்களையும் பூஜிபபதறகுநியமிக்கபபட்டிருந்தான். உலகங்க ளுக்குஸூர்யனைப்போலத தம்ஒளியோடுவிளங்கிக்கொண்டுயாகபூமி யில்பிரவேசிப்பவரும, பலராமருக்குஇளையவரும், ஈச்வரரும், சக்திக ளின்சேர்க்கையுள்ளவரும், பிரம்மரிஷியும், அறிநதோமென்றிருபப வருக்குக்காணபபடாதவரும, பிரம்மநிஷ்டர்களான வயதில்முதிர்நத பெரியோர்களுக்கு உய்யுமவழியாகவும் ஸ்தாவரஜங்கமங்களனைத்திற் கும்பிறப்பிறப்புக்களுக்கிடமாகவுமிருப்பவரும், அடுததவரைத்தவற

தைப் பிளக்கப்போகின்றன. உன்னேயும் உனதுபுத்ரர்களேயும் அமைச்சர்களேயும் பராக்ரமசாலிகளான பாண்டவர்களேயும் கொன்று சிறந்த புத்தியுள்ள ஜராஸந்தன், கம்ஸன், கேசி, நரகன் இவர்களுடைய கடனேயும் அப்படியே, தீர்த்துக்கொள்ளப போகிறேன்" என்று சொன்ஞன். இவ்வாறுசொல்லிக் கோபததிஞற் சிவந்தகண்களே யுடைய சிசுபாலன், நாற்புறங்களிலும பாணங்களேவர்ஷித்துக் கிருஷ்ணனே மறைத்தான். பிறகு கிருஷ்ணன் அஸ்திரத்திஞலேயே அனேகபாணங்களேயும் அறுத்துப் பாணவர்ஷங்களிஞல் சிசுபாலனே யும மறைக்கததொடங்கிஞர். மஹாரதர்களான அவ்விரண்டுவீரர் களுமம மறைநதுபோனதைக்கண்டு அவ்விருவரையும எல்லாப்பிராணிகளும், "நல்லது, நல்லது; இபபடிபபடடயுத்தம் இதற்குமுன் நாங்கள் கண்டதிலலே" என்று புகழ்ந்தன. பிறகு சிசுபாலன் மூன்று பாணங்களிஞல கிருஷ்ணனே உடனே அடிததான். கிருஷ்ணனும அநதயுததத்தில ஐநதுபாணங்களிஞல் சிசுபாலனே அடித்தார். பல சாலியான கிருஷ்ணன் மறுபடியும எழுபதுபாணங்களிஞல் சிசுபாலனே அடித்தார். கிருஷ்ணஞல் அதிகமாக அடிக்கப்பட்ட சிசுபாலன் கோபம்மேற்கொண்டு கூரமையான பாணங்களிஞல கிருஷ்ணனே மார்பிலடித்தான். அவன் மறுபடியும ஸமயமபார்த்து மூன்று பாணங்களிஞல கிருஷ்ணனேயடிததுக் காஜித்தான். பிறகு மிகக் கொடியயுத்தத்தை அவ்விருவரும வேகமாகச்செய்தனர். அப்போது யுத்தத்தில் அவ்விருவரும் நகங்களால புலிகள்போலவும் தநதங்களிஞல் மஹாகஜங்கள் போலவும் கோரபபறகளிஞல் சிங்கங்கள்போலவும் கால்களிஞல கோழிகள்போலவும கூர்மையான பாணங்களிஞல் ஒருவரையொருவர் பிளநதனா; அப்போது கோபித்து மிகச் சிறந்தசரமாரியைப் பொழிந்தனர். அவவிரண்டு புருஷச்ரேஷ்டர்களும் பாணங்களாலேயே பாணங்களேத்துணித்து மனிதர்களுக்கு முடியாத பயங்கரமான அஸ்த்ரயுத்தத்தைச் செய்தனர். பராக்ரமசாலியான சிசுபாலன் ஆக்னேயாஸ்த்ரத்தையிடுததான். கிருஷ்ணன் உடனே அதைவாருணஸ்த்ரததிஞல் அழித்தார். சிசுபாலன் உடனே குபேராஸ்த்ரத்தைப் பிரயோகித்தான். ஜகத்பிரபுவான கண்ணன் அதைக் குபேராஸ்த்ரத்திஞலேயே விரைவாகஅழிததார. பிறகு காலத்திஞல் மதிதப்பின சிசுபாலன் கோபித்து யமாஸ்த்ரததைப்பிரயோகித்தான். கிருஷ்ணன் யமாஸ்த்ரத்திஞலேயே யமாஸ்த்ரத்தையடித்தார். கிருஷ்ணபகவான் கந்தாவாஸ்த்ரத்திஞல் கநதர்வாஸ்த்ரத்தையும், மானவாஸ்த்ரத்திஞல் மானவாஸ்த்ரத்தையும், வாயவ்யா

த்ஸ்த்ரத்தினால் வாயவ்யாஸ்த்ரத்தையும், ரௌத்ராஸ்த்ரத்தினால்ரௌத்ராஸ்த்ரத்தையும், ஐந்திராஸ்த்ரத்தினால் ஐந்திராஸ்த்ரத்தையும், வைஷ்ணவாஸ்த்ரத்தினால் வைஷ்ணவாஸ்த்ரத்தையும் அடித்தார். மஹாபலசாலியான அவர்கள் இவ்வாறு அஸ்த்ரங்களைப்பிரயோகித்து யுத்தஞ்செய்தனர். பலசாலியான சிசுபாலன் பிறகு யுத்தத்தில் மாயையையுண்டாக்கி, கதாயுதங்கள், முஸலங்கள், சக்தியாயுதங்கள், தோமரங்கள், அம்புகள், கோடாலிகள், முசுண்டிகள் இவற்றைக் கிருஷ்ணன்மேற் பொழிந்தான். கேசியைக்கொன்றவராகிய கிருஷ்ணபகவான் அவற்றையெல்லாம் வீணாகாத அஸ்த்ரத்தினால் அழித்தார். யுத்தத்தில் சேதிராஜன் மிகக்கொடியகல்மழைபொழிந்தான். பிரபுவானவர் கோபித்து அதை வஜ்ராஸ்த்ரத்தினால் பொடிசெய்தார். அதன்பிறகு சேதிராஜன பயங்கரமான ஜலவர்ஷத்தைப பொழிந்தான். கிருஷ்ணபகவான் வாயவ்யாஸ்திரத்தினால் அதை நூறுகூறாக்கி விலக்கிவிட்டார். மஹாரதரானகிருஷ்ணன் சிசுபாலனுடைய மாயைகளெல்லாவற்றையுமஅடித்துச் சற்றுநேரம அவனுடன் ஸமயுத்தம்செய்தார். தமகோஷன்மகனான அந்தச்சேதிராஜன் பாணயுத்தஞ்செய்துகொண்டே கிருஷ்ணனைபபயமுறுத்தி, "இப்போது என்பாணங்கள் கிருஷ்ணனைக் கிருஷ்ணனாயில்லாமற்செய்யட்டும்" என்று துணிவாகச்சொன்னான். துஷ்டபுத்தியுள்ளவனும் சிறந்த வீரனுமானசிசுபாலன் இவ்வாறுசொல்லிக் கிருஷ்ணன்மேல் உக்ரமான சரமாரிபொழிந்தான். ஒரு நொடிநேரத்தில் பாணங்களினாலறுக்கப்பட்ட அங்கங்களையுடைய கண்ணபிரான் மதயானையானது மதஜலத்தைப்பெருக்குவதுபோல ரக்தத்தைபபெருக்கினார். மஹாத்மாவானகிருஷ்ணனுடையஸாரதியும் ரதமும மலைகள்போன்ற குதிரைகளும் பாணங்களால் மறைக்கபபட்டுக் காணப்படாமற் போயின. கிருஷ்ணன் அந்தநிலைமையிலிருந்ததைக்கண்டு பிராணிகள்கதறின. அப்போது தாருகனென்னும்ஸாரதி யாதவசரேஷ்டரானகிருஷ்ணனை நோக்கி, "மாதவரே! இப்படிபபட்டசண்டையை இதற்குமுன் நான் கண்டதில்லை. உமது பிரபாவத்தினால் நிற்கலாமென்றுநிற்கிறேன். ஜனார்த்தனரே! இல்லாவிட்டால் என்உயிர்நில்லாது. கோவிந்தரே! ஆதலால், நன்றாகஆராய்ந்து உடனே இவனைவதஞ்செய்யக்கடவீர்" என்றான். இவ்வாறு ஸாரதியினாற்சொல்லபபட்டகேசவர், (அவனைநோக்கி,) "இவன் முன்னே தேவர்களுக்குச்சத்துருவும் வரம்பெற்றதனால்கர்வமடைந்தவனும அதிகபலசாலியுமான ஹிரண்யகசிபுவென்னும் அஸுரனாகஇருந்தான். பிறகு அதிகபராக்ரமசாலி

யான ராவணனென்னும ராக்ஷஸனாகப்பிறந்தான். அந்தப்பலத்தின் வன்மையினாலேதான் என்பலத்தை மதிக்கவில்லை. இந்தத்துராத் மாவுக்கு ஒவ்வொருகாலத்திலும நானே யமனாயிருப்பவன். ஸார தியே! ஆதலால, அச்சப்படவேண்டாம். நானிருக்கும்போது இவ னொன்றுமில்லை" என்றுசொன்னார். கருடக்கொடியையுடையவரான கிருஷ்ணபகவான் இவ்வாறுசொல்லிக் கர்ஜித்துப பாஞசஜன்யமென் னுமமஹாசங்கத்தையூதி மயங்கச்செய்து தமது திவ்யமானசக்கரா யுதத்தை எடுத்தார். சக்ராயுதத்தினால யுத்தத்தில் ஸுநீதனுடைய சிரத்தையறுத்தார். சிறந்தகைகளையுடையசிசுபாலன் வஜ்ராயுதத்தினா லடிக்கப்பட்டமலைபோல வீழ்ந்தான். ஜனமேஜயமஹாராஜாவே! உடனே ஆகாயத்திலிருந்து ஸூர்யன்உதயமாவதுபோலச் சேதி ராஜனுடையதேகத்திலிருந்து கிளம்பின சிறந்தஒளியை அரசர்கள் கண்டனர். ராஜாவே! அந்தச்சிறந்தஒளியானது அப்போது உல கங்களால்நமஸ்கரிக்கப்பெற்றவரும் தாமரைக்கண்ணருமாகிய கிருஷ் ணனை வந்தனஞ்செய்து அவருக்குட்பிரவேசித்தது. அந்தஒளி சிறந்தகைகளையுடைய புருஷோத்தமரிடம பிரவேசித்ததைக்கண்டு அரசர்களனைவரும ஆச்சரியமெனறுநினைத்தனர். கிருஷ்ணனால் சிசு பாலன்கொல்லப்பட்டபோது மேகமில்லாமலே ஆகாயம மழைபெய் தது. ஜ்வலித்துக்கொண்டு இடிவிழுந்தது. பூமி நடுங்கிற்று. சொல லுக்கெட்டாததான அந்தக்காலத்தில் கிருஷ்ணனைக்கண்ட அரசர்க ளில் சிலர் ஒன்றுமபேசவில்லை மற்றுமசிலர் கோபித்துக்கைகளாற கைகளைப்பிசைந்தனர். வேறுசிலர் கோபமேறகொண்டு பற்களால் உதடுகளைக்கடித்தனர். சிலஅரசர்கள் ரஹஸ்யமாகக் கிருஷ்ணனைப் புகழ்ந்தனர். சிலர் மிகக்கோபித்தவராகவும சிலர் மத்யஸ்தராகவு மிருந்தனர் மஹரிஷிகள் மகிழ்ந்து துதித்துக்கொண்டு கிருஷ்ண னிடமசென்றனர். மஹாத்மாக்களானபிராம்மணர்களும் மஹாபல சாலிகளான ராஜாக்களுமாகிய அனைவரும் கிருஷ்ணனுடையபராக் ரமத்தைக்கண்டுஸந்தோஷம்காச சிலாகித்தனர். தேவகந்தர்வக்கூட டங்களும பூமியிற பெயர்பெற்றஅரசர்களும மஹாத்மாவான கிருஷ் ணனுக்கு நமஸ்காரஞ்செய்தனர். இவ்வுலகத்தில க்ஷத்ரியர்களாகப பிறந்த அஸுரக்கூட்டத்தாராகிய அல்பாயுஸுக்களான துராத்மாக் கள்மட்டும் கிருஷ்ணனைநிந்தித்தனர். பிரம்மதேவரைச்சேர்ந்தவர்க ளும் மஹாத்மாவானகிருஷ்ணனிடத்தில் மத்யஸ்தர்களுமான பிரம்ம ரிஷிகளும் ஸித்தர்களும கந்தர்வர்களும் நாகர்களும் சாரணர்களும் மங்களமானதேவகானங்களால் கிருஷ்ணனைத்துதித்தனர்; பலவகை

யாகப் பாடிஆடினர்; மஹாத்மாவான கிருஷ்ணனிடம் அன்புகூர்ந்து அவரிடம்வந்தனர். மஹரிஷிகளும் பிராம்மணர்களும மஹாபலசாலிகளானபாண்டவர்களும மகிழ்ந்து மிக்கஅன்புடன் துதித்துக்கொண்டு கண்ணனிடம்சென்றனர். தர்மராஜா தம் ஸஹோதரர்களைப்பார்த்து, "தமகோஷன்மைந்தனும சூரனுமானசிசுபாலனுக்குச் சிறப்பாகத தேக ஸமஸ்காரமசெய்யுங்கள; காலதாமதமவேண்டாம" என்று கட்டளையிட்டார். தர்மபுத்ரர்சொன்னதைக்கேட்டவுடன் அவர்ஸஹோதரர்களும பரபரப்புடன் அவர்கட்டளையை அப்போதேநிறைவேற்றினர். தர்மராஜர் கிருஷ்ணனுடையகட்டளையினல் அரசர்களனைவரோடும்சேர்ந்து சிசுபாலன்புத்ரனுக்குச சேதிராஜ்யாபிஷேகஞ்செய்தார்.

---

## எழுபத்தோராவது அத்தியாயம்.

## சிசுபாலவதபர்வம். (தொடர்ச்சி.)

(ராஜஸூயயாகம் நடந்தவரலாறு.)

பிறகு, சிறந்தபுத்திசாலியான தர்மராஜருடைய யாகமானது இடையூறுகளும் பூஜையைபபற்றின கலகங்களுமஅடங்கி மஹரிஷிகளுடைய கூட்டங்கள் நிரம்பினதாக நடந்தது. சிறந்தகைகளையுடைய கிருஷ்ணபகவான் சார்ங்கததையும சக்கரத்தையும் கதையையும் ஏந்திக்கொண்டு அவ்வேள்வியை முடியும்வரையிறகாததார். அந்தயஜ்ஞம நடக்குமபோது சிறந்தவாக்குளள தர்க்கபிரஸங்கிகள் பிறர்பக்ஷங்களை ஜயிக்கக்கருதினவர்களாய் அனேகயுக்திவாதங்களைப பேசினர். ஜனமேஜயரே! உபேந்திரரான கிருஷ்ணனுக்காகவே ஸஹதேவனல் நடத்தபபட்டதுபோன்ற அந்த யாகத்தின் சிறந்தமுறையை அவ்வரசர்கள் கண்டனர். ஜனமேஜயராஜாவே! அந்தயாகததில் பிராமமணர்கள் மிக்கவிருப்பத்துடன புண்யகதைகளைச சொல்லிக்கொண்டும் நாடகங்களையும நர்த்தனங்களையும பார்த்துக்கொண்டுமிருந்தனர். அந்தயாகததில் ஒளியினல் ஜ்வலிபபவைபோன்றவையும ஸூர்யனைப்போலப பிரகாசிபபவையுமான பொறபனைமரங்களினற் செய்யபபட்ட தோரணங்களைக் கண்டனர். நவக்ரஹங்களினல ஆகாயம் விளங்குவதுபோல அந்த யாகபூமியானது அந்தத தோரணங்களினல் விளங்கிறறு. படுக்கைகளும் ஆஸனங்களும் விளையாட்டுப் பொருள்களும் குடங்களும் பானை

களும சாலகளும கலயங்களும ரத்னமயமாகவும் மிகுதியாகவு மிருக்கக்கண்டனர். அரசர்கள் அங்கே பொன்னல்லாதவொன்றை யும காணவில்லை. பலவகையான இனியவுணவுகளைபபுசிதது ஸந் தோஷபபடும் மஹாதமாககளான பிராமமணர்களின் (குரல்) இடை விடாமல் அங்கே கேட்கபபட்டது. 'பரிமாறவேண்டும, பரிமாற வேண்டும' என்றும், 'புசிககவேணடும், புசிககவேண்டும' என் றும இவ்வகையான பேசசுககளே எபபோதும அங்கே கேட்கப் பட்டன. அநதமஹாயாகத்தில் ராஜாவின் வேலைக்காரர்கள பலவகை ருசியுள்ள சிதரானனங்களையும பக்ஷணஙகளையும இனியபானங்களை யும பிராமமணாகளுக்கு எககாலமும அளிததனர். ஒவவொரு நாளும லக்ஷமபிராமமணர்கள் புஜிததறகடையாளமாக ஏறபடுத தபபட்ட சஙகம்ஊதபபடடது. ஜனமேஜயரே! அநதச சங்கி னுடைய பெருமசபதம அடிககடி கேடகபபடடது. அதைககேடட வர்கள் ஆசசரியமடைநதனா. ஜனமேஜயரே! இவ்வாறு ஸநதோ ஷமும போஜனதிருபதியுமுளள ஜனஙகள்நிரமபின யாகம்நடநத போது குன்றுகளுககொபபான அனேகம அன்னக்குவியல்களையும தயிர்வாய்க்கால்களையும நெய்மமடுக்களையும ஜனஙகள கண்டனர். ஜனமேஜயரே! தர்மபுததிரரின் அமமஹாயாகததில் அனேக தேச ஙகளடஙகின ஜம்புத்திவு முழுமையும ஓரிடததிற் சேரநததாகக் காணபபடடது. அநதராஜாவின் மஹாயாகததில அனேகமாயிரம அரசர்கள தங்கள வேலைககாரர்களைக்கொண்டு தனங்களையெடுத் துக்கொண்டு பலதேசங்களிலிருநது வநதனா. அரசாகள் பூமாலை களசூடித் துலக்கபபடட ரதன்குண்டலங்களையணிநது நூறறுக் கணக்காகவும ஆயிரக்கணக்காகவுமுள்ள பிராமமணர்களுக்குபபரி மாறினர். ராஜாக்கள்புஜிக்கததகுநத பலவகை அன்னங்களையும பானங்களையும [1]லேஹ்யஙகளையும அவவரசர்கள பிராமமணர்களுக் களித்தனர். பலவகைபபக்ஷணங்களையும இனியமலர்களையும் கனி களையும வெல்லங்களையும் நல்லதேன்களையும் அவர்கள் பிராம்மணர் களுக்கு அளித்தனா. பலதேசங்களிலிருநதுவநத பிராம்மணர்க ளனைவரும் அந்தயாகத்தில இவற்றையெலலாம் ஸநதோஷமாகப் புஜித்து எபபோதும மிகுநத திருபதியையடைநதிருநதனர். இவ் வாறு தனங்களும் தான்யங்களும மிகுதியாகநிரமபி ஜனங்கள்ஸந தோஷமாயிருநத அந்தயாகசாலையைக்கண்டு அரசர்கள் மிக்க ஆச் சரியத்தையடைநதனர். தர்மராஜருடைய ராஜஸூய மஹாயாகத்

---

1 நக்கிச் சாப்பிடத்தக்கவை.

தில ரித்விக்குக்களனைவரும சாஸ்திரப்படி அக்னிகளை வளர்த்து முறைதவறுமல் ஹோமங்களைச் செய்தனர். வியாஸர் தௌமியர் முதலான பதினறு ரித்விக்குக்கள் தர்மராஜருடைய அந்த மஹா யாகத்தில் தம்தம காரியங்களை விதிப்படிசெய்தனர். அந்தயாக ஸ்தலில் ஆறுவேதாங்கங்களுந தெரியாதவனுமமிகுதியான கேள்வியில்லாதவனும நியமந்தவறினவனும பிறருக்குக் கற்பிக்கத்தகாதவனும பாவமுள்ளவனும் திறமையில்லாதவனுமான பிராமணன் யாருமிருக்கவில்லை. அங்கே லோபியும தரித்திரனுமில்லை. பசித்தவனும் துன்பப்பட்டவனும இழிவானவனுமானமனிதன் எவனுமில்லை. சிறந்தபராக்ரமசாலியான ஸஹதேவன் தர்மராஜருடைய கட்டளையினுல் போஜனமவேண்டினவர்களுக்கு எப்போதும் போஜனமபோடுவித்தான். அக்னிகாரியங்களில் ஸமர்த்தர்களும் சாஸ்திரங்களையே கண்களாகவுடையவர்களுமான ரித்விக்குக்கள ஒவ்வொருநாளும எல்லாக்காரியங்களையுமசெய்தனர். வேதங்களும சாஸ்திரங்களுமதெரிந்த பிராமமணர்கள் எல்லாவிடங்களிலும வாதங்கள்செய்தனர். வாதமமுடிந்தபோது எல்லாரும அம்மஹாயாகத்தில ஸந்தோஷமாகஇருந்தனர். வேதஸமபன்னர்களான தேவர்கள் பிராம்மணர்கள் மஹாரிஷிகளோடுகூடிய அந்தயாகவேதிகையானது நக்ஷத்திரங்கள்நிரமபின மாசற்ற ஆகாயம்போலவிளங்கிற்று. சில பிராம்மணசரேஷ்டர்கள் தங்கள் கல்வித்திறமையைக் காண்பிப்பதற்காகவும் மற்றுமசிலர் தாக்கஞசெய்வதற்காகவும வேறுசிலர் கல்வி விருப்பத்தினுலும சிலர்யாகத்தைப்பார்க்கும்விருப்பத்தினுலும் சிலர் பராக்ரமசாலியான தர்மராஜாவினிடத்திலுள்ள பயத்தினுலும வந்தனர். யாகம் செய்விப்பவர்களாக வந்தபிராமமணர்களனைவரும் தாம தாம யாகஞசெய்து அவபிருதஸ்நானஞ்செய்தவர்கள். சிறந்தபராக்ரமசாலியான ஸஹதேவன் யாகத்தின் அழகுக்காக எல்லாரத்னங்களும் இழைக்கப்பட்ட பொன்யூபஸ்தம்பங்களைச் செய்வித்தான். பொற்பனைமரங்களாற்செய்த தோரணங்களை ஜனங்கள் அங்கேகண்டனர். அந்தயாகபூமி அந்தத்தோரணங்களால் ஆகாயம் கிரஹங்களால்விளங்குவதுபோலவிளங்கிற்று. அந்தஸ்தலமானது பழகின திசையானைகள்போலவும் ஆதித்யர்கள்போலவும ஒளியுள்ள அந்தத்தோரணங்கள் எல்லாத்திசைகளிலும்வைக்கப்பட்டதனுலும், கிரீடங்களைத் தரித்தஅரசர்கள் இருந்ததனுலும் சோபித்தது. சிறந்தபுத்திசாலியும் மஹாத்மாவுமான தர்மராஜருடைய ராஜஸூயமஹாயாகம், தேவலோகத்திலுள்ளதேவர்களும யக்ஷர்களும் நாகர்களும் தேவ

லோகத்திலும் மானிடலோகத்திலுமுள்ள வித்யாதரர்களும் நிரம்பி யிருந்ததனால், மிகவிளங்கிறது; கந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் தேவர்களும் முனிவர்களும் யக்ஷர்களுமிருந்ததனால் இரண்டாவது தெய்வலோகம் போலவிளங்கிறது; கிம்புருஷ கின்னரர்களின்ஸங்கீ தத்தினாலும் சிறப்புற்றிருந்தது. அங்கே நாரதர் பாடினார். சிறந்த் ஒளியுள்ள தும்புரு விசுவாவஸு சித்ரஸேனன்முதலான ஸங்கீதவித் வான்களானதேவர்கள் யாககார்யங்களினிடையில (பாடி) அங்குள்ள வர்களை ஸந்தோஷிக்கசசெய்தனர். பாடபதற்கினிய அழகுள்ளவர் களான அப்ஸரஸ்களனைவரும ஒவ்வொருநாளும் கிரியைகளின் இடையில் பாடினர்; ஆடினர். வியாகரணசாஸ்திரங்கள்தெரிந்தவர் கள் ஒவ்வொருநாளும கிரியைகளின்இடையில் இதிஹாஸங்களையும புராணங்களையும் கதைகளையும் முழுதும்உரைத்தனா. பேரிகைகள், முரசுகள், மடடுகங்கள், கோமுகங்கள், கொமபுகள், புல்லாங்குழல் கள், சங்குகள், வீணைகள் இவை ஆயிரக்கணக்காகக் கேட்கபபட் டன. இவவுலகத்திலுள்ளபிராமமணர்களனைவரும க்ஷத்ரியவைசிய சூத்ரர்முதலானவர்களும் மிலேசசர்களனைவரும முதலிடைகடை வர்ணங்களைச் சேரநத ஸங்கரஜாதிகளெலலாரும அங்கேவநதனர். பலதேசங்களிலுண்டான பலஜாதியார்களும் வநதிருநதனால் இவ் வுலகமே யுதிஷ்டிரா கிருஹ்ததில (வநது) நிரம்பினதுபோலிருந்தது. பீஷ்மரும தரோணரும துரியோதனன் முதலான கௌரவர்களும யாதவாகளும் பாஞசாலாகளனைவரும அநதயாகததில் அடிமைகள் போல எலலாவேலைகளையும செய்தனர். சிறநதகைகளையுடைய ஜன மேஜயரே! இவ்வாறுநடநத சிறந்தபுததியுள்ள தர்மராஜருடைய அநத யாகமானது சநதிரனுடைய யாகமபோலவிளங்கிறது. தர்மராஜா வானவர் அநதயாகததில பிராமமணாகளுக்கு வஸ்திரங்களையும சால் வைகளையும் போர்வைகளையும் பொன்நாணயங்களையும் பொற்பாத் திரங்களையும் ஆபரணங்களையும நிரமபக்கொடுத்தார். பாரதச்ரேஷ் டரானதர்மராஜர் அநதயாகததில் அரசர்களால்கிடைத்த ரத்னங்க ளெல்லாவற்றையும் பிராமமணர்களுக்குஅளித்தனர்.

---

## எழுபத்திரண்டாவது அத்தியாயம்.

## சிசுபாலவதபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர் யாகத்தைநிறைவேற்றி அவபிருதஸ்நானஞ்செய்து யாகத்திற்கு வந்தவர்களுக்கு விடைகொடுத்தனுப்பித் துரியோதனன்முதலான பிராதாக்களோடுகூடச் சேர்ந்திருந்தது.)

ஜனமேஜயராஜாவே! அதன்பிறகு தர்மராஜாவின் அந்தயாகமானது எல்லாக்ரியைகளும குறைவில்லாததாகவும் எல்லாருக்கும் ஸந்தோஷத்தையுண்டுபண்ணுவதாகவும் பெரிய உத்ஸவமாகவும விளங்கிற்று; இடையூறுகள்நீங்கிச் செய்வதற்கெளிதும நிரம்பின தனங்களும்தானியங்களுமுள்ளதும அன்னமும்பக்ஷணங்களும் மிகுதியாகவுள்ளதும் கிருஷ்ணனால நன்றாகக் காபபாற்றபபட்டதுமாக நடநதது. அவ்வாறு ராஜஸூயமஹாயாகததை யுதிஷ்டிரர் நிறைவேற்றினார். மஹாத்மாக்களான பிராம்மணர்களுக்கு ஆயிரம்கோடி திரவியங்களைக்கொடுததார். உலகத்தில் மற்றோர்அரசன் அந்தயாகம் செய்யமாட்டான். யாகத்தைச்செய்வித்தவர்கள் வேண்டினஎல்லாவற்றையும தனங்களையும்பெற்று எபபோதும் திருபதியடைந்திருந்தனர். பிறகு பாண்டுபுத்ரரான தர்மராஜர் யாகத்தின் முடிவில் அவபிருதஸ்நானஞ்செய்து வியாஸரையும தௌமியரையும் வஸிஷ்டரையும நாரதமாமுனியையும ஸுமந்துவையும் ஜைமினியையும் பைலரையும வைசம்பாயனரையும் யாஜ்ஞவல்க்யரையும் கபிலரையும் கபாலரையும் கௌசிகரையும பூஜ்யர்களான மற்றுமுள்ள சிறநத ரித்விக்குக்களையும் பூஜிதது, "உங்களுடைய அனுக்ரஹத்தினால் இந்த ராஜஸூயமஹாயாகம் எனக்கு நிறைவேறிற்று. கிருஷ்ணனுடைய அனுக்ரஹத்தினால் தான் என்எண்ணம் நிறைவேறிற்று" என்று சொன்னார். யஜ்ஞம முடிநதபிறகு தேவச்ரேஷ்டரான கிருஷ்ணனையும் பலராமரையும் பீஷ்மர்முதலான கௌரவச்ரேஷ்டரையும் தர்மராஜர் பூஜித்தார். தர்மாத்மாவான யுதிஷ்டிரர், அவபிருதஸ்நானஞ் செய்தபிறகு பூமிக்கதிபதிகளான க்ஷத்ரியர்களனைவரும் அருகில் வந்து, "தர்மந்தெரிந்தவரே! நீர் அபிவிருத்தியடைந்திருபபது ஸந்தோஷம. ஸம்ராட்என்னும்.ஸ்தானத்தை அடைநதிருக்கிறீர். அஜமீடவம்சத்தவரே! அஜமீடவம்சத்தாரின்புகழ் உம்மால் பெருகச் செய்யப்பட்டது. அரசர்க்கரசே! இந்த ராஜஸூயயாகம் செய்ததனால் மிகப் பெரியதர்மத்தைச் செய்ததாகிறது. புருஷச்ரேஷ்டரே!

வேண்டினவை யெல்லாவற்றினாலும் நன்றாகப் பூஜிக்கப்பெற்றோம்; விடைகேட்கிறோம். எங்கள்தேசங்களுக்குச் செல்வோம். அதற்கு அனுமதி கொடுக்கக்கடவீர்" என்று கேட்டனர். ராஜாக்கள்சொன்னதைக் கேட்டபிறகு தர்மராஜாவானயுதிஷ்டிரர் அவ்வரசர்களுக்குத் தகுதியின்படி மரியாதைசெய்து தமது ஸஹோதரர்களனைவரையும்நோக்கி, "வீரர்களான இந்த அரசர்களனைவரும் அன்புடன் நம்மிடமவந்திருக்கின்றனர். இவர்கள் என்னிடம் விடைகேட்டுக்கொண்டு தமதம்தேசங்களுக்குச செல்லுகின்றனர். இந்த உததமர்களான ராஜர்களைத் தேசததின்எல்லைவரையிற் பின்செல்லுங்கள். உங்களுக்கு ஸுகமுண்டாகட்டும" என்றுசொன்னார். தர்மத்தைச் செய்கிறவர்களாகிய பாண்டவர்கள, ஜ்யேஷ்டரானதர்மராஜர் சொல்லைக் கேட்டு அவ்வரசர்களனைவரையும் ஒவ்வொருவராக அவரவர்க்குத் தக்கபடி பின்சென்றனர். பராக்ரமசாலியான திருஷ்டத்யும்னன் பரபரப்புடன் விராடன் பின்சென்றான். தனஞ்சயன் மஹாத்மாவும் மஹாரதனுமான த்ருபதனை அனுஸரிததான். பீஷ்மரையும த்ருதராஷ்டிரனையும் மஹாபலசாலியான பீமஸேனன் பின்தொடர்ந்தான். வீரரானத்ரோணரையும அசுவத்தாமாவையும் யுததங்களில்தலைவனை ஸஹதேவன் பின்சென்றான். ஜனமேஜயராஜாவே! ஸுபலனையும் அவன் புத்திரர்களையும் நகுலன் பின்சென்றான். க்ஷதரியச்ரேஷ்டர்களான த்ரௌபதியின் புததிரர்களும் ஸுபத்ரையின் புத்திரனை அபிமன்யுவும் மஹாரதர்களான மலைநாட்டரசர்களையும் மற்றுமுள்ள க்ஷத்திரியர்களையும் பின்சென்றனர். ஆயிரக்கணக்கான பிராம்மணர்களெல்லாரும் இவ்வாறே நன்றாகப்பூஜிக்கபபெற்றுச் சென்றனர். ராஜச்ரேஷ்டர்களும் பிராமமணர்களுமனைவரும் சென்றபிறகு சிறந்த மஹிமையுள்ள வாஸுதேவர் யுதிஷ்டிரனைநோக்கி, "கௌரவச்ரேஷ்டரே! நான் உம்மிடம் விடைபெற்றுக்கொள்ளுகிறேன். துவாரகைக்குச் செல்வேன். யாகங்களிற்சிறநத ராஜஸூயயாகததை நீர்நிறைவேற்றினதில் சநதோஷம்" என்றுசொன்னார். இவ்வாறுசொல்லப பெற்ற தர்மராஜர் ஜனார்த்தனரைநோக்கி, "ஓ! கோவிந்தா! இந்தச் சிறந்தயாகத்தை நான் நிறைவேறபபெற்றது உமது அனுக்ரஹத்தினாலேதான். க்ஷத்திரியர்களனைவரும சிறநதகாணிக்கைகளை யெடுத்துக்கொண்டு என்னையேயடைநது எனக்குட்பட்டிருந்ததும் உம்முடைய அனுக்ரஹத்தினாலேதான். குற்றமற்றவரே! நீர்செல்வதைப பற்றி என்வாக்கானது எவ்வாறுவிடைகொடுக்கும்? வீரரே! உம்மை விட்டு ஒருகாலும் நான் ஸுகமடைவதில்லையே. ஆனால் நீர் துவா

ரகாபுரிக்குச் செல்வதும் இன்றியமையாததுதான்" என்றுசொன்னார். தர்மாத்மாவும் பெரும்புகழ்பெற்றவருமான கிருஷ்ணன் இவ்வாறுசொல்லப்பெற்று அன்புகூர்ந்து யுதிஷ்டிரருடன்கூடவே குந்தியிடம்சென்று, "அத்தையே! உன்புத்திரர்கள் இப்போது ஸாம்ராஜ்யமென்னும் பதத்தைபபெற்றனர்; ஜயத்தையும் தனத்தையும் அடைந்தனர். அதனால் நீ ஸந்தோஷத்தையடையக்கடவாய். உன்னால்விடைகொடுக்கபபெற்று நான் துவாரகைக்குப்போக விரும்புகிறேன்" என்றுசொன்னார். பிறகு கிருஷ்ணன் ஸுபத்ரையையும் த்ரௌபதியையும்கண்டு பிரியம்பாராட்டினர். யுதிஷ்டிரருடன்கூடவே அந்த அந்தப்புரததிலிருநது புறபபட்டு ஸ்நானஜபங்களைச்செய்து பிராம்மணர்களைக்கொண்டு ஸ்வஸ்திவாசனஞ் செய்வித்தார். பிறகு சிறந்த கைகளையுடைய தாருகனென்னும்ஸாரதி மேகத்தின் வடிவம்போல விளங்குவதும் நன்றாக அலங்கரிககபபட்டதுமான தேரைப்பூட்டிக்கொண்டு வநதுசேர்ந்தான். சிறந்தமனமுள்ள தாமரைக்கண்ணர் சிறந்த கருடக்கொடியோடுவந்த ரதத்தைக்கண்டு பிரதக்ஷிணஞ்செய்து அதன்மேலேறித் துவாரகாநகரத்திற்குப புறபபட்டார். தர்மராஜாவும் ராஜலக்ஷ்மிபொருநதினவருமான யுதிஷ்டிரர் தம்பிமாருடன்கூடச் சிறந்தவலிமையுள்ள கிருஷ்ணனைக் கால்நடையாகப பின்சென்றார். தாமரைக்கண்ணராகிய கண்ணன் சிறந்ததேரைச் சிறிதுநேரம நிறுத்திக்கொண்டு குந்திபுத்ரரான யுதிஷ்டிரரைநோக்கி, "அரசே! நீர் எப்போதும் ஜாக்ரதையாயிருநதுகொண்டு பிரஜைகளைக் காக்கக்கடவீர். பிராணிகள் மேகததையும பறவைகள் பெருமரத்தையும் தேவர்கள் இநதிரனையும் போல உறவினர் உம்மை அடுத்திருக்கக்கடவர்" என்றுசொன்னார். கிருஷ்ணனும் யுதிஷ்டிரரும் ஒருவரோடொருவர் இவ்வாறு ஸமபாஷணைசெய்துகொண்டபிறகு ஒருவரிடத்தொருவர் விடைபெற்றுக்கொண்டு தம்தமகிருஹங்களை நோக்கிச் சென்றனர். ஜனமேஜயராஜாவே! யாதவச்ரேஷ்டரான கிருஷ்ணன் துவாரகைக்குச் சென்றபோது ராஜாவாகிய்துரியோதனன் [1]ஒருவனும் ஸுபலன்மகனான சகுனியும் ஸூதனுக்கும் ராதைக்கும்புத்ரனான கர்ணனும் துச்சாஸனன் முதலியோரும், விரும்பத்தக்க சிறப்புக்கள் எல்லாவற்றினாலும் நிரம்பப் பூஜிக்கப்பெற்று அந்தத்திவ்யஸபையில் பாண்டவர்களுடன் இருந்தனர்.

சிசுபாலவதபர்வம் முற்றிற்று.

---

[1] ஏகோ துர்யோதனஃ என்ற பாடம்கொள்ளப்பட்டது.

எழுபத்துமூன்றாவது அத்தியாயம்.

# த்யூதபர்வம்.



(வியாஸர்விடைகேட்டுக்கொண்டுசென்றபிறகு தர்மராஜர் புரப்ரவேசஞ்செய்தது.)

சிறந்தவில்லாளிகளான பாண்டவர்கள ராஜாக்களைப பின் சென்றபிறகு பாண்டவர்களில் மூத்தவரும் தர்மராஜருமாகிய யுதிஷ்டிரரிடம் வந்தனர். சிறந்தகைகளையுடைய தர்மபுத்திரர் ஸஹோதரர்களுக்கும் நண்பர்களுக்கும் விடைகொடுத்தனுபபினார். வியாஸர் தம்சிஷ்யர்களால் சூழப்பெற்றவராய்த, தர்மராஜர்எதிரில்வந்தார். ஸஹோதரர்களாற்சூழபபட்ட அந்தத்தர்மராஜரும் ஆஸனத்திலிருந்து விரைவாகஎதிர்கொண்டுசென்று பாத்யத்தையும ஆஸனத்தையும்அளிதது தமது பிதாமகரானவியாஸரைப பூஜித்தார். வியாஸபகவான் பொன்மயமான சிறந்த ஆஸனத்திலுட்கார்ந்து தர்மபுத்திரரான யுதிஷ்டிரரையும் 'உட்காரலாம' என்றுசொன்னார். பலவிஷயங்களைபபற்றியும் பேசுவதில் ஸமர்த்தரான வியாஸபகவான், ஸஹோதரர்களாற்சூழபபட்டு உட்கார்ந்திருந்த தர்மராஜரைநோக்கி, "ஓ! குந்திபுத்திரனே! பெறுதற்கரிதான ஸாமராஜ்யமென்னும் ஸ்தானத்தைப்பெற்று நீ விருத்தியடைவது நல்லகாலம. குருவம்சத்தை வஹிப்பவனே! கௌரவர்களெல்லாரும் உன்னால் சிறபபிக்கப்பெற்றனர். ராஜனே! நான் பூஜிக்கபபெறறேன். உன்னிடம் விடைகேட்டுக்கொண்டு செல்வேன்" என்றுசொன்னார். வியாஸரால் இவ்வாறு சொல்லப்பெற்ற தர்மபுத்திரரானயுதிஷ்டிரா தமது பிதாமகரை அபிவாதனஞ்செய்து கால்களைபபிடித்துக்கொண்டு, "மனிதர்களிற்சிறந்தவரே! யாராலும்தீர்ப்பதற்கரிதான ஒருஸந்தேஹம் எனக்குண்டாயிருக்கிறது. பிராம்மணச்ரேஷ்டரே! அதற்கு (நிச்சயம்) கூறுவதற்கு உம்மைவிட வேறுயாருமில்லை. பிதாமஹரே! திவ்யம் ஆந்தரிக்ஷம பார்த்திவம் (பூமியிலுண்டானது) என்றுமூன்றுவகை உத்பாதங்களைப் பகவானான நாரதமுனிவர் சொல்லியிருக்கிறார். அவற்றிற்கு மிகப்பெரியபயன் வருவதுதிண்ணம். சிசுபாலனிறந்ததனால் அந்தப பெரியஉத்பாதபயமானது அடங்கிற்றா?" என்றுகேட்டார். பராசரபுத்ரரும் ஸமர்த்தரும் கிருஷ்ணத்வைபாயனரென்று பெயர்பெற்றவருமான வியாஸர் தர்மராஜருடைய சொல்லைக்கேட்டுப் பின்வருமாறு மறுமொழிகூறலானார் :—"ராஜனே! பதின்மூன்றுவருஷங்கள்வரை

யில் துர்நிமித்தங்களின்பலன் பெரிதாயிருக்கும். மனிதர்க்கதிபதியே! இந்தஉத்பாதம் எல்லாக்ஷத்திரியர்களும அழிவதற்குக்குறிபபாம். பரதச்ரேஷ்டனே! நாளடைவில் உன்னையேகாரணமாகக்கொண்டு பூமியிலுள்ளக்ஷத்திரியர்கள்சேர்ந்து துர்யோதனன்செய்தகுற்றதிற்காகப் பீமார்ஜுனர்களுடையபலத்தினுல நாசமடைவர். அரசாக்கரசே! அந்தக்காலம் நேருமபோது நீ ஒரு கனவுகாண்பாய். யுதிஷ்டிரா! அதனை நான் உனக்குச்சொல்வேன்; தெரிநதுகொள். அரசாககரசே! ரிஷபக்கொடியுள்ளவரும் நீலகண்டரும [1]பவரும் ஸ்தாணுவும கபாலமேந்தினவரும் திரிபுரர்களையழித்தவரும் உகரரூபமுள்ளவரும் ருத்ரரும் பசுபதியும மஹாதேவரும் உமாகாநதரும் ஹரரும் [2]சர்வரும் [3] விருஷரும் சூலத்தையும் பிநாகமென்னும்வில்லையும் ஏநதினவரும் தோலாடை உடுத்தவருமாகிய சிவபெருமான் கைலாஸசிகரத்துக்குச் சமானமான விருஷபததிமேலேறிக்கொண்டு யமனுடையதிசையான தென்திசையை இடைவிடாமல் நோக்கிச்செலவதாக இரவின்முடிவில்காண்பாய். மனிதர்க்கதிபதியே! இவ்வகையானஸ்வப்னத்தை நீ காணபபோகிருய். அதைபபற்றிநீசிநதையுருதே. காலம கடக்கமுடியாததன்றே? உனக்குநன்மையுண்டாகக்கடவது. நான்கைலைமலைக்குசசெல்வேன். நீ ஐம்புலன்களையும்அடக்கி ஜாக்கிரதையோடிருந்து ராஜ்யபரிபாலனம செய்யக்கடவாய்" என்றார். கிருஷ்ணத்வைபாயனரென்று சொல்லபபட்ட அநதவியாஸபகவான் இவ்வாறுசொல்லிச் சிஷ்யர்களோடும பின்செல்லுமரிஷிகளோடும கைலைமலைக்குச் சென்றார். தர்மராஜா தமது பிதாமஹரானவியாஸர் சென்றபிறகு சிந்தையும் வியஸனமுமுற்று அவர் சொன்னவிஷயத்தையே பலமுறைநினைத்து உஷ்ணமாகபபெருமூச்செறிநது, "விதியை மானிடசக்தியினுல்வெல்லுவது முடியுமா? மஹரிஷிசொன்னது தவருமலே வந்துதீரும்" என்றுநினைத்தார். சிறந்தமஹிமைபெற்றயுதிஷ்டிரர் உடனே ஸஹோதரர்அனைவரையுமநோக்கி, "ஓ! புருஷபபுலிகளே! த்வைபாயனர் எனக்குச்சொன்னதை நீங்கள்கேட்டீர்களன்றே? அவர்சொன்னதைக்கேட்டபோதே என்புத்தி மரணமடையநிச்சயம்செய்தது. எல்லாக்ஷத்திரியர்களுடையஅழிவுக்கும் நானன்றே காரணமாகக் காலததினுல் உண்டாக்கப்பட்டேனென்று அவர் நினைத்தது. அபபா! ஜீவித்திருப்பதனுல எனக்குப்பயன்யாது?" என்றுசொன்னர். இவ்வாறுசொலலுகின்ற தர்மராஜாவுக்குப் பற்குனன், "ராஜாவே! புத்தியைக்கெடுக்கும் கொடியகலக்கத்தில் நீர்

[1] என்றுமிருப்பவர். [2] சிதறஅடிப்பவர். [3] அபீஷ்டஙகளை வர்ஷிப்பவர்.

பிரவேசிக்கவேண்டாம. மஹாராஜாவே! நன்ருய்ஆராய்ந்து எது யுக்தமோ அதைச்செய்யக்கடவீர்" என்றுசொன்ஞன். பிறகு ஸதயத்தில் உறுதியுள்ளயுதிஷ்டிரா ஸஹோதரர்களனைவர்க்கும வியாஸா சொன்னதைச்சொல்லினா; அதைப்பற்றியே நினைததனர். "ஸஹோதரர்களே! உஙகளுக்கு ஸுகமுண்டாகக்கடவது. இன்றுமுதல நான் செய்த பிரதிஜ்ஞையைக்கேளுஙகள. நண்பர்காள்! நான் ஜீவித்திருபபதின்பயன்யாது? இன்றுமுதல் பதின்மூன்றுவருஷகாலம் என் ஸஹோதரர்களையும மற்றஅரசர்களையும, கடிந்து பேசமாட்டேன். என்குலத்தோரின் கட்டளையிலிருந்துகொண்டு அவர்களுக்குததக்கபடி பேசிககொண்டு கூடியிருப்பேன். இவ்வாறுநடக்கின்றஎனககு என்பிள்ளைகளிடத்தும மற்றவர்களிடத்தும வேறுபாடிராது. உலகத்தில கலகம வேறுபாட்டிஞலதான்உண்டாவது. மனிதர்களிற சிறந்தவர்களே! சண்டையைத தூரததிலேயேதடுத்து இனியகாரியங்களையேசெய்து உலகத்தில் நிநதைக்குஆளர்காமலிருப்பேன்" என்றுசொன்ஞர். தமது ஜ்யேஷ்டஸஹோதரரான யுதிஷ்டிரருடைய அந்தச்சொல்லைக்கேட்டு அவருடைநன்மையில் ஊககமுள்ளபாண்டவர்கள் அவரையேஒததுக்கொண்டனர். பரதச்ரேஷ்டரான ஜனமேஜயராஜாவே! தர்மராஜாவானவர் ஸபையின்முன்னிலையில் தம் ஸஹோதரர்களுடன் இவ்வாறுநிசசயஞ்செய்து கிரமமாகப பிதிர்தர்ப்பணமும் தேவபூசையும்புரிநது மஙகளகாரியஙகளைசசெய்து க்ஷத்திரியச்ரேஷ்டர்களெல்லாரும சென்றபிறகு ஸஹோதரர்களாலும் அமைச்சர்களாலும் சூழப்பெற்றவராய்த் தமதுசிறநதநகரத்திற பிரவேசித்தார். ஜனமேஜயமஹாராஜாவே! துரியோதனனும ஸுபலன்புத்ரனைசகுனியும் அநத அழகானஸபையின்கண்ணே இருந்தனர்.

---

## எழுபத்துநான்காவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனன் ராஜஸூயஸபையில் தடுமாறி, பொறாமையுற்றுச் சகுனியிடம் முறையிட்டது.)

புருஷசிரேஷ்டரான ஜனமேஜயரே! அந்தஸபையிலிருந்த துரியோதனன் சகுனியுடன்கூட அந்தச்சபையை முழுதும்வரிசையாகப பார்த்தான். கௌரவசிரேஷ்டனை துரியோதனன் ஹஸ்திஞபுரத்தில் இதற்குமுன் தான்கண்டிராத தெய்விகவிஷயங்களைக் கண்டான்,

அந்தத்துரியோதனமஹாராஜன் ஒருகால் அந்தச்சபைநடுவில் படிகத்தளவரிசையுள்ளவிடத்திற்குச்சென்று ஜலமென்றுநினைத்து மதிமயங்கித் தன்வஸ்திரத்தைத்தூக்கிக்கட்டிக்கொண்டான். அதனால் துயரமடைந்து யாருக்கும்முகங்கொடாமல் அந்தச்சபையைச்சுற்றித்திரிந்தான். பிறகு, மேடுபள்ளந்தெரியாமல் தரையில்விழுந்ததனால் துயரமும் வெட்கமுமுற்றுப் பெருமூச்செறிந்துகொண்டு வெறுப்புடன் அந்தச்சபையில் ஸஞ்சரித்தான். அதன்பிறகு, படிகம்போலத் தெளிந்த நீருள்ளதும் படிகத்தாமரைமலர்களால் சோபிப்பதுமாகிய வாவியைத் தரையென்றுநினைத்து ஆடையோடு ஜலத்தில் விழுந்தான். அந்தத்துரியோதனன் ஜலத்திலவிழுந்ததைக்கண்டு மஹாபலசாலியான பீமஸேனனும் வேலைக்காரர்களும் நகைத்தனர். தர்மராஜாவின்கட்டளையினால் அவனுக்குவேலைக்காரர்கள் உயர்ந்த வஸ்திரங்களைக்கொடுத்தனர். அவன் அவ்வாறிருக்கக்கண்டு மஹாபலசாலியான பீமஸேனன் அர்ஜுனன் நகுல ஸஹதேவர்களனைவரும் சிரித்தனர். பொறாமைக்காரனான துரியோதனன் அவர்களுடைய பரிஹாஸத்தைப்பொறுக்கவில்லை. தன்எண்ணத்தை வெளிக்காட்டாமலிருப்பதற்காக அவன் அவர்களைக்கண்ணெடுத்துப்பாராமலிருந்தான். திரும்பவும் ஜலத்தைத்தாண்டுகிறவன்போல வஸ்திரத்தைத்தூக்கிக் கட்டிக்கொண்டு நிலத்தில் அடியைத்தூக்கிவைத்தான். அதனால் எல்லாஜனங்களும் மறுபடியும்நகைத்தனர். படிகக்கதவினால் மூடப்பட்டவாயிலைப்பாராதது அதில்நுழையும்போது துரியோதனன், தலையிலடிபட்டுக் கலங்கிநின்றான். அதுபோலவே [1]பெரும்படிகக் கதவுள்ள மற்றொருவாயிலைக் கைகளினால் இடித்துத்திறக்கும்போது வாயிலுக்குவெளிப்பட்டு முன்னேவிழுந்தான். மறுபடியும் அவன் திறந்திருந்தஒருவாயிலையடைந்து அது முன்போன்றதே என்றுநினைத்து அந்தவாயிலிலிருந்துதிரும்பினான். ஜனமேஜயமஹாராஜாவே! அந்தத்துரியோதனராஜன் அவ்விடத்தில் இவ்வாறு பலவகைஏமாறுதல்களையடைந்து பாண்டவர்களால் விடைகொடுக்கப்பெற்று ராஜஸூயமென்னும் மஹாயாகத்திலுள்ள அந்தஆச்சரியமானஸம்பத்தைப்பார்த்ததினால் துயரமுற்றமனத்துடன் ஹஸ்தினபுரத்திற்குச்சென்றான். பாண்டவர்களின்செல்வத்தினால் கொதிப்புற்று அதையே நினைந்துகொண்டுசெல்லுகின்ற துரியோதனராஜனுக்குக் கெட்டஎண்ணமுண்டாயிற்று. ஜனமேஜயரே! பாண்டவர்கள் மனங்

---

[1] இலகுவாகத்திறக்கக் கூடியகதவுகளை மிக்கபலத்துடன் இடித்துத்திறந்ததனால் வெளியில் வந்துவிழுந்தான்.

ளித்திருந்ததையும் அரசர்கள் அவர்களுக்குவசப்பட்டிருந்ததையும் குழந்தைமுதல் எல்லாஜனங்களும் அவர்களிடம அன்புவைத்திருந் ததையும் மஹாத்மாக்களான பாண்டவர்களின் சிறந்தமேன்மையை யும்கண்டு திருதராஷ்டிரன்மைந்தனான துரியோதனன், நிறம்மாறிப் போனான். அவன்செல்லும்போது மனம்கலங்கி, சிறந்தபுத்திமானான தர்மராஜருடைய அந்த ஒப்பற்றஐசுவரியத்தையும ஸபையையுமே தனிமையில்நினைந்துகொண்டிருந்தான். திருதராஷ்டிரபுத்ரனான துரி யோதனன் அப்போது மதிகலங்கி அடிக்கடிபேசுகின்றசகுனிக்கு மறுமொழிகூறவில்லை. அவ்வாறுகலங்கிநின்றதுரியோதனனைக்கண்டு சகுனியானவன், "துரியோதனா! பெருமூச்செறிகிறவன் போலச் செல்லுகிறாய்; இதற்குஎன்னகாரணம்?" என்றுகேட்டான். அதற் குத்துரியோதனன், "மாமா! இந்தபூமிமுழுமையும மஹாத்மா வான அர்ஜுனனுடைய அஸ்திரபராதாபத்தினால் ஜயிக்கப்பட்டு யுதிஷ்டிரனுக்கு உட்பட்டுப்போனதையும் யுதிஷ்டிரனுடைய அம் மஹாயாகம அவ்வாறுநடந்ததையும தேவர்களில் இந்திரன்போல யுதிஷ்டிரன் மிகுந்தமஹிமையுள்ளவனாயிருந்ததையுமகண்டு பொ றாமையால்நிரப்பப்பட்டு இரவும்பகலுமெரிக்கப்பட்டவனாக, ஆனி ஆடி மாஸங்கள்வந்தபோது சிறியதடாகமவறறுவதுபோலவற்றுகிறே ன்; பார். யாதவசிரேஷ்டனானகிருஷ்ணனால் சிசுபாலன்கொல்லப்பட் டான். அந்தசசபையில் அந்தசசிசுபாலன் அடியைத்தொடரும் ஆண் பிள்ளை யாருமில்லாமற்போனான். பாண்டவர்களிடமிருந்துண்டான தீயினால்சுடப்பட்ட அரசர்கள் அந்தக்குற்றத்தைப்பொறுத்தனர். அதை யார்பொறுக்கத்தகும? அந்தத்தகாதபெருங்காரியம கிருஷ்ண னால்செய்யப்பட்டது. மஹாத்மாக்களான பாண்டவர்களின்பராக் கிரமத்தினால் அதுநிலைத்தது. அதனாலேதான் ராஜாக்கள்பலவகை ரத்னங்களையெடுத்துக்கொண்டு வைசியர்களைப்போலக் கப்பமகட்டிக் குந்திபுத்ரனானதர்மராஜாவை ஸேவித்தனர். அவ்வாறுதர்மராஜாவிட த்தில் ஜ்வலிப்பதுபோலப்பிரகாசித்த அந்தராஜ்யலக்ஷ்மியைக்கண்டு அந்தத்தகுதிபெறாதநான் பொறாமையின்கையில் அகப்பட்டுக்கொ ண்டு தாபமுற்றிருக்கிறேன்; தீயிலாவதுகுதிப்பேன்; விஷத்தையா வது தின்பேன்; ஜலத்திலாவதுவிழுவேன்; ஜீவிக்கமாட்டேன். உல கத்தில்பராக்ரமமுள்ள எந்தஆண்பிள்ளை எதிரிகள்விருத்தியடைந் திருக்கவும் தான்குறைந்திருக்கவும்கண்டு பொறுப்பான்? அவர் களுக்கு அப்படிப்பட்டஐசுவரியம்வந்திருப்பதைக்கண்டு இப்போது பொறுத்திருக்கிறநான் பெண்ணுமல்லேன்; பெண்ணல்லாதவனுமல்

லேன்; ஆணுமல்லேன்; ஆணல்லாதவனுமல்லேன். பூமிக்கெல்லாம் ஈசுவரனுயிருப்பதையும் அப்படிப்பட்ட தனஸம்பத்தையும் அவ்வகையான யாகத்தையும்கண்டு என்போன்றவன் எவன்தாபமடையாம லிருப்பன்? நான் ஸஹாயமின்றி அந்தராஜ்யலக்ஷ்மியை அபகரிப்பதற்குச் சக்தனல்லேன், ஸஹாயம யாருமிருப்பதாகவும்தெரியவில்லை. ஆதலால், இறப்பதைப்பற்றியே நினைக்கிறேன். யாராலும்கெடுக்கப்படாத பரிசுத்தமானஐசவரியம் குந்திபுத்ரனிடமிருப்பதைக்கண்டு, தெய்வமேவலியதென்றும் 'முயற்சிபயனற்றதென்றும் நினைக்கிறேன். ஸுபலபுத்திரனே! முதலிலேயே அவனையழிப்பதற்கு நான்முயன்றேன். அவற்றையெல்லாங்கடந்து ஜலத்தில்தாமரைபோல அவன் வளர்ந்து கிளமபினுன். அதனுல், விதியேபெரியதென்றும முயற்சி பயனற்றதென்றும் நினைக்கிறேன். திருதராஷ்டிரன்புத்திரர்கள் குறைந்து போகின்றனர். பாண்டவர்கள் நாளுக்குநாள் விருத்தியாகின்றனர். கிருஷ்ணன் அவர்களிடம் அன்புகூர்ந்து அவர்களுக்குச்செல்வங்களை விருத்திசெய்கிருன். ஆதலால், நான் அந்தஐச்வரியத்தையும் அவ்வகையான அந்தசசபையையும் காவலாளிகளசெய்த அந்தபபரிஹாஸத்தையும் பார்த்துத தீயினுல்சுடபபடுவதுபோலச் சுடப்படுகிறேன். மாமா! மிக்கத்துயரமுற்றஎன்னை இபபோது நீவிட்டுவிடு. எனக்குள்ள ஆற்றுமையைத் திருதராஷ்டிருக்குத்தெரிவி" என்றுசொன்னுன்.

---

## எழுபத்தைந்தாவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனனும் சகுனியும் சூதாடுவதைப்பற்றிப் பேசிக்கொண்டது.)

சகுனி, "துர்யோதனு! நீ யுதிஷ்டிரனைப்பற்றிய பொருமைப்படத்தகாது. பாண்டவர்கள் எப்போதும் தங்கள்பாகங்களையே தாம் அனுபவிக்கிருர்கள். விதி பலவகைகளாகஇருக்கிறது. அவர்களுக்கு விதியினுல் மேன்மையுண்டாயிருக்கிறது. மஹாராஜாவே! பகைவரையடக்குகிறவனே! முன்னே நீ அனேக உபாயங்கள்செய்ய ஆரம்பித்தும் உன்னுல் அவர்களைப் பிடிக்கமுடியவில்லை. புருஷச்ரேஷ்டர்களான பாண்டவர்கள், அவர்கள் அதிருஷ்டத்தினுலேயே (ஆபத்துக்களினின்றும்) விடுபட்டனர். முயற்சியுள்ளமனிதர் தம்காரியங்களில் இகழ்ச்சியடையார். அவர்களுக்குத் திரௌபதி பார்யையாகக் கிடைத்தாள். துருபதனும் அவன்புத்ரர்களும் சிறந்தசக்தி

யுள்ள கிருஷ்ணனும் அரசர்களும் துணைவர்களாகக் கிடைத்தனர். ராஜனே! (பிறருடைய) காரியத்தைக்கெடுக்காமல் தங்கள் பிதாவின் பாகத்தை அவர்களடைந்தனர். அஃது அவர்களின்சக்தியினால் அபி விருத்தியடைந்தது. அதில் (உனக்கு) என்ன துயரமிருக்கிறது? தனஞ் சயன் அக்னிபகவானைத் திருபதிசெய்வித்துக் காண்டீபத்தையும் பெரிய அம்பறாத்தூணிகளையும் திவ்யாஸ்திரங்களையு மடைந்தான். அந்த உயர்ந்தவில்லினாலும் தன் கைவன்மையினாலும் அவன் ராஜாக் களை வசப்படுத்தினான். அதில் உனக்கென்ன துயரமிருக்கிறது? பகைவரைத் துன்புறச்செய்கிறவனாகிய அந்தஸவ்யஸாசி மயனென்னு மஸுரனை அக்னியிலிருந்துவிடுவித்து அவனால் அந்த ஸபையைச் செய்வித்துக்கொண்டான். அந்தமயனால் நியமிக்கப்பட்ட கிங்கரர்க ளென்னும் பயங்கரமானஅரக்கர்கள் அந்தசசபையைக் காக்கின்ற னர். அதில் உனக்கென்ன துயரம்? பாரதனே! ராஜனே! உனக் குச் ஸஹாயம் யாருமில்லையென்று சொன்னாயே; அது பிழை. இந் தச் சகோதரர்களனைவரும் உனக்குட்பட்டிருக்கின்றனர். சிறந்த வில்லாளியும் வீரருமான துரோணரும் அவர்புத்திரரான அச்வத்தாமா வும் உனக்குட்பட்டிருக்கின்றனர். ஸூதனுக்கும் ராதைக்குமபுத்ர னான கர்ணன் உறுதியானவில்லாளி; மஹாரதன். அவனொருவனே பாண்டவர் ஸோமகர்களெல்லாரையும் யுத்தத்தில் வெல்லத்தக்கவன். சிறந்தகைகளையுடையவனே! வேறுசஹாயங்களால் நீ செய்யப்போ வது யாது? புருஷசரேஷ்டரான பீஷ்மரும் மஹாரதரானகிருபரும் பலசாலியான ஜயத்ரதனும் ஸோமதத்தனும நானும என்ஸஹோதர ரும் ஸோமதத்தன்புத்ரனுமாகிய எங்களெல்லாருடனும சேர்ந்து பூமிமுழுமையையும் நீ ஜயிக்கக்கடவாய்" என்றுசொன்னான். அப் படிச் சொல்லியதைக்கேட்டுத் துரியோதனன், "ராஜனே! உனக்கு இஷ்டமிருந்தால் உன்னோடும நீசொன்ன மற்ற மஹாரதர்களோடும சேர்ந்து இந்தப்பாண்டவர்களை நான்ஜயிப்பேன். இவர்களை ஜயித் தேனேயாயின் பூமியும அரசர்களனைவரும் மிக்க விலைபெற்ற அந்தச் சபையும் என்வசமாகிவிடும்" என்றுசொன்னான். அதற்குச சகுனி, "தனஞ்சயன், கிருஷ்ணன், பீமஸேனன், யுதிஷ்டிரன், நகுலன், ஸஹதேவன், துருபதன், அவன்புத்திரர்கள் இவர்களை யுத்தத்தில் வெல்வதற்குத் தேவக்கூட்டங்களாலும் முடியாது. எல்லாரும் மஹா ரதர்கள்; சிறந்தவில்லாளிகள்; அஸ்திரங்களில் தேர்ந்தவர்கள்; யுத் தத்தில் அடங்காதகர்வமுள்ளவர்கள். ராஜனே! எந்தஉபாயத்தினால் யுதிஷ்டிரனை நான் ஜயிக்கமுடியுமோ அந்தஉபாயம் எனக்குத்தெரி

யும். நீ அதையறிந்து நடத்துவாயாக" என்றுசொன்னான். துர்யோதனன், "மாமா! நமக்கு வேண்டியவர்களுக்கும் மற்றுமுள்ள மஹாத்மாக்களுக்கும் தீங்கில்லாமல் அவர்களை ஜயிக்கமுடியுமாயின் அதை எனக்குச்சொல்" என்றுகேட்க, சகுனி, "யுதிஷ்டிரன் சூதாட்டத்தில் ஆசையுள்ளவன். அவனுக்கு ஆடததெரியாது. ராஜச்ரேஷ்டனான அவன் நாமழைத்தால் வாாமலிருக்கமாட்டான். கௌரவனே! நான் ஆட்டத்தில்தேர்ந்தவன். எனக்குநிகரானவன் பூமியிலும் மூன்றுலோகங்களிலுமுமில்லை. நீ அவனைச் சூதுக்கழை. புருஷச்ரேஷ்டனான ராஜனே! பாச்சிகைகளில்நிபுணனாகிய நான் அவனுடையராஜ்யத்தையும் அந்த விளங்குமஐசுவரியத்தையும் உனக்காக வாங்கிவிடுவேனென்பது திண்ணம். துர்யோதனா! இவற்றையெல்லாம் நீ திருதராஷ்டிர மஹாராஜாவுக்குத் தெரிவி. உன்தந்தையினால் உத்தரவுதொடுக்கப்பட்ட பிறகு அவர்களை ஐயமின்றி ஜயிப்பேன்" என்றுசொன்னான். துரியோதனன், "ஸௌபலனே! கௌரவச்ரேஷ்டரான திருதராஷ்டிரருக்கு நீயே காரணங்களுடன் தெரிவிப்பாயாக. நான்தெரிவிப்பது முடியாது" என்றுசொன்னான்.

---

எழுபத்தாறுவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். (தொடர்ச்சி.)



**(துரியோதனனாலும் சகுனியினாலும் சூதாடுவதைப்பற்றித் தெரிவிக்கப்பட்ட திருதராஷ்டிரன் ஸபைகட்டுவித்து, தர்மராஜாவை அழைத்துவரும்படி விதுரரையனுப்பியது.)**

மிகக் கெட்டபுத்தியுள்ள சகுனி ராஜாவான யுதிஷ்டிரருடைய அந்த ராஜஸூயயாகத்தைத் துர்யோதனனுடன்கூடப்பார்த்து ஹஸ்தினபுரத்திற் பிரவேசித்தான். பாபஞ்செய்பவனும் அரசர்களையழிப்பவனும்,கெட்டபுத்தியுள்ளவனுமாகியசகுனி,துரியோதனனுடைய துயரத்தைக்கண்டு பாண்டவவம்சத்தார் கெடுவதற்காக அவனுடைய அபிப்பிராயமே சரியென்று மனத்தில் உறுதியாகவைத்துக்கொண்டான். துரியோதனன் விருப்பத்தைச்செய்கிறவனாகிய சகுனி அவன்சொல்லைக்கேட்டு அவன்கருத்தையறிந்துகொண்டு அறிவே கண்ணாகவுடையவனும் சிறந்தபுத்திசாலியுமான திருதராஷ்டிரமஹாராஜன் வீற்றிருக்கும்போது அவனருகிற்சென்று, "மஹாராஜவே! மனிதர்களுக்கதிபதியே! துரியோதனன் நிறம்மாறி வெளுத்து இளைத்துத் துயரத்தையும் விசாரத்தையுமடைந்திருக்கிறான். அதையறியும்.

உமது ஜ்யேஷ்டபுத்திரனை துரியோதனனுக்குத் தாங்கக்கூடாத மனத்துயரம பகைவரால உண்டாயிருப்பதை நீர் விசாரிக்கவில்லை; ஏன் தெரிந்துகொள்ளாமலிருக்கிறீர்?'' என்றான். சகுனியினால் இவ்வாறு சொல்லப்பட்ட திருதராஷ்டிரமஹாராஜன் துரியோதனனை யழைத்துச் சொல்லத்தொடங்கினான். ''என் அன்புள்ள மகனே! துரியோதன! என்னகாரணத்தினால நீ மிகத்துயரப்படுகிறாய். கௌரவசரேஷ்டனே! அந்தவிஷயத்தை நான் கேட்கலாமாயின் எனக்குச் சொல்; நீ நிறமமாறி வெளுத்தது இளைத்திருப்பதாக இந்தச்சகுனி சொல்லுகிறான். நான் நினைத்துப்பார்க்கையில் நீ துயரப்படுவதற்குக் காரணம் எனக்குத்தெரியவில்லை புதல்வனே! பெரியஐச்வரியம் முழுதும உன்னிடத்தில நிலைபெற்றிருக்கிறது. உன்ஸஹோதரர்களும நண்பர்களும உனக்கு இன்னாதவற்றைச் செய்வதில்லை. உயர்ந்தஆடைகள் உடுக்கிறாய்; மாமஸத்தோடுகூடிய அன்னத்தைப புஜிக்கிறாய்; உயர்ந்த ஜாதிக்குதிரைகள் ஏறுகிறாய்; எதனால் வெளுத்துமிளைத்துமிருக்கிறாய்? விலைபெற்றபடுக்கைகளும மனதிற்கினிய பெண்களும சிறந்தவீடுகளும ஸுகமான தோட்டங்களும தேவர்களுக்கிருப்பதுபோல உனக்கு இருக்கின்றன. உலகமெல்லாம உன் சொல்லிற் கட்டுப்பட்டிருக்கிறது; ஸந்தேஹமில்லை. யாராலும வெல்ல முடியாத அன்புள்ளபுத்ரனே! அப்படிப்பட்ட நீ ஏழைபோல ஏன் துயரப்படுகிறாய்? அப்பா! தாய்தந்தையர்களால புத்ரனுக்குச் செய்யத்தக்கவற்றுள் எதுசிறந்ததாக நினைக்கப்பட்டிருக்கிறதோ அதையும நமமுடையகுலத்தின் ராஜ்யலக்ஷ்மி எல்லாவற்றையும நீ அடைந்திருக்கிறாய். தேவலோகத்தில் தேவேந்திரனுக்கு இருப்பதுபோலவே எல்லாவிருப்பங்களும பலவகைச் சிறந்தஉணவுகளும பானங்களும உனக்கு இருக்கின்றன. ஏன் வ்யஸனப்படுகிறாய்? நிருக்தம சந்தம்முதலான ஆறுஅங்கங்களோடுகூடிய வேதத்தையும அஸ்தரவித்தையையும் சாஸ்திரங்களையும [1]பத்து இலக்கணங்களுடன் கிருபாசாரியரிடம படித்துத் தேர்ந்திருக்கிறாய்; பலராமரிடத்திலும் கிருபரிடத்திலும துரோணரிடத்திலும அஸ்த்ரவித்தைகற்றிருக்கிறாய்; நீ ஸஹோதரர்களில் ஜ்யேஷ்டன்; ராஜ்யத்திலிருக்கிறாய்; புத்திரனே! ஏன்துயரப்படுகிறாய்? புத்திரனே! நீ பிரபுவாயிருந்துகொண்டு ஸூதர்களாலும் மாகதர்களாலும துதிக்கப்பெற்று ஸாமான்யஜனங்களுக்குக்கிடையாத உணவுடைகளை மிகுதியாக அனு

[1] 1. ஸ்வரம்; 2. வர்ணம்; 3. பதம்; 4. தாது; 5. வேற்றுமையுருபுகள்; 6 வினையுறுப்புக்கள்; 7. கிருதபத்யயம்; 8. தத்திதபத்யயம்; 9. காரகம்; 10. ஸமாஸம்என்பன.

பவிக்கிறாய். எல்லாநதெரிநதவனே! இவ்வுலகத்தில் மற்றொருவன் மேன்மையையடைந்திருக்கிறனென்பது உன்வ்யஸனத்திற்குக்காரணமாவதெப்படி?, அதை நான் கேட்கிறேன்; சொல்" என்றான்.

மந்தபுத்தியுள்ளவனும் கோபம் மேற்கொண்டவனுமான துரியோதனன் திருதராஷ்டிரனுடைய அந்தச்சொல்லைக்கேட்டுத் தந்தையைநோக்கி, தன்எண்ணத்தை வெளிப்படுத்திக்கொண்டு பின்வருமாறு சொல்லலானான்:— "நான் அல்பமனிதன்போலஉண்ணுகிறேன்; உடுக்கிறேன்; கெட்டகாலத்தைக்கடக்கக்கருதித் தாங்கக்கூடாதகோபத்தைத் தாங்குகிறேன். அவமானத்தைப் பொறாமல் தனதுராஜ்யாங்கங்களை ஆக்ரமித்து மேலாயிருந்து பிறராலுண்டாகும்கஷ்டங்களை விடுவிக்கமுயலுகிறவன்தான் ஆண்பிள்ளையென்று சொல்லப்படுகிறான். பரதவம்சத்தவரே! உள்ளதுபோதுமென்றிருப்பதும் தயையும் பயமும், ஐசவர்யத்தையும் கௌரவத்தையும்கெடுக்கின்றன. அவற்றினால் ஆக்ரமிக்கப்பட்டவன் மேன்மையையடையான். மிகப்பிரகாசிப்பதும் என்னை நிறமகுறையச்செய்வதுமான ராஜ்யலக்ஷ்மி குந்திபுத்ரனை யுதிஷ்டிரனிடத்திலிருப்பதைக்கண்டபிறகு நான் அனுபவிப்பது எனக்குத்திருப்திகரமாயில்லை. எதிரிகள் மேன்மையடைவதையும் நான்குறைவதையுமகண்டபின் தர்மராஜாவின் ஐச்வரியம் கண்ணுக்குப் புலப்படாததாயினும எதிர்நிற்பதுபோலத்தோன்றுவதனால் நான்நிறம்குன்றிஓய்நது வெளுத்தும்இளைத்துமிருக்கிறேன். யுதிஷ்டிரனால் காப்பாற்றப்பட்ட ஸ்நாதகர்களும் கிருஹஸ்தர்களும எண்பத்தெண்ணாயிரவர் இருக்கின்றார்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் முப்பது முப்பது வேலைக்காரிகளுண்டு. யுதிஷ்டிரனுடையவீட்டில் ஜிதேந்திரியர்களானயதிகள் பதினாயிரவர் பொற்பாத்திரங்களில் புஜிக்கின்றனர். கறுப்பும் நீலமும் சிவப்புமான வர்ணங்களோடுகூடிய மான்தோல்களையும் விலைபெற்ற சால்வைகளையும் காம்போஜதேசத்தரசன் யுதிஷ்டிரனுக்கனுப்பினான். நூற்றுக்கணக்கும ஆயிரக்கணக்குமாகப் பெண்யானைகளையும் பசுக்களையும் குதிரைகளையும் மூந்நூறொட்டகங்களையும் அநேகநூறு பெண்குதிரைகளையும் கப்பமாகஎடுத்துக்கொண்டு ராஜகுமாரர்கள் யுதிஷ்டிரனுடையகிருஹத்தில் வந்துசேர்ந்தனர். ராஜாவே! அந்தச்சிறந்த யாகத்தில் அரசர்கள் பலவிதங்களானரத்தினங்களை யுதிஷ்டிரனுக்கு மிகுதியாகக்கொணர்ந்துகொடுத்தனர். சிறந்தபுத்தியுள்ள பாண்டுபுத்திரனுக்கு அந்தயாகத்தில் திரவியலாபம்வந்ததுபோல எவ்விடத்திலும் இதற்குமுன் நான்கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. இதெல்

லாம் பொய்யாயிருந்தால் நீர் ஸஞ்சயனைக்கேட்கலாம். ராஜாவே! நமது சத்துருவின் அளவற்ற அநத்ததனக்குவியலைக்கண்டு அதையே நினைந்து நான் ஸுகமபெறுமலிருக்கிறேன். பிராமமணர்களும பயிரிடுகிறவர்களும் பசுக்கள்வைத்துக்கொண்டிருப்பவர்களும் நூற் றுக்கணக்காகக் கூட்டமசேர்ந்து மூவாயிரமகோடி பொன்களைக் கப்பமாக எடுத்துக்கொண்டுவந்து வாயிலில் தடுக்கபபட்டுநின்றனர். திரிகர்வதேசத்தார் அழகானபொறகுடஙகளைக்கொண்டுவந்து தர்ம ராஜாவுக்குத் தெரிவித்தபிறகு உள்ளேவிடபபட்டனர். தேவஸ்திரீ கள் எதிலஇநதிரனுக்கு மதுவைவைததுககொண்டிருக்கின்றனரோ வருணனுடைய அநத வெண்கலபபாத்திரத்தைத் திருபபாற்கடல் தர் மராஜாவுக்குக் கொணர்நதுகொடுத்தது. ஆயிரமபொன் விலைபெற்ற தும அனேகரத்நஙகளால் அலங்கரிககபபெற்றதும் உறியில்வைக்கப பட்டதுமான சிறநதசங்கததையெடுத்துக கிருஷ்ணன் தாமராஜா வுக்குஅபிஷேகஞ்செய்தார். அதையெல்லாமகண்டு எனக்குப பெரிய ஜ்வரம உண்டானதுபோலிருந்தது. பாதசிரேஷ்டரே! பறவைகள் அநதசசங்கையெடுததுக்கொண்டு கீழ்கடலுக்கும தென்கடலுக்கும் மேல்கடலுக்கும சென்றன; வடகடலுக்குமடடும் செல்லவில்லை. அர் ஜுனன் அநதவடதிசைக்குச்சென்று அளவற்றதனத்தைக் கப்ப மாகக்கொண்டுவநதான். பாரதரே! மயனால பிநதுஸரஸிலுள்ள ரத் னங்களைக்கொண்டுவநதுசெய்து படிகக்கலமேலே மூடியிருநததனால் ஜலம்நிரமபின தாமரைக்குளம் போலிருக்குமபூமியைக் கண்டேன். பாதச்ரேஷ்டரே! அங்கே நான் துணியைததூக்கினதைபபார்தது விரு கோதரனும் ஸபைகாக்குமவேலைக்காரர்களும் நகைத்தனர். அப போது என்தாய்தநதையர்களுக்காக என்உயிரைச் சிரமபபட்டுக்காப பாற்றினேன். என்னால்முடிநதிருக்குமாயின் விருகோதரனை அங் கேயேகொன்றிருபபேன். பாரதரே! என்பகைவனாற்செய்யப்பட்ட அந்தப்பரிகாசம் என்னையெரிக்கிறது. ராஜாவே! அநதஸபையில் படிகத்தாமரைகளினால் விளங்குவதும படிகமேஜலம்போற் செய்யப பட்டதுமாகிய தாமரைக்குளததை ஸபையென்றுநினைத்து விழுந் தேன். அப்போது பீமனும அர்ஜுனனும சப்தத்துடன்சிரித்தனர். திரௌபதியும் பெண்களுடன்சோநது என்மனமவிழுநதுபோகும் படி நகைத்தாள். ஜலத்திலிறங்கி வஸ்திரம்நனைநதுபோனஎனக்கு ராஜாவினால் கட்டளையிடபபட்டவேலைக்காரர்கள் வேறுவஸ்திரங்க ளைக்கொடுத்தனர். அதுவும் எனக்குப்பெருந்துயரமே. தூண்களி ருக்குமிடத்தில் தூண்களில்லாததுபோலவும் தூண்களில்லாதவிடங்

களில் ஆயிரம்தூண்களிருப்பதுபோலவும் காணப்படுகிறது. ராஜாவே! பிரபுவே! அந்தஇடத்தில் நான்படிக்கற்களின்நடுவில் அடிபட்டுக் கொண்டேன். வாயிலில்லாதஇடம் வாயில்போலிருந்ததனால் அங்கேவெளியில்போகத்தொடங்கிக் கல்லிலமுட்டிக்கொண்டு நெற்றியில்மிகவும் அடிபட்டுக்கொண்டேன். அதைப்பார்த்துத் தடவிக்கொண்டு வேறுமார்க்கத்திற்சென்றேன் விருகோதரன்பரிஹாஸஞ்செய்து என்னைப்பார்த்து, "ராஜாவே! இதுவாயில்; இதுவாயிலன்று" என்றுபுதுமையாகச்சொன்னான். ராஜாவே! அவ்விடத்தில் அந்தநிலைமையிலிருந்த என்னைக்கண்டு பெண்களுமநகைத்தனர். புருஷசரேஷ்டரே! அந்தச சபையிலுள்ளவர்களுக்கு இதெல்லாம் சிரிக்கக்காரணமாயிருந்தது. நான் இதுவரையில் எங்கும கண்டதும் கேட்டதுமில்லாத ரதனஙகளை அவ்விடததிற்கண்டேன். அதனால் கொதிப்புழ துயரமுமஅடைந்தேன். தீயிறகுதிப்பேன்; கருங்கடலில்விழுவேன். புகழ்பெறறவனுக்கு அபகீர்த்தியானது மரணத்திலும்அதிககஷ்டம. மற்றோர்ஆச்சரியமும அங்குஉண்டாயிற்று; அதையுஞ்சொல்லுகிறேன்; கேளும. எப்போதும் புஜிக்கும்பிராமமணர்கள் ஒருலக்ஷம கணக்கானதற்கடையாளமாக அங்கே சங்குவைத்துத் தினம ஊதப்படுகிறது. பாரதரே! அந்தச்சங்கு அடிக்கடி ஒலிக்கும்போது இடைவிடாத சப்தத்தைக்கேட்டேன். அதனால் எனக்கு மயிர்கள்பொடித்தன. மஹாராஜாவே! காணவந்த அனேக ராஜாக்களினாலநிரம்பின அந்தஸபையானது மாசற்றஆகாயம நக்ஷத்திரங்களினால் விளங்குவதுபோல விளங்கிறறு. மஹாராஜாவே! பிரஜைகளுக்கதிபதியே! சிறந்த புத்திசாலியான தர்மராஜாவினுடைய அந்தயாகத்தில் அரசர்கள வைசியர்கள்போல எல்லாரத்னங்களையும் காணிக்கைகளாகக் கொண்டுவந்தனர். பிராம்மணர்களுக்குப் பரிமாறுகிறவர்கள் அரசர்களே. ஓ! ராஜாவே! யுதிஷ்டிரனிடத்திலிருந்த லக்ஷ்மியானது தேவேந்திரனுக்கும யமனுக்கும வருணனுக்கும் குபேரனுக்குமஇல்லை. பாண்டுபுத்திரனுடைய அந்தசசிறந்த ராஜலக்ஷ்மியைக்கண்டு மனக்கொதிப்புற்றநான் ஆறுதலடையவில்லை. பாண்டவர்களுடைய ஐசவர்யத்தையடையாமல் எனக்கு ஆறுதலில்லை. பாணங்களினால் பகைவரையாவது படுக்கவைப்பேன். நானாவது பிறரால்அடிக்கப்பட்டுசசாய்வேன். பகைவரைத் துன்புறச்செய்கிறவரே! இந்தநிலைமையிலிருக்கும்எனக்கு உயிரினாலாவதென்ன? ராஜாவே! பாண்டவர்கள் மேன்மேலும்ஓங்குகின்றனர், நமதுஉயர்வு நின்றுவிட்டது" என்றான்.

அப்போது சகுனி, "தவறாதபராக்ரமமுள்ளவனே! தர்மராஜாவினிடத்தில் எந்தஜப்பற்றஐச்வர்யத்தைக்கண்டாயோ அதை யடைவதற்கு நான் ஓர்உபாயம்சொல்லுகிறேன்; கேள். பாரதனே! இந்தப்பூமிமுழுமையிலும் பாசசிகைகளில நான்தேர்ந்தவன். ஆடும்போது காய்போகுமவழி எனக்குத்தெரியும; பநதயமதெரியும; தன் ஆட்டம் பிறர்ஆட்டம் இவைகளின் வித்தியாஸம் தெரியும். யுதிஷ்டிரனுக்கு ஆட்டத்தில் விருப்பமுண்டு; ஆனால ஆடத்தெரியாது; அழைததோமானல் அவசியம்வருவான். அவன் எபபோதும தானே என்னையழைப்பதுண்டு. பிரபுவே! நான் கபடத்தைச்செய்து அவனை நிச்சயமாக ஜயிபபேன். அநதச்சிறநத ஐசவாயததைத திருப்பி வாங்கிவிடுவேன். அவனையழை" என்றுசொன்னான். சகுனியினால் இவ்வாறுசொல்லப்பட்ட துரியோதனமஹாராஜன் உடனே திருதராஷ்டிரனைநோக்கி, "ராஜாவே! சொக்கட்டான் ஆட்டம்தெரிநத இந்தச்சகுனி ஆட்டத்தினாலேயே யுதிஷ்டிரனுடைய ராஜ்யலக்ஷ்மியை வாங்கத் திறமையுள்ளவன் அதறகு நீர அனுமதிகொடுக்கக்கடவீர்" என்றுசொன்னான். அதைக்கேட்ட திருதராஷ்டிரன், "விதுரன் மஹாபுத்திசாலி; எனக்கு மநதிரி; நான் அவன்சொற்படியிருப்பவன். அவனுடன்கலநது இநதக்கார்யததின முடிவைப்பற்றித் தெரிந்துகொள்வேன். தீர்க்கதர்சியாகிய அந்தவிதுரன் தர்மத்தை முன்னிட்டு இருபக்கத்தாருக்கும தகுநததும மிக்கநன்மையுமாகக் காரியத்தின்முடிவைச் சொல்வன்" என்றுசொன்னான் துரியோதனன், "அரசர்க்கரசே! விதுரர் வருவாராயின் அவர் உம்மைத்திருப்பிவிடுவர். நீர்திரும்பினால் நான்இறந்துபோவது திண்ணம. ராஜாவே! நானிறந்துபோனபிறகு நீர் விதுரருடன் ஸுகமாயிரும். பூமிமுழுமையையும் நீர்ஆளலாம். உமக்கு என்னாலாவதென்ன?" என்று சொன்னான். அவன் அன்போடும் துயரத்தோடுமசொன்ன அந்தச் சொல்லைக்கேட்டுத் திருதராஷ்டிரன் அவனுடையஎண்ணத்தை அங்கீகரித்து வேலைக்காரர்களைப் பார்த்து, "சிற்பிகாள்! அனேகமாயிரம் தூண்கள்நிரம்பினதும் நூறுவாயில்களுள்ளதும் மனத்திற்கும பார்வைக்கும் இனியதுமான ஸபையை எனக்கு உடனேசெய்யுங்கள். சில்பிகளெல்லாரையும் வருவித்து அந்தச்சபையில் ரத்னங்களால் தளவரிசைகள்போட்டுப பிரவேசிபபதற்கு ஸுகமாகவும அழகாகவுஞ் செய்து உடனே எனக்குததெரிவியுங்கள்". என்று கட்டளையிட்டான். ஜனமேஜயமஹாராஜாவே! துரியோதனனுடைய ஸமாதானத்திற்காகத் திருதராஷ்டிரமஹாராஜன் இவ்வாறு நிச்சயம்செய்து

விதுரருக்குத் தூதனையனுப்பினான். விதுரரைக்கேட்காமல் திருதராஷ்டிரனுக்குத் தன்மனத்தில் ஒருநிச்சயமும் உண்டாகவில்லை. திருதராஷ்டிரன் சொக்கட்டானாடுவதிலுள்ள குற்றங்களையறிந்திருந்தும் புத்திரனிடத்திலுள்ள ஸ்நேகத்தினால் இழுக்கப்பட்டான். புத்திமானான விதுரர் கலகத்திற்கு வாயிலாகவிருப்பதும் நாசத்திற்கு ஆரம்பமாக உண்டானதுமாகிய அந்தச் சமாசாரத்தைக்கேட்டுத் திருதராஷ்டிரனிடம் ஓடிவந்தார். அந்தவிதுரர் தமக்குத் தமயனும் மஹாத்மாவுமான திருதராஷ்டிரனையடைந்து பாதங்களில்தலைவணங்கி, "அரசரே! பிரபுவே! உம்முடைய இந்தமுயற்சியை நான் ஒத்துக்கொள்ளவில்லை. இந்தச்சூதாட்டம் காரணமாக உமதுபுத்திரர்களுக்கு விரோதம்வாராமலிருக்கும்படி செய்யக்கடவீர்" என்றுசொன்னார். அதற்குத் திருதராஷ்டிரன், "விதுரா! தேவர்கள் அனுக்ரஹம்செய்வாராயின் எனதுபுத்ரர்களுக்கும் பாண்டுபுத்ரர்களுக்கும் கலகம் உண்டாகாமலிருக்குமென்பது நிச்சயம். நல்லதோ கெட்டதோ, அனுகூலமோ பிரதிகூலமோ, மித்திரர்களுக்குள் சூதாட்டம் நடக்கட்டும். இது விதியின் கட்டளையென்பதில் ஸந்தேகமில்லை. பாரதனே! நானும் துரோணரும் பீஷ்மரும் நீயும்இருக்கும்போது இவ்விருவருக்கும் தெய்விகமாகக்கூட அக்கிரமம் எவ்வகையிலும் நேரிடாது. நீ இப்போதே காற்றுவேகமான குதிரைகள்பூட்டின ரதத்திலேறிக்கொண்டு காண்டவப்ரஸ்தம்சென்று யுதிஷ்டிரனை யழைத்துவா. விதுரா! என்னுடைய எண்ணம் யுதிஷ்டிரனிடத்திற் சொல்லத்தகாது. இதை உனக்குச்சொல்லுகிறேன். தெய்வந்தான் மேலானதென்று நினைக்கிறேன். அதனாலேதான் இதுநேரிடுகிறது" என்றுசொன்னான். இவ்வாறு சொல்லியதைக்கேட்ட புத்திமானான விதுரர், 'இந்தக் குலம் இனிஇல்லை' என்றுநினைத்து மிகத்துன்பமுற்றுச் சிறந்தபுத்தியுள்ள பீஷ்மரிடம்சென்றார்.

---

## எழுபத்தேழாவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். (தொடர்ச்சி.)



(ஜனமேஜயர் விரிவாகச்சொல்லும்படிகேட்டதன்மேல் வைசம்பாயனர்சொல்லத்தொடங்கி, திருதராஷ்டிரனிடம் துரியோதனன் துயூரப்பட்டதை மறுபடியும் கூறியது.)

ஜனமேஜயர், "ஓ! பிரமஜ்ஞானிகளிற்சிறந்தவரே! எனது பிதாமஹர்களான பாண்டவர்கள் அப்படிப்பட்ட வ்யஸனம்அடைந்த

தற்குக்காரணமும் பாரதாக்ளுக்கே பெரியநாசத்தைவிளைவித்ததுமா கிய அந்தச்சூதாட்டம எவ்வாறுநடநதது? அந்தஆட்டத்திற்கு ஸபை யோராயிருநத அரசர்கள்யாவர்? அதை ஸந்தோஷித்தவர் யாவர்? மறுத்தவர் யாவா? பிராமமணரே! நீங்கள் இதைவிரிவாகசசொலல விருமபுகிறேன். பிராமமணோத்தமரே! பூமியே அழிநததற்கு இதன்றோ ஆதிகாரணம்" என்றுகேட்க, பிறகு வியாஸருடையசிஷ்யரும் சிறந்தமஹிமையுள்ளவரும் வேதாாத்தங்களையறிந்தவருமாகிய வை சமபாயனர் நடநதவற்றையெல்லாம சொல்லதொடங்கினார்.

"பாதவமசததவரிறசிறநதவரே! மஹாராஜாவே! உமக்கு இந தக்கதையைககேட்கவிருப்பமிருநதால மறுபடியும் விரிவாகசசொல் லுகிறேன்; கேளும. அமபிகையின்புதநிரனாகிய திருதராஷ்டிரன் விதுரருடைய அபிபபிராயததையறிநதபிறகு மறுபடியும ஏகாநதத் தில் துரியோதனனைபபார்ததுப பின்வருமாறுசொல்லலானான். "காந் தாரியின்மகனே! த்யூதமவேண்டாம். விதுரன் அங்கீகரிக்கவில்லை. மிகச்சிறநதபுததியுள்ளவிதுரன் நமக்கு இன்னாததைஉரையான். விது ரன்சொல்வதே நமக்கு மிக்கநன்மையென்றல்லவோ நான்நினைபபது. புத்ரனே! அவன்சொன்னதையெல்லாம் நீசெய்யககடவாய். அதுதான் உனக்குநன்மையெனறு யான்நினைக்கிறேன். தேவரிஷியும் இந்திர னுக்குஆசாரியரும் மூன்றுகாலங்களையும அறிநதவரும சிறநதபுத்தி யுள்ளவருமான பிருஹஸ்பதி இநதிரனுககு எநதசசாஸ்திரத்தை யுரைத்தாரோ அதையெலலாம மஹாகவியாகியவிதுரன் ஸூக்ஷமங்க ளுடன் அறிநதிருக்கிறான். புத்ரனே! நான்கூட எபபோதும் அவன் சொல்லிலிருபபவனன்றோ? ராஜனே! சிறநதபுததிசாலியானவிது ரன்தான் கௌரவர்களுக்குத்தலைவனாக நினைக்கப்பட்டிருபபவன். மஹாபுத்திசாலியானஉத்தவன்தான் யாதவாகளில பூஜிக்கததக்க வன். மகனே! ஆதலால், சூதுவேண்டாம. சூதில் விரோததததைகாண் கிறோம. விரோதம்வநதால ராஜ்யமேஅழியும. புத்ரனே! அநதச் சூதை விட்டுவிடு தாய்தநதையாகள் மகனுக்குஆக்கும்பெருதவி யென்று எதுசொல்லபபடுகிறதோ அதை நீயடைநதிருக்கிறாய். தந தைபாட்டனாகளிடமிருநதுவந்த ராஜ்யத்தைப்பெற்றிருக்கிறாய். நீ ஓதினவன்; சாஸ்திரங்களிற்றேர்நதவன்; வீட்டில் எக்காலமுமகொண் டாடபபட்டவன்; ஸஹோதரர்களில்மூததவன்; ராஜ்யத்திலிருப்ப வன்; என்னநன்மையை நீபெறாமலிருக்கிறாய்? சிறநதகைகளையுடைய வனே! மற்றஜனங்கள்பெறுதறகரிய சிறநதஉணவுகளையும உடை களையும் நீபெறறிருக்கிறாய். அன்புள்ளமகனே! நீதுயரப்படுவதேன்?

சிறந்தகைகளையுடையவனே! தந்தைபாட்டனூர்வரிசையாகக்கிடைத்ததும் செழித்ததுமாகிய பெரியராஜ்யத்தை எப்போதும்கட்டளையிட்டுக்கொண்டு தேவலோகத்தில்தேவேந்திரன்போல (இப்புவியில்) விளங்குகிறாய். ராஜனே! உனக்குள்ளஐச்வரியமும் முன்புஎன்னால் உரைக்கப்பட்டஉனக்குள்ளஸுகங்களும் மற்றவர்கள்பெறுதற்கரியவை. எல்லாந்தெரிந்தவனே! அப்படிப்பட்டஉனக்குத் துயரத்திற்குக்காரணம் என்ன உண்டாயிற்று? அதை எனக்குச் சொல்லவேண்டும்" என்றான். அதைக்கேட்டுத் துரியோதனன், "உண்ணுகிறேன், உடுக்கிறேனென்றுபார்த்துக்கொண்டு ஆண்மையைவிட்டுப் பிறர் பெருமையில் பொறாமைபபடாதவனெவனோ அவன் இழிவானமனிதனென்றுநினைக்கப்படுகிறான். அரசர்க்கரசே! பிரபுவே! எல்லாருக்குமிருப்பதுபோன்ற ராஜ்யலக்ஷ்மியானது எனக்குஸந்தோஷத்தைத் தருவதில்லை. குந்திபுத்ரனிடத்தில் சிறப்புற்றுவிளங்கின ராஜ்யலக்ஷ்மியைக்கண்டுதான் வ்யஸனமுற்றேன். பூமிமுழுவதும யுதிஷ்டிரனுடைய ஆஜ்ஞைக்குட்பட்டிருப்பதைக்கண்டு ஜீவித்திருக்குமயான் மிகக்கடினமானவன். துக்கத்தினால் இதை உமக்குச்சொல்லுகிறேன். நீபர்கள், சித்ரகர்கள், குகுரதேசத்தவர்கள், காரஸ்கரர்கள், லோகஜங்கர்களென்னுமரசர்கள் யுதிஷ்டிரன்வீட்டில அடிமைகள்போல வசப்பட்டிருக்கின்றனர். இமயமலையிலும கடற்றீவுகளிலுமுள்ள ரத்னநிதிகளோடுகூடிய அரசர்களனைவரும் மிலேச்சஜாதியார்களனைவரும் யுதிஷ்டிரன் கிருஹத்தில தூரவிலக்கப்பட்டிருந்தனர். அரசர்க்கரசே! யுதிஷ்டிரன் என்னை மூத்தவனென்றும் சிறந்தவனென்றும் நினைத்து மரியாதையுடன் ரத்னங்களை வாங்கும்படி ஏற்படுத்தியிருந்தான். பாரதரே! அங்கேவந்த மிகச்சிறந்த ரத்னங்களுக்கும காணிக்கைகள் கொண்டுவந்தவர்களுக்கும் இக்கரையுந்தெரியவில்லை; அக்கரையுந்தெரியவில்லை. அந்தத் தனங்களை வாங்குவதற்கு என்கை போதாமற்போயிற்று. நான் களைப்படைந்திருந்தபோது தூரத்திலிருந்து கொண்டுவந்த ரத்னங்களைக் கையில்வைத்துக்கொண்டு அவரவர்கள் நின்றனர். பிந்துஸரஸிலுள்ள ரத்னங்களைக் கொண்டுவந்து மயனால் நிர்மாணஞ்செய்யப்பட்டதும் படிகக்கல் மூடப்பட்டிருப்பதனால் ஜலம்நிரம்பின தாமரைக்குளம்போன்றதுமான ஓரிடத்தைக் கண்டேன். நான் ஆடையைத் தூக்கிக்கொள்ளும்போது சத்ருவின் செல்வச்சிறப்பைக்கண்டு மயங்கினவனும் ரத்னங்களில்லாதவனுமாகிய என்னைக்கண்டு விருகோதரன் நகைத்தான். என்னால் முடிந்திருக்குமாயின் அங்கேயே விருகோதரனைக்கொன்றிருப்பேன்.

ராஜாவே! பீமனைக்கொல்ல யத்தனஞ்செய்திருப்பேனாயின் சிசுபால னுக்குவந்த கதிதான் நமக்கும்வாந்திருக்கும்; ஸந்தேஹமில்லை.* பார தரே! என்பகைவன் பரிஹாஸஞ்செய்தது என்னைச்சுடுகிறது. ராஜா வே! திரும்பவும் அதுபோன்ற மற்றொருகுளம் தாமரைமலர்களி னால் விளங்கியிருந்ததைப் படிக்கல் பூமியாகநினைத்து ஜலத்தில் விழுந்தேன். அவ்விடத்தில் என்னைப்பார்த்துக் கிருஷ்ணன் அர் ஜுனனுடன்கூட, சப்தம்கேட்கும்படி நகைத்தான். த்ரௌபதியும் அனேகஸ்திரீகளுடன்கூட என்மனம் துயரப்படும்படி நகைத்தாள். ஜலத்தில் வஸ்திரம்நனைந்துபோன எனக்குத் தர்மராஜாவினால் ஏவப் பட்ட வேலைக்காரர்கள் வேறுவஸ்திரங்களைக் கொடுத்தனர். அதுவும் எனக்குப் பெருந்துயரம். ராஜாவே! நான் மற்றொருமோசம்போன தையும் சொல்லுகிறேன்; கேளும். வாயிலிருப்பதுபோலத் தோன றும் வாயிலில்லாதவிடத்தில் வெளியே போகத்தொடங்கிக் கல்லில் அடிபட்டு நெற்றியில் புண்பட்டுக்கொண்டேன். அங்கே அவ்வாறு அடிபட்டஎன்னை, சேர்ந்திருந்த நகுலஸஹதேவர்களிருவரும் தூர த்திலிருந்துபார்த்து வ்யஸனப்பட்டுக் கைகளால் அணைத்தனர். அந்த ஸமயத்தில் ஸஹதேவன், என்னைப்பார்த்துச் சிரித்துக்கொண்டு, "திருதராஷ்டிரபுத்திரனே! வாயில் இங்கேயிருக்கிறது; அங்கே போகாதே" என்று அடிக்கடிசொன்னான். அந்தஸமயத்தில் பீம ஸேனனும், 'திருதராஷ்டிரபுத்திரனே!' என்றழைத்து, சிரித்து, "ராஜாவே! வாயில்இங்கே" என்றுசொன்னான். அந்தஸபையில் நான்கண்ட ரத்னங்களுக்குப் பெயர்களைக்கூட இதற்குமுன் நான் கேட்டதில்லை. அதுவும் என்மனத்தைச் சுடுகிறது.

---

## எழுபத்தெட்டாவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். *(தொடர்ச்சி.)

(ராஜஸூயயாகத்தில் தர்மராஜாவுக்குவந்த காணிக்கைகளைப்பற்றித் துரி யோதனன் விரிவாகத்திருதராஷ்டிரனுக்குரைத்தது.)

பாரதரே! ஆங்காங்கிருந்து அரசர்கள் பாண்டவர்களுக்குக் கொண்டுவந்த சிறந்த தனங்கள் யான்கண்டனவற்றைக் கேளும். பகைவனுடைய அந்தத்தனத்தைக்கண்டு மயங்கினநான் என்னையே அறியாமற்போனேன். பாரதரே! [1]பூமியிலிருந்தும் பூமியிலுண்டான

---

[1] பூமியிலிருந்து உண்டானவை ரத்னங்கள்முதலியவை; பூமியிலிருந்து உண்டான பொருள்களிலிருந்துஉண்டானவை வஸ்திரங்கள்முதலியவை.

காலால் பூமியைமிதிக்கும் மானிடத்தன்மையுள்ளவன் பாஞ்சாலியின்" இந்தக்கூந்தல்களைத் தொட்டபிறகு உயிரோடு என்னிடத்திலிருந்து விடுபடமாட்டான். நீண்டும திரண்டும் பரிகாயுதங்களைப போன்றுமிருக்கும் என் இருபுஜங்களையும் பாருங்கள். இவற்றின் நடுவில் அகப்பட்டபிறகு இந்திரனாலும் விடப்படமாட்டான். தர்மமென்னும் கயிற்றினால் கட்டப்பட்டும என்தமையனரிடததிலுள்ள மரியாதையினால் தடுக்கபபட்டும் அர்ஜுனனால் அடக்கப்பட்டுமிருப்பதனால் இந்தத்துயரத்தையனுபவிக்கிறேன். தர்மராஜரால் அனுமதி கொடுக்கப்பெற்றேனாயின் இந்தப்பாபிகளான திருதராஷ்டிர புதரர்களைச் சிங்கம் அற்பமிருகங்களை யழிபபதுபோலக் கைகளென்னும் கத்திகளால் துணித்துவிடுவேன்" என்றுசொன்னான். அபபோது பீஷ்மரும் துரோணருமவிதுரரும், "உன்னிடததில் எல்லாச்சக்தியும் இருப்பது தெரியும். இப்போது பொறுத்துக்கொள்" என்று பீமனுக்குச் சொன்னார்கள்.

கர்ணன், "சிறந்தபெண்ணே! அடிமை, புத்ரன், பிறருக்குட்பட்டபெண் இம்மூவரும் பொருளில்லாதவர்கள். நீ பொருளில்லாத தாஸனுடையமனைவி. உனக்கு நாதனுமில்லை. தாஸனுடைய தனமெல்லாம் எஜமானனுடையது. நீ உள்ளேபோய்த் துரியோதனனுடைய பரிவாரங்களைச்சேர். அதுதான் நீ செய்யவேண்டியகாரியம். மற்றது அவ்விடத்தில் கட்டளையிடபபடும. ஓ! ராஜபுத்ரியே! திருதராஷ்டிர புத்ரர்களெல்லாரும் உனக்கு எஜமானராகிறார்கள்; பாண்டவர்களல்லர். சிறநதபெண்ணே! யாரையடைந்தால் சூதாடிப்பந்தயத்தினால் அடிமைத்தனம்வராதோ அபபடிபபட்ட மற்றொருவனைக் கணவனாக உடனேதேடிக்கொள். தாஸியாகப்போனபிறகு தன்னிஷ்டப்படி புருஷர்களைவைத்துக்கொள்வது குற்றமாகாது. அஃது உனக்குத்தெரிநதிருக்கட்டும. யஜ்ஞஸேனன்மகளே! நகுலன் பீமஸேனன் யுதிஷ்டிரன் ஸஹதேவன் அர்ஜுனன் ஆகியஎல்லோரும் தோற்றுப்போனார்கள். அதனால், நீ தாஸியானாய். தங்களைத்தோற்றவர்கள் உனக்குக்கணவராகார்கள். பாஞ்சாலராஜனான துருபதன்பெண்ணாகியஇவளை ஸபைநடுவில் பந்தயம்வைத்தாடின தர்மராஜன் தன்பிறப்பின்பயனையும் பராக்ரமததையும ஆண்மையையும் நினைக்கவில்லையோ?" என்றுசொன்னான். பீமஸேனன் அதைக்கேட்டு மிகவும்பொறாதவனாகி ராஜாவையனுஸரித்துத் தர்மமென்னும் கயிற்றினால்கட்டப்பட்டுக் கர்ணனையெரிப்பவன்போல (பார்த்து) கோபத்தினால் சிவந்தகண்களோடு துயரத்துடன் மிகபபெரு

மூச்செறிந்தான். அவன், "தர்மராஜாவே! இந்தத்தேர்ப்பாகன் மகன்மேல் எனக்குக்கோபமில்லை. உண்மையாக அடிமைததொழில் தான் அவனிட்டகட்டளை. நீர் இவனைபபநதயம் வைக்காமலிருப்பீ ராயின் பகைவர்கள் நம்மை இவ்வாறுபேசுவார்களா" என்று தர்ம ராஜாவைப்பார்த்துச் சொன்னான்.

பீமஸேனன்சொல்லைக் கேட்டவுடன் ராஜாவான துரியோத னன், மதிமயஙகி மௌனமாயிருநத யுதிஷ்டிரரைநோக்கி, "ஓ! அர சனே! பீமஸேனனும் அர்ஜுனனும நகுலஸஹதேவர்களும் உன்னு டையகட்டளையை எதிர்பார்ததிருக்கினறனர். கிருஷ்ணை ஜயிக்கப் படாதவளென்று நீ நினைக்கிறாயா? அவள்கேள்விக்கு மறுமொழி சொல்" என்றுசொன்னான். தர்மராஜாவைபபார்தது, இவ்வாறு சொன்னபிறகு தன்னுடையஐசுவர்யத்தின் காவத்தினால் மதிகெட்ட துரியோதனன் புன்னகையுடன் பாஞ்சாலியைபபார்த்துப பீமஸே னனை அவமானபபடுததுவதற்காகக் கர்ணனுடன்பரிகாசஞ்செய்து தன்வஸ்திரத்தைவிலக்கி வாழைமரததுக்கும் *யானைததுதிக்கைக்கும் ஒப்பானதும வஜ்ராயுதததுககுஒபபானதிட்முள்ளதும் எல்லாலக்ஷ ணங்களுமபொருநதியதுமான தன் [1]இடததுடையை, திரௌபதி பார்க்க அவளுக்குக்காண்பிததான். பீமஸேனன் அவனைப்பார்த் துச் சிவநதகண்களைவிழிதது அரசர்களின்நடுவில் அநதஸபையோ ரெல்லாம்கேட்கும்படி, "ஓ! துரியோதனா! விருகோதரன் பெரும் போரில் உன்னுடைய இநதத்துடையைக் கதையினால்பிளநதுவிடா னாயின் அவன்முன்னோர்கள் சென்றலோகத்திறகுச் செல்லான்" என்றுசொன்னான். கோபித்த பீமஸேனனுடைய மயிர்க்கால்கள் எல் லாவற்றினின்றும் அக்னிஜ்வாலைகள், கொளுத்தப்பட்ட மரத்தின் பொநதுகளினின்றும் கிளம்புவதுபோல வெளிப்பட்டன.

அபபோது *விதுரர், "பிரதீபவம்சத்து அரசர்களே! பெரும் பயத்தைப்பாருங்கள். பீமஸேனனால் அநதபபயமவருமென்று தெரி நதுகொள்ளுங்கள். இநதப் பரதவம்சத்தாரிடத்தில் இந்தப்பெரிய அநீதி *முநதியவினைப்பயனாக உண்டாயிருப்பதென்பது திண்ணம். ஓ! திருதராஷ்டிரபுத்திரனே! ஸபையில் ஸ்திரீயைக்கொண்டுவந்து விவாதஞ் செய்வதென்பது அளவுக்குமேற்பட்ட சூதாட்டமாகச் செய்யபபட்டிருக்கிறது. உங்களுடைய யோகக்ஷேமங்களனைத்தும் அழிநதன. கௌரவர்கள் பாவமான ஆலோசனைகளைச் செய்கின்ற

[1] இடத்துடை தன்ஸ்திரீக்கு உரியது; ஆதிபர்வம் ௩அக-ம் பக்கத்திற் காண்க

னர். கௌரவர்களே! இந்தத்தர்மத்லைதச் சீக்கிரம்தெரிந்துகொள்ளுங்கள். தர்மம் கெட்டால் ஸபைகெடும். சூதாடுகிறவன் தன்னைத் தோற்பதற்குமுன்னே இவளைப்பந்தயம்வைத்திருப்பானாயின் இவளுக்கு அதிகாரியாயிருந்திருப்பன். ஸ்வதந்திரமில்லாதவன் எதை வைத்தாடுகிறானோ அதைஜயித்தது கனவில்ஜயித்த தனம்போலத் தானாகுமென்று நினைக்கிறேன். கௌரவர்களே! சகுனிசொல்லைக் கேட்டு இந்தத்தர்மத்தை விட்டுவிலகிப்போகாதீர்கள்" என்றுசொன்னார். அப்போது துரியோதனன், "யாஜ்ஞஸேனியே! பீமன் அர்ஜுனன் நகுலஸஹதேவர்கள் இவர்களுடைய சொல்லுக்காகக் காத்திருக்கிறேன். யுதிஷ்டிரனுக்கதிகாரமில்லையென்று அவர்கள்சொல்லட்டும். உடனே அடிமைத்தனத்திலிருநது விடப்படுவாய்" என்று சொன்னான். அப்போது அர்ஜுனன், "குந்திபுத்ரரும் மஹாத்மாவுமான தர்மராஜர் முதலில் எங்களைப்பந்தயமவைத்தபோது அதிகாரமுள்ளவராயிருந்தார். அவர் தம்மைத் தோற்றபிறகு யாருக்கதிகாரியென்பதைக் கௌரவர்களனைவரும் அறியுங்கள்" என்றுசொன்னான். கர்ணன், "துசசாஸனா! நான்சொல்வதைத்தெரிநதுகொள். வெகுநேரம் இவனோடென்னபேச்சு? வீரனே! திரௌபதியையழைத்துபபோ துரியோதனா! நீ அவளைத்தாஸியாகவைத்து உன்னிஷ்டப்படியனுபவி" என்றுசொன்னான். பிறகு காந்தாரராஜாவின் புத்ரனானசகுனி, "கர்ணா! சிறந்தகைகளையுடையவனே! 'உன்னிஷ்டப்படிசெய்' என்று நீ சொன்னது நன்றாயிருக்கிறது" என்றுசொன்னான். துராத்மாவானதுசசாஸனன் பிறகு திரௌபதியைப்பலாத்காரமாகச் சீக்கிரத்தில் உள்ளேஅழைத்துக்கொண்டுபோக ஆரம்பித்து அவளையிழுத்தான். அதனால் பெண்ணரசியான பாஞ்சாலி கதறினாள். "பீஷ்மரே! துரோணரே! அச்வததாமாவே! கிருபரே! தர்மிஷ்டரும் தர்மததில் அன்புள்ளவருமானவிதுரரே! என்னைக்காப்பாற்றுங்கள். திருதராஷ்டிரமஹாராஜாவே! உமதுமருமகளைக் காப்பாற்றும். மஹானுபாவையும் எல்லாமதெரிந்தவளும எல்லாவற்றையும் பார்த்திருப்பவளுமான காந்தாரியே! துரியோதனன்பயத்தினால்வருத்தபபட்டு நடுங்கியிருக்குமென்னைக் காப்பாற்று. வீரர்களைப பெற்ற குந்திதேவியே! என்னை நீபார்க்கவில்லையே. அயோக்யனால் பிடிக்கப்படும் உன்மருமகளை நீகாபபாற்றவில்லையே. இவ்வாறு அடிக்கடிபுலம்புகிறஎன்னைப்பற்றி யாரும் ஒன்றும்சொல்லாமற்போனால் பாக்கியமற்றநான் துரியோதனனுக்குவசப்பட்டுக கெட்டுபபோவேன் பாண்டுமஹாராஜாவும் தர்மதேவதையும தேவேநதிரனும

வாயுபக்வானும் அச்விநிதேவதைகளும் தங்கள்மருமகளைக் காப்பாற்றவில்லையே. பதிவிரதையும் பாக்கியமில்லாதவளுமானநான் ஜீவிப்பேனாயின் கஷ்டம். சீ!" என்றாள்.

விதுரர், "ராஜகுமாரியே! நீசொல்லுகிறதை நான்கேட்கிறேன். இந்தப்பாண்டவர்கள் ஒன்றும பேசுவதில்லையே. பாபபுத்தியுள்ளவனும் செய்நநன்றிகொன்றவனுமான துரியோதனனை உன்விருப்பத்திற்காக நான்சொல்லும் சொல்லை நீயே கேள். துரியோதனனும் அவனைசசேர்ந்தவர்களும மிகக்கெட்டவர்கள். திருதராஷ்டிரமஹாராஜர் பிள்ளைகளுடன்கூடவே மோசம்செய்கிறார். பாபபுத்தியுள்ளவனும் மிகக்கெட்டவனுமாகிய இநததுரிபோதனன் நான்சொல்லும் பெரியசொல்லைக் கேளாமற்போவனே என்னவோ" என்று திரௌபதிக்குச்சொல்லித திருதராஷ்டிரனுடைய புத்ரனை துச்சாஸனனைப்பார்தது, "ராஜபுததிரா! திரௌபதியைக் கஷ்டப்படுத்தாதே; நீ நாசத்தைபபாராமலிருக்கலாம" என்று சொன்னார். துச்சாஸனனுக்கு இவ்வாறு சொன்னபிறகு திருதராஷ்டிரனைப்பார்த்து, "மஹாராஜாவே! நீர் இவ்வாறு திரௌபதியைக் கஷ்டப்படுததுவீராயின் பாண்டவர்களைக் கெடுத்தகாரணத்தினாலேயே இநதபபாவியான உமதுபுத்ரனும் அவன்மநதிரிகளும கோபிததபீமார்ஜுனர்களிருவர்களாலும் நகுலஸஹதேவர்களாலும் வெகுசீககிரத்தில் அழிக்கபபடுவார்கள். ஆதலால், பிள்ளையைத தடுக்கக்கடவீர். கெட்டுபபோகக்கருதவேண்டாம" என்று சொன்னார். இதைக்கேட்டு, புத்திகெட்ட திருதராஷ்டிரன் ஒருமறுமொழியும சொல்லவில்லை. அப்போது நீண்டகண்களையுடைய பாபியான துரியோதனன் விதியினால் வந்த அறிவின்மையினால் இழுக்கபபட்டு விதுரர்சொன்னதை லக்ஷ்யஞ்செய்யாமல ஸநதோஷததுடன் அடிக்கடி திரௌபதிககுத துடையைக்காண்பித்தான். துடையைக்காண்பிக்கும்போது தர்மபுத்ரரின் தமபியும் பலமும்அகங்காரமுமுள்ளவனுமான விருகோதரன் துரியோதனனைப்பார்த்தான். அபபோது பீமஸேனன், தனககுச்செய்த அந்த அவமானத்தைநினைத்துச சிவநதகண்களைவிழித்துக் கோபத்தையடக்கி வெளிப்படையாகப் பின்வருமாறு சொல்லலானான்.

"நான் துரியோதனனைக்கொல்வேன். தனஞ்சயன் கர்ணனைக் கொல்வான். சூதில் தேர்ந்தவனாகிய சகுனியை ஸஹதேவன் கொல்வான். இந்த ஸபைநடுவில் மறுபடியும இநதப் பெரியசொல்லைச் சொல்வேன். நமக்கு யுததமநேரும்போது தேவர்கள் இதை ஸத்யமாகச்செய்வார்கள். இநதப்பாவியான துரியோதனனை யுதததில்

கதையினால் கொல்வேன். தரையில்விழுந்த இவன்தலையைக் காலால் மிதிப்பேன். சூரனும் கொடியவனும் துராத்மாவுமான துச்சாஸன னுடைய மார்பைப்பிளந்து சிங்கம்போல ரக்தத்தைக்குடிப்பேன்" என்றுசொன்னான். அர்ஜுனன், "பீமஸேனா! உன்னுடன்பகைத்த வர்கள் இருப்பதில்லை. வீட்டில் ஸுகமாயிருக்கும் மூடர்களுக்குப் பெரும்பயம்தெரியாது. பீமா! சிறந்தவர்களுடையமுயற்சி பேச்சி னால்தெரிவிக்கப்படாது. க்ஷத்திரியதர்மத்தின்படி இவர்கள் யுத்தத் தில் நம்முடன்நிற்பார்களாயின் துரியோதனன் கர்ணன் துராத்மா வானசகுனி துச்சாஸனன் இந்நால்வருடைய ரக்தத்தையும் பூமிகுடிக் கும். பீமஸேனா! இந்ததுராத்மாக்கள் ஸந்தோஷப்படும்படி பேசு கின்ற பொறாமைக்காரனானகர்ணனை உன்ஆஜ்ஞையினால் நான் யுத் தத்தில் கொல்வேன். கர்ணனையும் கர்ணனைச் சேர்ந்தவர்களையும் பாணங்களினால் யுத்தத்திற்கொல்வேன். மற்றுமுள்ள எந்த அரசர்கள் புத்தியில்லாமல் என்னோடு யுத்தஞ்செய்வார்களோ அவர்களெல்லோ ரையும் கூரிய அம்புகளினால் யமலோகத்திற்கனுப்புவேன். என்னு டையஸத்யம்போமானால் இமயமலை இடத்தைவிட்டுவிலகும்; ஸூர் யன் ஒளியற்றுப்போவான்; குளிர்ச்சி சந்திரனைவிட்டுப்போய்விடும்" என்றுசொன்னான். அர்ஜுனன் இவ்வாறுசொன்னபிறகு பெருமை யுள்ளவனும் பராக்ரமமும் சிறப்புமுள்ளவனும் மாத்ரிபுத்ரனுமான ஸஹதேவன் பெரியகையைத்தூக்கிச் சகுனியின்வதத்தைச்செய்யக் கருதிக் கோபத்தினால் கண்கள்சிவந்து பலமுறைபெருமூச்சுவிட்டுக் கொண்டு பின்வருமாறுசொல்லலானான். "மூடா! காந்தாரராஜாக்க ளின்புகழைக் கெடுத்தவனே! நீ எவற்றைப் பாசிகைகளென்று நினைக்கிறாயோ இவைபாச்சிகைகளல்ல; உன்னால் யுத்தஞ்செய்வதற் காக எடுக்கப்பட்ட கூர்மையானபாணங்களாகும். ஸுபலபுத்ரனே! க்ஷத்திரியதர்மப்படி நீயுத்தத்தில்நிற்பாயாயின் உன்னைப்பற்றிப் பீமன் சொன்னதை உன்விஷயத்திலும் உன்பந்துக்கள்விஷயத்திலும் செய் கையினால் நிறைவேற்றுவேன். [1]முடித்துக்கொள்ளவேண்டியவற்றை யெல்லாம் முடித்துக்கொள்" என்றான். ஜனமேஜயரே! ஸஹதே வன்சொல்லைக்கேட்டு மனிதர்களுள் மிக்கஅழகானநகுலனும் சொல் லலானான். "இந்தச்சூதாட்டத்தில் மோசக்காரர்களும் திருதராஷ் ட்ரபுத்ரர்களும் துரியோதனனுக்கு வேண்டினவர்களுமான எவர்க ளால் இந்தத்திரௌபதி கொடுஞ்சொற்கள் சொல்லப்பட்டாளோ, மிகக் கொடியநடையுள்ளவர்களும் இறக்கப்போகிறவர்களும் காலத்

[1] பிறகு நீயிருக்கமாட்டாயென்பதுகருத்து.

தினுல் ஏவப்பட்டவர்களும்ான அவர்களில் பெரும்பான்மையோருக்கு யமலோகத்தை நான்காண்பிப்பேன். எனக்குப் பங்காளியும் மனிதர்களில் இழிவானவனும் துராத்மாவுமான உலூகனென்னும் சகுனியின் அன்புள்ளபுத்ரனை யுத்தத்தில நான்கொல்லப்போகிறேன். தர்மராஜருடைய கட்டளையினுலும் திரௌபதியின் கருத்தையனுஸரித்தும் பூமியில் திருதராஷ்டிரபுத்திரர்கள் இல்லாமற் சீக்கிரத்தில் செய்துவிடுவேன்" என்றான். திரௌபதி, "பாபிஷ்டா! நீ துடையை எனக்குக்காண்பித்து நீயும்பார்த்துக்கொண்டதனுல் உனக்கு மரணம துடையிலேயே வரப்போகிறது. துராத்மாவான உன்ஸஹோதரன் என்னை இப்படிப்பீடிப்பதனுல இவனது ரக்தத்தை விருகோதரன் குடிக்கவேபோகிறான். மிகக்கெடுநினைவுள்ள இந்தக் கர்ணனைப் பிள்ளைகள் பந்துக்கள மந்திரிகள் சேனைகள் முதலியவர்களோடு தனஞ்சயன்கொல்லப்போகிறான். அலபத்தனமுள்ளவனும் மோசக்காரனும் பாபத்தில் மனமுள்ளவனுமாகிய சகுனியையும் அவன் சுற்றத்தாரையும் ஸஹதேவன் கோபித்து யுத்தத்திலகொல்லப்போகிறான்" என்றுசொன்னுள். தர்மமான ஒழுக்கமுள்ள திரௌபதியினுல் இந்தசசொல் சொல்லப்பட்டபோது அந்தச்சபையில் ஆகாயத்திலிருந்து மிகப்பெரியபூமாரிபொழிந்தது. ஜனமேஜயராஜாவே! அவர்கள்சொன்னதைககேட்டு அந்தஸபையோர் பேசவில்லை. அர்ஜுனன்பயத்தினுல் அந்தச்சபையெல்லாம ஒலியடங்கி யிருந்தது.

---

## தொண்ணூற்றுமூன்றுவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். (தொடர்ச்சி.)



(கோபித்தஅர்ஜுனனை யுதிஷ்டிரர்ஸமாதானப்படுத்தியதும், திரௌபதிக்குத் திருதராஷ்டிரன் வரமளித்ததும்.)

அப்பொழுது திரௌபதி சொல்லியதைக்கேட்டுக் கோபமுற்றதனஞ்சயன் கோபத்தினுல் சிவந்தகண்களுடன், "இந்தத்தர்மராஜரானயுதிஷ்டிரர் என்னைத்தடுக்கிறார்" என்றுசொன்னான். இவ்வாறுசொல்லி வீரனுனஸவ்யஸாசியானவன் கோபத்தாற் சிவந்தகண்களுடன் வில்லையெடுத்துக்கொண்டெழுந்து அந்தச்சத்துருக்களைப் பார்த்தான். பிரளயகாலத்தில் எல்லாலோகங்களையுமெரிக்கும் அக்னியைப்போலவும் தக்ஷயாகத்தில் பசுக்களைக்கொல்ல யத்தனித்துக் கோபித்த ருத்திரரைப்போலவும் வில்லைக்கையிற்பிடித்துக் கொல்

வதற்காகப் பலமுறைநோக்கிக்கொண்டு யுத்தத்திற்குமுயற்சியுள்ள வனுயிருந்த அர்ஜுனனை அங்குள்ள அரசர்களனைவரும் கண்டனர். அவ்வாறிருந்த அர்ஜுனனைக்கண்டு அங்குள்ளமனிதர்கள் வ்யஸன முற்றனர். தனஞ்சயனுடைய பராக்ரமத்தையறிந்தவரனைவரும் அப்போது உயிரில்ஆசையைவிட்டு இமைகொட்டாத கண்களோடு இறந்தவர்போலிருந்தனர். அர்ஜுனனையும தர்மபுத்திரரையும் அரசர்கள் கண்ணெடுத்துப்பார்த்தனர். அப்போது அர்ஜுனன் கோபித்ததைப்பார்த்துப் பூமிநடுங்கிற்று. ஆகாயத்திற் சஞ்சரிக்கும்பிராணிகளும் பயப்பட்டுநடுங்கின. அபபோது ஸூர்யனும் பிரகாசிக்கவில்லை; காற்றுமடிக்கவில்லை; சந்திரன், நக்ஷத்திரங்கள், ஆகாயம், திசைகள் ஒன்றும்பிரகாசிக்கவில்லை; ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமாகிய உலகமனைத்தும் கலங்கிபபோயிறறு. அநத அர்ஜுனன் எழுந்திருக்கும்போது ஆகாயத்தில் ஸூர்யன்உதயமாவதுபோல விளங்கினன். அவ்வாறுகோபித்துப் பிரளயகாலத்தில் உலகத்தையழிக்கும் யமனுக்கொப்பாயிருந்த அர்ஜுனனைக்கண்டு பீமஸேனனும் ஸந்தோஷமடைந்து யுத்தஞ்செய்யவே எண்ணங்கொண்டான். அபபோது கருடன் நாகஙகளைக்கொல்வதுபோல எலலாபபகைவரையும் கொல்லக்கருதி மிகக்கோபிதத தனஞ்சயனைத திரௌபதியும்நோக்கினள். கோபித்துப் பிரளயகாலதது அக்னியைபபோல ஜ்வலிக்கின்றஅர்ஜுனன், கண்ணெடுத்துபபார்க்க முடியாமலிருநதான். பராக்ரமத்தோடுகூடியஅர்ஜுனனைக்கண்டு அந்தநகரத்திலுள்ளோர் வ்யஸனபபட்டனர். வேகமாகக்கிளமபுகின்ற தனஞ்ஜயனைக்கண்டு தர்மராஜாவானவர் இநதிரன் உபேநதிரனையடக்குவதுபோல அடக்கினர். தமையுள்ளவரும் மூத்தவரும் தர்மராஜாவுமான யுதிஷ்டிரர், "அர்ஜுன! அவஸரமாகக் காரியமசெய்யாதே. கீர்த்திஅழியலாகாது. பாபஞ்செய்தவர்களாகிய இந்தசூதாட்டக்காரர்களை நான்எரித்துவிடமுடியும். ஆனல், அஸதயத்திற்கு அதுமார்க்கமென்றறிந்ததனல் என் கோபம் அடங்குகிறது. 'பாண்டவனே'! 'உலகநன்மைக்காக நீயும் இந்தக் கோபத்தையடக்கு" என்றுசொன்னர். தர்மராஜாவினல் இவ்வாறுசொல்லப்பட்ட பாண்டவனனதனஞ்ஜயன் துரியோதனன் மேலிருந்தகோபத்தை அடக்கிக்கொண்டான். அந்தவீரனனபற்குனன் அடங்கினபோது ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமடங்கியஉலகம் மறுபடியும் ஸநதோஷமடைந்தது. ஜனமேஜயரே! அவ்வாறு தமையனரால் அர்ஜுனன் தடுககப்பட்டதைக்கண்டு விருகோதரன் துயரமடைந்தான். அந்தச்சபை சப்தமில்லாமலிருந்தது. ஜனமேஜயரே!

அப்போது திருதராஷ்டிரமஹாராஜாவின் கிருஹத்தில் அக்னிஹோத்ரசாலையில் நரி உரக்கஊளையிட்டது. நாலுபக்கங்களிலும் கழுதைகளும் கொடியபக்ஷிகளும் நரிகளுக்கு எதிராக ஒலித்தன. தத்துவஜ்ஞானியானவிதுரரும காந்தாரியும் வித்வானுன பீஷ்மத்ரோணகிருபர்களும் அநதவிகாரமான சப்தத்தைக்கேட்டு, 'சுபமுண்டாகவேண்டும், சுபமுண்டாகவேண்டும' என்று உரக்கக்கூறினர். பிறகு காந்தாரியும் எல்லாந்தெரிந்தவரானவிதுரரும அந்தக்கொடிய அபசகுனத்தைக்கண்டு துக்கத்துடன் திருதராஷ்டிரமஹாராஜாவுக்குத் தெரிவித்தனர்.

அதன்பிறகு திருதராஷ்டிரன், "புத்தியில்லாததுரியோதனு! அயோக்யா! கௌரவர்களின்ஸபையில் ஒருபெண்ணை - அதிலும் தர்மபத்னியான திரௌபதியைபபார்தது பரிஹாஸமாகப்பேசினுய். அதனுல், கெட்டுபபோகிருய்" என்றுசொன்னுன். நல்லபுத்தியுள்ளவனும் உண்மையையறிந்தவனுமான திருதராஷ்டிரன் இவ்வாறுசொல்லித் தன்புத்ரர்களுக்கு அபாயம் நேர்நதிருபபதைப் புத்தியினுல் ஆராய்ந்து அவர்களின்நன்மையைத்தேடி, பாஞ்சாலராஜன் மகளான கிருஷ்ணையைநோக்கி, இன்சொலலைமுன்னிட்டு, "பாஞ்சாலீ! தர்மத்தையே தலைமையாகக்கொண்டவளும கறபுளளவளுமாகியநீ எனது மருமக்களுக்குள் சிறநதவளாகையால உனக்கென்னவரம் வேண்டுமோ அதை என்னிடமகேள்" என்று சொன்னுன். அதைக்கேட்டுத திரௌபதி, "பரதசரேஷ்டரே! நீர் எனக்குவரமகொடுபபதாயிருந்தால் கேட்கிறேன். எல்லாத் தர்மங்களையும அனுஸரிபபவரும் மேன்மை பொருநதினவருமான யுதிஷ்டிரர் தாஸராகாமலிருக்கக்கடவர். உயர்நதமனமுள்ளவனும் என்புதல்வனுமாகிய இநதப்ரதிவிந்தியனை அறியாதசிறுவர்கள் 'தாஸபுத்ரா!' என்றழையாமலிருக்க வேண்டும். பாரதரே! முதலில் ஸாதாரணமனிதனுகஇராமல் ராஜபுத்ரனுகஇருநது கொண்டாடபபட்டபுருஷன் தான்தாஸபுத்ரனென்றறிந்தால் இறந்துவிடுவானன்றே?" என்றுசொன்னுள். "சிறந்தவளே! நீஎப்படிச்சொல்லுகிருயோ அபபடியேயாகட்டும். மங்களமானவளே! உனக்கு இரண்டாவதுவரமும் கொடுப்பேன்; கேள். என்மனமேகொடுக்கிறது. உனக்கு ஒருவரம்போதாது" என்று சொன்னுன். திரௌபதி, "ராஜாவே! ரதங்களும் விற்களுமுள்ளவர்களான பீமசேனுர்ஜுனர்களும் நகுலஸஹதேவர்களும் அடிமைகளாயிராமல் ஸ்வதந்திரர்களாயிருக்கும்படி நான் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றுகேட்டாள். திருதராஷ்டிரன், "மஹானுபாவை

யே! பெண்ணே! நீ விரும்புகிறபடியே ஆகட்டும். நம்மிடத்தில் மூன்றாவதுவரமுங்கேள். இவ்விரண்டுவரங்களினால் நீமுழுநன்மையும் பெறவில்லை. தர்மந்தவறாதவளானநீதான் எனது மருமக்களெல்லாரிலும் சிறந்தவள்" என்றுசொன்னான். திரௌபதி, "மஹிமை பொருந்தியவரே! ஆசையானது தர்மத்தைக்கெடுக்கும். ஆதலால், நான்ஆசைப்படவில்லை. ராஜச்ரேஷ்டரே! நான் மூன்றாவதுவரம் வாங்கத்தகாதவள். அரசர்க்கரசே! வைசியனுக்கு ஒருவரமென்றும், க்ஷத்திரியப்பெண்ணுக்கு இரண்டு வரங்களென்றும், ராஜாவுக்கு மூன்றுவரங்களென்றும், பிராம்மணனுக்கு நூறுவரங்களென்றும் சொல்லுகின்றனர். இந்தஎன்கணவர்கள் மிகப்பாபமுள்ளவர்களாக ஆகி இப்போது கரையேற்றப்பட்டனர். ராஜாவே! இனி, தம்நற்செய்கைகளினால் நன்மைகளையடைவார்கள்" என்று சொன்னாள்.

---

## தொண்ணூற்றுநான்காவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். (தொடர்ச்சி.)



**(கர்ணன்சொன்னதற்காகக்கோபித்த பீமனைத் தர்மபுத்திரர் அடக்கினது.)**

கர்ணன், "அழகினால் பெயர்பெற்றமானிடப்பெண்கள் நாம் கேட்டிருப்பவர்களுள் யாருக்கும் இப்படிப்பட்ட செய்கையிருந்ததைக் கேட்டிலம். இந்தஸபையில் திருதராஷ்டிரபுத்ரர்கள் பாண்டவர்களின்மேல் கரைகடந்த கோபாவேசம்கொண்டிருந்த ஸமயத்தில் துருபதபுத்திரியானகிருஷ்ணை பாண்டவர்களுக்குப்பரிஹாரமானாள். ஓடமில்லாத ஜலத்தில்விழுந்து தரைஅகப்படாமல முழுகிக்கொண்டிருக்கும்பாண்டவர்களுக்கு இந்தபாஞ்சாலி கரைசேர்க்கும் கப்பலானாள்" என்றுசொன்னான். கௌரவர்களின் நடுவில் அவன்சொல்லியதைக்கேட்டு, பீமஸேனன் மிக்ககோபமும் துயரமுமுற்றவனாகி, 'பாண்டவர்களுக்கு ஸ்திரீதான்கதியா' என்றுசொல்லி அர்ஜுனனைப்பார்த்து, "ஓ! தனஞ்சயா! 'ஸந்ததி, புண்ணியகர்மம், ஞானம் என்னும் மூன்றுஒளிகள் சேர்ந்தவன்தான் மனிதன்; ஏனெனில், இம்மூன்றனோடுந்தான் பிரஜைகள் படைக்கப்பட்டிருக்கின்றனர். உயிர்போனபிறகு அசுத்தமும் ஒன்றுமில்லாததுமானதேஹம் உறவினரால்விடப்படும்போது இம்மூன்றுந்தான் ஆத்மாவுக்கு ஸாதகங்களாகின்றன' என்று தேவலர்சொல்லியிருக்கிறார். பெண்டாட்டியை அயலான்தொட்டதனால் நமக்கு அந்தஒளிகெடுக்கப்பட்டது. பிறன்

தொட்டவளிடத்தில் உண்டானது ஸந்ததியாவதெப்படி?" என்று சொன்னான். (அதற்கு அர்ஜுனன்) "பாரதனே! மேலோர், இழிவானவன் கடுஞ்சொற்களைசசொன்னாலும், சொல்லாவிட்டாலும் அவனுக்கு மறுமொழிகூறுவது ஒருகாலுமில்லை. எல்லாந்தெரிந்தவர்களும் தமக்குத்தாமே கௌரவத்தைப்பெற்றவர்களுமான சான்றோர்கள் பிறர்செய்தஉபகாரங்களைமட்டும் நினைப்பர்கள். அபகாரங்கள் செய்யப்பட்டிருநதபோதிலும் அவற்றைநினையார்" என்றுசொன்னான். பீமஸேனன், "அரசர்க்கரசே! தர்மராஜாவே! சேர்நதிருக்கும் இந்தச்சத்துருக்களனைவரையும் இங்கேயே வேரோடுஅழித்துவிடட்டுமா? அல்லது இதைவிட்டுவெளிப்பட்டபிறகு செய்யட்டுமா? பாரதரே! இதில் நமக்குஸந்தேகந்தான் எதற்கு? வாய்ச்சொல்தான் எதற்கு? இந்தஇடத்தில் இப்போதே இவர்களைக்கொன்றுவிடுகிறேன். இந்தப்பூமியை நீர்ஆளும்" என்றுசொல்லித் தன்தமபிமார்களுடன்கூட மான்களின் நடுவிலிருககும் ஸிம்மம்போல அடிக்கடி பகைவரைக் கண்ணெடுத்துப்பார்ததான். சிறநதகைகளுடைய வீரனாகியபீமன் சிறந்தசெய்கையுடைய தர்மராஜாவினால் ஸமாதானஞ் செய்யப்பட்டும் அவரைப்பார்த்து உட்கொதிப்பினால் கஷ்டப்பட்டுக்கொண்டேயிருந்தான். ஜனமேஜயரே! கோபித்தபீமஸேனனுடைய காதுகள்முதலான துவாரங்களிலிருந்து புகையோடும் பொறிகளோடும் ஜ்வாலையோடுங்கூடத் தீயுண்டாயிற்று. அவனுடையமுகம் பிரளயகாலத்தில் உருவமெடுதது வநத யமனுடையமுகம்போலப் புருவநெறிப்பினால் பார்ககக்கூடாமலிருநதது. கைகளால் சோபிப்பவனாகிய அநதபீமனை யுதிஷ்டிரர் கையினால்தடுத்து, "பாரதனே! இதுவேண்டாம; பேசாமலிரு" என்றுசொன்னார். கோபத்தினாற் சிவந்தகண்களையுடைய அம்மஹாவீரனைத தடுத்தபிறகு தம்தநதையான திருதராஷ்டிரனிடம் கைகூப்பிநின்றார்.



## தொண்ணூற்றைந்தாவது அத்தியாயம்.

## த்யூதபர்வம். (தொ. ௬௯.)

——⁂——

(திருதராஷ்டிரன் விடைகொடுத்ததன்மேல் தர்மபுத்திரர் இந்திரப்ரஸ்தம்சேன்றது.)

யுதிஷ்டிரர், "பரதவம்சததரசே! உமக்கு நாங்கள் என்ன செய்யக்கடவோம்? எங்களுக்குக் கட்டளையிடும். நீர்தாம் எங்களுக்குப்பிரபு. பாரதரே! எபபோதும உமதுகட்டளைப்படி நடக்கக்

கருதுகிறோம்" என்றுசொன்னார். திருதராஷ்டிரன், "அஜாதசத்ருவே! உனக்கு நன்மையுண்டாகட்டும். நீங்கள்க்ஷேமமாய் உபத்திரவமில்லாதவழியிற் செல்லுங்கள். என்றால்விடைகொடுக்கப்பெற்ற நீங்கள் உங்கள்தனங்களுடன்சென்று ராஜ்யத்தையாளுங்கள். முதிர்ந்தவனாகிய எனதுஇந்தக்கட்டளையை நீங்கள் அறியவேண்டும். நான் சொல்வதெல்லாம் உங்கள் நன்மைக்கும் மேன்மைக்கும் முக்கியகாரணமாகும். அப்பா! யுதிஷ்டிரா! தர்மங்களின் நுட்பமானவழிகளை நீஅறிந்தவன். சிறந்தஅறிவுள்ளவனே! நீ நன்றாகக்கற்பிக்கப்பட்டவன்; பெரியோர்களிடத்தில் பணிவுசெய்தவன். அறிவுள்ள இடத்தில் அடக்கமிருக்கும். பாரதனே! நீஆறுதலடை. [1]மரமல்லாதனவற்றில் வாள்முதலியஆயுதங்கள் பிரவேசிப்பதில்லை. ஆதலால், மரத்திலேதான் அவைபோடப்படுகின்றன. எவர்கள், தீங்குகளைமறந்து குற்றங்களைப்பாராமல் குணத்தையேஅறிந்து பகைசெய்யாமலிருக்கின்றனரோ அவர்கள்தாம் மேன்மக்கள். மேன்மக்கள் பிறர்செய்த உபகாரங்களையே நினைப்பதன்றிப் பிறராற்செய்யப்பட்டதீங்குகளை நினையார்; அயலாருக்கு உபகாரஞ்செய்யும்போது பிரதியுபகாரத்தை எதிர்பாரார். யுதிஷ்டிரா! கீழ்மக்கள் ஒற்றுமையாகப்பேசும்போதே கடுஞ்சொற்களைச்சொல்வர். தாங்கள் முதலிற்சொல்லாமல் பிறர் சொன்னபிறகு அவர்களுக்குக் கடுஞ்சொல்சொல்லுகிறவர்கள் நடுத்தரத்தினர். தீரர்களானமேன்மக்கள் பிறர் இன்னாதகடுஞ்சொற்களைச்சொன்னாலும் (சொல்லக்கருதி) சொல்லாமலிருந்தாலும் தாங்கள்ஒருபோதும மறுமொழிசொலலார். எல்லாம்தெரிநதசான்றோர் ஆத்மஞானததையடைந்து உபகாரங்களையேநினைப்பதன்றி அபகாரங்கள்பிறராற்செய்யப்பட்டிருநதாலும் அவற்றைநினையார். ஸாதுக்கள் ஆரியர்களின்வரம்புகளைக்கடவாமல் காண்பதற்கினியவராகவேயிருப்பார். அப்படியே யோக்யனாகியநீயும் ஸபையில் சான்றோர்நடப்பது போலவே நடநதிருக்கிறாய். அபபா! துரியோதனன்செய்த அந்தக் கொடுமையை மனத்தில்வைக்காதே. பாரதனே! உன்தாயான காந்தாரியையும, உன்குணத்தில் அன்புடன்வநதிருக்கும் முதியோனும் கண்தெரியாதவனும 'உன்தநதையுமாகிய என்னையும் பார். நான் நமதுபுதரர்களின் ஸ்நேஹிதர்களையும் பலாபலங்களையும் பார்க்கக் கருதினதனால்'தெரிந்துதான் இநதச்சூதாட்டத்தை விலக்காமலிருந்தேன். வேந்தே! உன்னை ராஜாவாகவும் எல்லாச்சாஸ்திரங்களையும் கறறுணர்நதசிறநதபுத்தியுள்ளவிதுரனை மந்திரியாகவும் பெறறகௌர

[1] பொறுததவனிடத்தில்தான் பகைசெய்வரென்பது கருத்து.

வர்களுக்கு யாரும்கவலைப்படவேண்டியதேயில்லை. உன்னிடத்தில் தர்மமும் அர்ஜுனனிடத்தில் மனவுறுதியும் பீமஸேனனிடத்தில் பராக்ரமமும் புருஷச்ரேஷ்டர்களான நகுலஸஹதேவர்களிடத்தில் சுத்தமானகுருபக்தியும இருக்கின்றன. அஜாதசத்ருவே! உனக்கு ஸுகமுண்டாகட்டும். காண்டவப்ரஸ்தத்தைச்சேர். உன்பிராதாக்க ளான துரியோதனன்முதலானவர்களுடன் உனக்குஸ்நேஹமிருக் கட்டும். உன்மனம் தர்மத்திலேயேவைக்கபபடவேண்டும்" என்று சொன்னான். ஜனமேஜயரே! தர்மராஜாவானயுதிஷ்டிரர் இவ்வாறு சொல்லபபட்டவராய் யோக்யர்கள்செய்யும் பிரதிஜ்ஞையெல்லாவற் றையுஞ்செய்து ஸஹோதரர்களுடன்புறபபட்டார். அந்தபபாண்டவர் கள் கிருஷ்ணையுடன் மேகங்களபோன்றரதஙகளிலேறி மனமகிழ்நது இந்திரப்ரஸ்தமென்னும சிறநதநகரத்திறகுச சென்றனர்" என்றனர்.

த்யூதபர்வம்முற்றிற்று.

---

தொண்ணூற்றுருவது அத்தியாயம்

# அநுத்யூதபர்வம்.

(துரியோதனன் அர்ஜுனனிடம் தனக்கிருக்கும்பயத்தையும் அவன் பராக்ர மத்தையும் திருதராஷ்டிரனுக்குச்சொல்லி அதற்கு உதாரணமாகக் கார்த்தவீர்யார்ஜுனன் சரித்திரத்தை எடுத்துரைத்தது.)

ஜனமேஜயர், "அநதப்பாண்டவர்கள் மிகுதியான ரத்னங்க ளோடும் தனங்களோடும அனுப்பபபட்டதையறிநதபிறகு திருத ராஷ்டிரபுத்திரர்களின்மனம எவ்வாறாயிற்று?" என்றுகேட்க, வைசம் பாயனர் சொல்லுகிறார்.

"ஜனமேஜயராஜாவே! புததிசாலியான திருதராஷ்டிரனால் அந்தப பாண்டவர்கள் அனுப்பபபட்டதையறிந்து, துச்சாஸனன் உடனே தன்தமையனிடம்சென்றான். பரதச்ரேஷ்டரான ஜனமேஜய ரே! பரதச்ரேஷ்டனை துசசாஸனன் மனத்தில் வருத்தங்கொண்டு (கர்ணன்சகுனிமுதலான) மந்திரிகளுடன்கூடியிருக்கும் துரியோத னனையடைநது, "ஓ! மஹாரதர்களே! நாம்கஷ்டப்பட்டுக் கொணர் ந்துசேர்த்த இநதபபொருளகளையெல்லாம கிழவர் சததுருக்களுக் குக்கொடுதது அழிததுவிடுகிறார். இதனையறியுஙகள்" என்றுசொன் னான். பிறகு பாண்டவர்களின்மீது பொறாமைகொண்டவர்களாகிய

துரியோதனன், கர்ண்ன், ஸுபலன்புத்ரனான சகுனி இவர்கள் ஒருவரோடொருவர்சேர்ந்து விசித்ரவீரியன்புத்ரனும் புத்திசாலியுமான திருதராஷ்டிரமஹாராஜனிடம் விரைவாகச்சென்று நயமாகத்தெரிவித்தனர். துரியோதனன், "ராஜாவே! வித்வானும் தேவர்களுக்குப்புரோஹிதருமான பிருஹஸ்பதி இந்திரனுக்கு ராஜநீதியைச் சொல்லும்போது சொன்னவிஷயம் நீர்கேட்டதில்லையா? சத்துருக்களைக் கொல்லுகிறவரே! [1]'எல்லாஉபாயங்களையுஞ்செய்து சத்துருக்களைக்கொல்லவேண்டும்.' பின்னிட்டு யுத்தத்தினலாவது ஸஹாயஞ்சேர்த்துக்கொள்வதனலாவது உமக்கு அவர் தீங்குசெய்வார். அதனல், நாம் பாண்டவர்களின் தனங்களினுல் எல்லா அரசர்களையும் வசப்படுத்திப் பாண்டவர்களோடு யுத்தஞ்செய்வோமாயின் நமக்கென்ன குறையும்? கெடுப்பதற்காகவந்த கோபித்தஸர்ப்பங்களைக் கழுத்திலும்முதுகிலும் போட்டுக்கொண்டு எவன் (கொல்லாமல்) விட்டுவிடுவான்? தந்தையே! கோபித்து ஆயுதங்களையெடுத்துத தேர்களிலேறிக்கொண்டு போகுமபாண்டவர்கள் சீறினஸர்ப்பங்கள்போல நம்மைமிச்சமில்லாமற்செய்துவிடுவார்கள். அர்ஜுனன் கவசத்தை நன்ருகப்போட்டுக்கொண்டும் சிறந்த தூணிகளையெடுத்துக்கொண்டும் போகிருன்; காண்டீவத்தை அடிக்கடி எடுக்கிருன்; பெருமூச்சுவிட்டுக்கொண்டு பார்க்கிருன். விருகோதரன் விரைவுடன் பெருங்கதையையெடுத்துத் தனதுதேரைப பூட்டிக்கொண்டு வேகமாகச் சென்றுனென்று நாம்கேள்விபபடுகிறோம். நகுலன் கத்தியையும் அர்த்தசந்திரன்வடிவமான கேடகத்தையும் எடுத்துசசென்றுனும். ஸஹதேவனும் தர்மராஜாவும் குறிப்புக்களினுல் ஸம்ஜ்ஞைசெய்துகொண்டனராம். அவர்களனைவரும் அனேக ஆயுதங்களோடும் ஸாமான்களோடுங்கூடிய தேர்களிலேறிக்கொண்டு மற்றரதிகர்களை அடிப்பதற்காக ஸேனைசேர்க்கப புறப்பட்டுப்போயினர். ஒருகாலத்தில் நம்மால்தீங்குசெய்யப்பட்ட அவர்கள் அதைப் பொறுக்கமாட்டார்கள். திரௌபதியைக்கஷ்டப்படுத்தினதை அவர்களில் எவன் பொறுக்கக்கூடியவன்? யுத்தத்தில் கோபித்தஅர்ஜுனனுக்கு எதிர்நிற்பவனை நான்காணவில்லை. தோராளிகளிற் சிறந்தவர்களான பீஷ்மர், த்ரோணர், கர்ணன், அச்வத்தாமா, கிருபர், விருஷஸேனன், விகர்ணன், ஜயத்ரதன், பாஹ்லீகன், ஸோமதத்தன், பூரி, பூரிச்ரவன்,

---

1 'உமக்குத்தீங்குசெய்கிறவர்களை யுத்தஞ்செய்யாமலே எல்லாஉபாயங்களாலும் கொல்லவேண்டும்; அல்லது, யுத்தத்திலாவது கொல்லவேண்டும்' என்பது பழையஉரை.

சலன், சகுனி, அவன்புத்ரன், கௌரவரைச்சேர்ந்த மற்றுமுள்ள அரசர்கள் இவர்களனைவரும் யுத்தஞ்செய்யத்தொடங்கினாலும் அர்ஜுனனுக்கு எதிர்நிற்கமாட்டார்கள். பராக்ரமத்தில் அர்ஜுனனுக்கு ஸமமானவில்லாளி உலகத்திலில்லை. இரண்டுகைகளுள்ள இவ்வர்ஜுனன் ஆயிரம்கைகளுள்ள (கார்த்தவீரிய)அர்ஜுனனுக்கு ஸமமானவன்" என்றுசொன்னான். திருதராஷ்டிரன், "புத்ரனே! அர்ஜுனனுக்குஸமமான பராக்ரமமுள்ள வீரபுருஷனென்று உன்னால் எடுத்துரைக்கபபட்டவன் யார்? அந்தமஹாவீரனை யான்கேட்க விரும்புகிறேன்; சொல்" என்றுகேட்க, துரியோதனன் சொல்லலானான்.

"ராஜாவே! மஹாத்மாவான கார்த்தவீரியனுடைய சரித்திரத்தைக் கேளும். எல்லாலோகங்களுக்கும் காரணமாயுள்ள பிரம்மதேவர் பரபரம்மத்திலிருந்து உண்டானவர். வித்வானாகிய அத்ரி மஹாிஷி பிரம்மாவின்புத்ரர். அதரியின்புதல்வன் சந்திரன். சந்திரன் பிள்ளை புதன். புதன்மகன் புரூரவன். அவன்மகன் ஆயு. ஆயுவின் பிள்ளை நகுஷன். நகுஷன்பிள்ளை யயாதி. யயாதியின்மகன் யது. மஹாராஜாவே! யதுவின் புத்ரன் ஸஹஸ்ரௌஜனென்று பெயர் பெற்றவன். ராஜாவே! ஸஹஸ்ரௌஜனுடைய புத்ரன் சக்ரதாஸனென்னபபட்டவன். சக்ரதாஸனுடையபிள்ளை ஹேஹயனென்னுமரசன். ஹேஹயனுக்குத் தர்மநேத்ரனென்னும் புத்ரனிருந்தான். தர்மநேத்ரனுக்குக் கிருதியென்பவன் புத்ரன். கிருதியின் புத்ரன் கிருதவீரியன். கிருதவீரியன்புத்ரன் பலவான்களிற்சிறந்த கார்த்தவீர்யார்ஜுனனென்பவன். மஹாராஜாவே! அந்த அர்ஜுனன் உக்ரமான தவஞ்செய்தகாலம் பதினாயிரம்வருஷத்துக்கு மேலானதென்று நான் முன்கேட்டிருக்கிறேன். ராஜாவே! பிதாவே! ஏழு தீவுகளும் பட்டணங்களும் ஸமுத்திரங்களும நதிகளுமுள்ள இந்தப பூமியனைத்தும் அவனால் உக்ரமானசெய்கையினால் ஜயிக்கப்பட்டது. சிறந்தபராக்ரமமுள்ள அந்தஅர்ஜுனன் யாருமசெய்யமுடியாததவத்தைச்செய்து அத்ரியின்புத்ரரான தத்தரென்னும்முனிவரை ஆராதித்தான். அந்தத் தத்தாத்ரேயர் அவ்வரசனுக்கு நாலுவரங்கள்கொடுத்தார். அவன் முதலில் ஆயிரம்கைகளை முக்யமானவரமாகக் கேட்டான். அதர்மத்தில் மனம்இறங்கும்போது சான்றோரால் தடுக்கபபடுவது இரண்டாவதுவரம்; க்ஷத்திரியதர்மத்தினால் பூமியைஜயித்துத் தர்மத்தினாலேயே பிரஜைகளை மகிழச்செய்வது மூன்றாவது வரம்; அநேக யுத்தங்களைச்செய்து சத்துருக்களை ஆயிரக்கணக்காகக்கொன்று மேன்

மேலும் யுத்தத்திற்கு ஆரம்பிக்கும்போது தனக்கு மேற்பட்டவனால் மாத்திரம் வதஞ்செய்யப்படுவது நான்காவதுவரம். பாரதரே! அவன் யுத்தஞ்செய்யும்போது ஆயிரம்கைகளும் ரதமும் கொடியும் உண்டாயினவென்று நான்முன்னேகேட்டிருக்கிறேன். ராஜாவே! தந்தையே! அப்படியே [1]ஏழுதீவுகளும் பட்டணங்களும் கடல்களும் நதிகளுமுள்ள இந்தபூமி அவனால்ஜயிக்கப்பட்டது. சிறந்தபராக்ரமமுள்ள அந்த அர்ஜுனன் பிறகு ஏழுதீவுகளுக்கும் அதிபதியானான். மஹாபலசாலியான அந்தஅரசன் மஹாயாகங்களைச்செய்தான். அந்த மஹாவீரன் அநேகவருஷகாலம் பூமியையாண்டான். பரதச்ரேஷ்டரானராஜாவே! மாஹிஷ்மதியென்னும் நகரத்துக்கு அதிபதியான அவ்வர்ஜுனன் ஒருகால் தன்மனைவிகளுடன்கூடி நர்மதையாற்றுக்குச்சென்றான் பரதசரேஷ்டரே! ராஜாவே! அவ்வரசன் அந்தநதிக்குசசென்று ஜலத்துக்குள்ளிறங்கி ஜலக்ரீடைசெய்ய ஆரம்பித்தான். பிதாவே! அதேகாலத்தில் லங்காதிபதியும் சிறநதபலசாலியுமான ராவணன் ராக்ஷஸர்களுடன் அவ்விடம்போனான். எப்போதும் கோபமுள்ளவனும் வரம்பெற்றதனால் களித்தவனுமாகிய அந்தராவணன் நர்மதையில் அவ்வர்ஜுனனைக்கண்டு மிக்ககோபத்துடன் தேவேந்திரனைச் சம்பராஸுரன் எதிர்த்ததுபோல எதிர்த்துசசென்றான். அர்ஜுனனும அந்தராவணனைக்கண்டு எதிர்த்தான். பிறகு அந்த ராவணஅர்ஜுனர்களிருவரும் போர்புரிந்தனா. ராஜாவே! அப்போது யாராலும் வெல்லமுடியாதவீரனும் வரம்பெற்றதனால் கர்வங்கொண்டவனுமாகிய ராவணனை ராஜாவானஅர்ஜுனன் தன்பலத்தினால் யுத்தத்தில்ஜயித்து வில்லின்நாணினால்கட்டித் தன்நகரத்திற்குச்சென்றான். புலஸ்தியமுனிவர் அந்தராவணன் கட்டப்பட்டதைக் கேள்விப்பட்டுக் கார்த்தவீரியார்ஜுனனை நகரத்திற்போய்க்கண்டு ராவணனைக் கட்டிலிருந்துவிடுவித்தார். பாரதரே! பராக்ரமமும் பலமுமுள்ள கார்த்தவீரியார்ஜுனன் பிறகு ஒருகால் கர்வத்தினால் ஒன்றுந்தெரியாமல் ஸமுத்திரக்கரைக்குச் சென்று திரிந்துகொண்டே ஸமுத்திரத்தின்மீது கூர்மையானபாணங்களை மிகுதியாகஎய்தான். ஸமுத்ரராஜன் அவனுக்கு நமஸ்காரஞ்செய்து கைகூப்பிக்கொண்டு, "வீரனே! பாணங்களைவிடாதே. உனக்கு நான்என்ன செய்யவேண்டும்; சொல். ராஜசரேஷ்டனே! என்னைச்சேர்ந்தஜந்துக்கள் உன்னால்விடப்பட்ட சிறந்தஅம்புகளினால் பீடிக்கப்படுகின்றன. பிரபுவே! அவற்றிற்கு அபயங்கொடு", என்றுகேட்டான்.

[1] ஸபாபர்வம் 43-ம்பக்கம் குறிப்பிற்காண்க.

அர்ஜுனன், "ஸமுத்ரராஜனே! இபபோதே சீக்கிரத்தில் எனக்கு ஒருயுத்தம்கொடு. இல்லாவிட்டால உன்னைபபீடிபபேன். ஆதலால், தாமதம்செய்யாதே" என்றுசொன்னான். ஸமுத்ரராஜன், "ராஜனே உலகத்தில அனேகமஹாவீரர்கள இருக்கின்றனர். அரசர்க்கரசே மஹாபலசாலியே! அவர்களில் ஒருவரோடு யுத்தஞ்செய்" என்றான். அர்ஜுனன், "யுத்தததில் எனக்குஸமமானசிறநதஆயுதம்பிடித்தவன் எங்கேயாவதுஇருப்பானாயின் அவனை எனக்குசசொல். அவன் என்னோடுயுத்தத்தில நிற்கவேண்டும" என்றுகேட்டான். ஸமுதராராஜன் "ராஜனே! ஜமதக்னியென்னும்மஹரிஷியை நீகேட்டிருக்கிறாயா? அவருடையபுத்ரன் உனக்குவேண்டினபடி யுத்தத்தைக் கொடுக்கத் தக்கவன்" என்றுசொன்னான். பாரதமே! முன்னமே நாரதருடையபேருங்கோபத்தினால் சூழபபட்ட அநதமாஹிஷ்மதிநகரத்தரசன் ஸமுத்ரராஜன்சொல்லைககேட்டவுடன் கோபத்துடன் விரைவாகச்சென்றான். அவன் அநதஆசரமததிற்குசசென்றுநினைததபடியெல்லாம்செய்தான். தன்பந்துக்களுடன்கூடத் தீங்குகளைமிகசசெய்தான். அவன் மஹாத்மாவானபரசுராமருககு மனவருததத்தையுண்டுபண்ணினான். பரசுராமருடைய ஸூர்யன்போன்றஉக்ரமானபராக்ரமம் அவன்சேனைகளையெரிப்பதுபோல ஜ்வலித்தது. பிறகு அவர்களிருவரும விருத்திராஸுரனும்இநதிரனுமபோல யுத்தஞ்செய்தனர். பிறகு பரசுராமர் விரைவாகக் கோடாலியையெடுததுக்கொண்டு ஆயிரம்கைகளுள்ள கார்த்தவீரியார்ஜுனனை அனேகம் கிளைகளோடுகூடியமரததைப் போல வெட்டினார். அவன் அடிபட்டுவிழுநததைக்கண்டு, அவனுடைய சுற்றத்தார்சேர்ந்து கத்திகளையும் சக்தியாயுதங்களையுமெடுத்துக்கொண்டு பரசுராமரையெதிரததனர். பலசாலியானபரசுராமரும் விரைவாகத்தேரிலேறி வில்லைவளைதது உயர்நத அஸ்திரங்களைப்பிரயோகித்து அரசர்களையழித்தார். ராஜாவே! அதன்பிறகு பரசுராமரிடத்தில் பயத்தினால்பீடிக்கபபட்ட அரசர்கள், ஸிம்மததினிடத்தில பயந்தமான்கள்போல மலைக்குகைகளில் பிரவேசித்தனர். பரசுராமரிடமுள்ளபயத்தினால் அவர்களில் யாரும தங்களுக்குரியகர்மங்களைச் செய்யவில்லை. பிராம்மணர்களைப் பாராமையினால் அந்தஜனங்கள் சூத்ரராயினர். அதனாலேதான் க்ஷத்திரியதர்மத்திலிருநத திரவிடர், காசர், புண்ட்ரர், சபரர் இவர்கள் தர்மங்கெட்டுச் சூத்திரர்களாயினர். பிறகு புருஷர்களிழநத க்ஷத்திரியபபெண்களிடத்தில் பிராம்மணர்களால் க்ஷத்திரியஸந்ததிகள உண்டாக்கப்பட்டன. அவற்றையும் பரசுராமர் பலமுறைகொன்றார். அவ்வாறு இருபத்தொருமுறைகொன்ற

பிறகு தேவலோகத்திய அசரீரிவாக்கானது இன்சொல்லாகவும் எல்லாஜனங்களுக்கும் கேட்கும்படியாகவும் பரசுராமரைப்பார்த்து, "ராம! ராம! இதைவிடும். இந்தக்ஷத்திரியர்களைப் பலமுறைகொல்வதனால் உமக்கு ஒருலாபத்தையும் நீர்பார்க்கவில்லை" என்றுசொல்லிற்று. அப்படியே ரிசீகர்முதலான பிதிர்க்களும் மஹாத்மாவான பரசுராமரைப்பார்த்து, "ராம! ராம! மஹாவீரனே! ஓய்ந்துவிடு" என்றனர். தம்பிதாவைக்கொன்றதைப் பொருதபரசுராமர் அந்த ரிஷிகளைப்பார்த்து, 'நீங்கள் என்னைத் தடுக்கலாகாது' என்று சொன்னார். பிதிர்க்கள், "ஜயிப்பவரிற் சிறந்தவனே! நீக்ஷத்ரிய ஜாதியாரைக்கொல்வது சரியன்று. குழந்தாய்! நீ பிராம்மணனாயிருந்தும் அரசர்களைக்கொல்வது தகாது" என்றனர். அந்தப் பரசுராமர், தமதுபிதிர்க்கள் சொன்னதைக்கேட்டவுடன் கோபத்தைவிட்டு ஆயிரக்கணக்கான அசுவமேதங்களையும் நூற்றுக்கணக்கான நரமேதங்களையும்செய்து கடல்சூழ்ந்தபூமியைக் காசியபருக்குக்கொடுத்தார். பிதாவே! தனஞ்சயன் யுத்தத்தில் அந்தப்பரசுராமருக்கும் அந்தக்கார்த்தவீரியார்ஜுனனுக்கும் ஸமமானவனென்பதில்ஸந்தேஹமில்லை. அரசர்க்கரசே! பராக்ரமத்தினால் யுத்தத்தில் அர்ஜுனனைஜயிக்கமுடியாது" என்றான்.

---

## தொண்ணூற்றேழாவது அத்தியாயம்.

## அனுத்யூதபர்வம் (தொடர்ச்சி.)



(துரியோதனன்சொற்படி திருதராஷ்டிரன் மறுபடியும் சூதாடுவதை ஒப்புக்கொண்டது.)

துரியோதனன், "ராஜாவே! முன்னர் நினைக்கவும்முடியாததாயிருந்த அர்ஜுனனுடையபராக்ரமங்களைப்பற்றிக் கேளும். வில்லாளிகளிற்சிறந்த அர்ஜுனன் முன்னே செயற்கரியகாரியத்தைச் செய்தான். அரசரே! த்ருபதனுடையநகரத்தில் திரௌபதியின் ஸ்வயம்வரகாலத்தில் குழந்தைமுதல்கிழவன்வரையில் கூடியிருந்த எல்லாக்ஷத்ரியர்களும் சேர்ந்தஸபையில் அர்ஜுனன் யார்க்கும் பார்க்கமுடியாமல் விரைவாக மத்ஸ்யத்தை ஜலத்தில்தள்ளினான். எல்லா அரசர்களாலும் ஸாதிக்கமுடியாத அந்தச்சிறந்தவில்லை எல்லாஅரசர்களும்பார்த்திருக்கையில் ஒருநொடியில் நாணேற்றிட்டான். பலவானபற்குனன் அப்போது மத்ஸ்யயந்திரத்தை அடித்த பிறகு திரௌபதியினால் கழுத்தில் பொன்மாலைபோடப்பட்டான். திரௌ

பதியினால் அர்ஜுனன் வரிக்கப்பட்டதைக்கண்டு சிறந்தபராக்ரம
முள்ள வீரர்களாகிய அரசர்களனைவரும் கோபித்து எல்லாவாயுதங்
களையும் எடுத்துக்கொண்டு ரோஷத்தினால் கர்ணனைமுன்னிட்டுக்
கொண்டு அர்ஜுனனையெதிர்த்துச்சென்றனர். அப்போது மஹா
பலசாலியான அந்தஅர்ஜுனன் அங்கே எல்லாஅரசர்களும் கோபித்
திருக்கக்கண்டு கூர்மையானபாணங்களினால் அவர்களைத்தடுத்துத்
தான் ஜயம்பெற்றான். அர்ஜுனன் பராக்ரமத்தின் வன்மையினால்
கர்ணன்முதலான அவ்வரசர்களனைவரையும் யுத்தத்தில் ஜயித்து
முன்னம் எல்லாக்ஷத்திரியக்கூட்டங்களின் நடுவிலும் பீஷ்மர் அம்
பையையடைந்ததுபோலச் சிறந்தவளான க்ருஷ்ணையையடைந்தான்.
பிறகு ஒருகால் அர்ஜுனன் தீர்த்தயாத்திரைக்குச்சென்றான். தந்
தையே! அப்போது நாகராஜன்மகளான உலூபியையடைந்தான்.
நாகர்களிற் சிறந்த வான்களிருக்கையில் அந்தஉலூபியினால் அர்ஜு
னனேவரிக்கப்பட்டான். அதன்பிறகு கோதாவரியிலும் க்ருஷ்ணா
நதியிலும் காவேரியிலும் ஸ்நானஞ்செய்தான். அங்கே பாண்டியனை
யடைந்து அவன்பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொண்டான்;
அவ்விடத்திலிருந்து ஸந்தோஷமடைந்தபிறகு அவன் தென்திசைக்
குச்சென்றான். அவன் தென்கடற்கோடிக்குச்சென்று அப்ஸரஸு
களின்ஸம்பந்தமான குமாரதீர்த்தத்தைசசேர்ந்து கன்னியாதீர்த்தத்
தையடைந்து அதில் முதலைவடிவமாயிருந்த அநத ஐந்துஅப்ஸரஸு
களையும் தன்பலத்தினாலும் பராக்ரமத்தினாலும் கரையிலெடுத்துச்
சாபத்திலிருந்து விடுவித்தான். அதன்பிறகு பற்குனன் துவார
கைக்குச்சென்று க்ருஷ்ணனுடைய கட்டளையினால் ஸுபத்ரையை
மனைவியாக அடைந்து அவளைத் தேர்மேலேற்றிக்கொண்டு தன்நக
ரத்திற்குச் சென்றான். அவன் அவளைத்தூக்கிக்கொண்டுபோன
தைக்கேட்டு, ப்ரத்யும்னன், க்ருதவர்மா, கீதன், ஸாரணன், ஸாத்யகி,
ஆஹுகன், ஸாம்பன், சாருதேஷ்ணன், விதூரதன், பலராமர்முத
லிய யாதவர்களனைவரும் புலிக்கூட்டம்போலவும் ஸிம்மக்கூட்டம்
போலவும் மிகக்கோபித்து (அந்த) அர்ஜுனன்மீது யுத்தத்திற்குச்
சென்றனர். யானைகளிலும் குதிரைகளிலும தேர்களிலுமேறிக்கொ
ண்ட அனேகம்கோடியாதவர்கள் ஒருவனாகக் காட்டிற்செல்லும் அர்
ஜுனனை மிக்ககோபத்துடன் சூழ்ந்துகொண்டு அவனுடன் யுத்தஞ்
செய்தனர். அர்ஜுனன் ஒருவனாகவே அவர்களுடன் மிக்கபயங்
கரமான யுத்தத்தைச்செய்தான். அவனுக்கும் அவர்களுக்கும் சில
நேரம் ஸமயுத்தம்நடந்தது. அரசர்க்கரசே! பிறகு வீரனான அர்ஜு

னன் யுத்தத்தில்பராக்ரமத்தினால் யாதவர்களனைவரையும் கூர்மை யானபாணங்களினால் தகைநது ஜயித்து அநதஸுபத்ரையையழைத் துக்கொண்டு இநதிரபரஸ்தத்தில் பிரவேசித்தான். மஹாராஜாவே! பல்குனனுடைய பராக்ரமததைத மறுபடியும் கேளும. அநத அர்ஜு னன் அக்னியினால்கேட்கபபட்ட காண்டவவனததை அக்னிக்குக் கொடுத்தான். ராஜாவே! அர்ஜுனனால் அவ்வனமகிடைததவுடன் அக்னிபகவான் காண்டவவனத்தையும் அதிலுள்ளவற்றையும் பக்ஷிக் கத்தொடங்கினான். அரசர்க்கரசே! அவ்வாறுபக்ஷிக்கின்ற அந்த அக்னியை மஹாபலசாலியும் ஸமர்த்தனுமான ஸவ்யஸாசி தேரி லேறி வில்லையுமஅமபுகளையும்எடுத்துத் தூணிகளைத்தரித்துத் தன் பராக்ரமததினால்காத்தான். அதைக்கேட்டுத தேவேநதிரன் மேகங் களையனுப்பினான். அவனாலேவபபட்ட அநத மேகக்கூட்டங்கள் அதிகமழைபெய்தன. பிறகு அர்ஜுனன் ஆகாயமெங்கும் பாணக் கூட்டங்களைவிடுதது அம்மேகக்கூட்டங்களைத தடுத்துவிட்டான். அஃது ஆச்சரியமாகஇருநதது. மேகங்கள் தடுக்கபபட்டதைக்கேட் டுக் கோபமுற்றஇநதிரன் வெள்ளையானையின்மேலேறிகொண்டு எல்லாத் தேவர்களின்கூட்டங்களினாலும் சூழப்பட்டவனாகிக் காண்டவவன த்தைக் காப்பாற்றுவதற்காக அர்ஜுனனோடு யுத்தஞ்செய்யப்போ னான். பாரதரே! ருத்ரர்களும மருததுக்களும வஸுக்களும அசு வினிதேவர்களும் ஆதித்யர்களும ஸாத்யர்களும் விச்வேதேவர்க ளும் கந்தர்வர்களும் மற்றுமுள்ளதேவக்கூட்டங்களுமாகிய தேவ ச்ரேஷ்டர்கள் ஒன்றுசேர்நது ஆயுதங்களைத்தரித்துத் தம்பராக்ரமத் தினால் ஜ்வலிப்பவர்களாகித் தனஞ்சயனைக்கொல்வதற்காக ஓடினர். ராஜாவே! பிரளயகாலத்தில் என்னபெரிய அபசகுனங்கள் காணப் படுமோ அவையெல்லாம் அபபோது காணப்பட்டன. பிறகு தேவ க்கூட்டத்தாரெல்லாம் அர்ஜுனனை எதிர்ததனர். அவர்களையும் அந்தத் தேவச்சேனையையும்பார்தது அர்ஜுனன் கலங்காமல் கூர் மையான அம்புகளைக் கையிற்பிடித்துப பிரளயகாலத்துயமன்போல இந்திரனையும் தேவர்களையும் நோக்கிநின்றான். ராஜாவே! பிறகு இந்தி ராதிதேவர்களனைவரும் மானிடனாகிய அவ்வர்ஜுனன்மேல் பாணவர் ஷங்களைப பொழிந்தனர். சிறநதபராக்ரமசாலியான அர்ஜுனன் அப் போது விரைவாகக் காண்டீவத்தையெடுததுக்கொண்டு பாணக்கூட் டங்களினால் தேவர்களின்பாணங்களைத்தடுத்தான். ராஜாவே! மிகச் சிறந்த பலமுள்ளதேவர்களனைவரும கோபிதது மனிதனான அந்தஸவ் யஸாசியின்மேல மறுபடியும் பற்பலஅஸ்திரங்களைப் பொழிநதனர்.

அர்ஜுனன் தேவர்களால்விடப்பட்ட அந்த அஸ்திரவர்ஷங்களைக் கூர்மையான அம்புகளினால் இரண்டாகவும் மூன்றாகவும் துணித்தான். மறுபடியும் பார்த்தன் கோபித்து வில்லைமண்டலமாகவளைத்துத் தேவக்கூட்டங்களைசசுற்றிலும் கூர்மையான அம்புகளைவிடுத்தான். பரதச்ரேஷ்டரே! தேவக்கூட்டத்தினரெல்லாம் அர்ஜுனனுடன் பலமுறை யுத்தஞ்செய்து அவனுடையபாணங்களினால் பீடிக்கப்பட்டவர்களாகி யுத்தத்தில் அவனைஜயிக்கமுடியாதென்று தெரிந்துகொண்டு சண்டையையொழித்தனர். ஐராவதத்தையும் இந்திரனையும்விட்டுவிட்டு எல்லாத்திசைகளிலும் ஓடினர். ருத்ரர்களும் கந்தர்வர்களும் கிழக்கிலும், மருத்துக்கள்தெற்கிலும், வஸுக்களும் அசுவினிதேவர்களும் மேற்கிலும், ஆதித்யர்களும் விசுவேதேவர்களும்வடக்கிலும் பயந்தோடினர். ஸாத்யர்கள் அர்ஜுனன்பாணங்களைநினைத்துப் பயந்து மேனோக்கிச சென்றனர். இவ்வாறு தேவக்கூட்டத்தினரெல்லாம் விற்பிடித்தஅர்ஜுனனையே அடிக்கடிபார்த்துக்கொண்டு எல்லாத்திசைகளிலும் ஓடினர். யுத்தத்தில் அந்தத் தேவக்கூட்டங்கள் ஓடினதைக் கண்டு மஹாபராக்ரமசாலியான இந்திரன் கோபித்து அர்ஜுனன் மேல் பாணங்களைபபொழிந்தான். அர்ஜுனன் மனிதனாயிருந்தும் தேவர்க்கதிபதியான இந்திரனை அடித்தான். பிறகு அந்தத்தேவேந்திரன் கல்மழைபொழிந்தான். அர்ஜுனன் மிகககோபித்து அந்தக் கல்மழையைப பாணங்களினாலதடுத்தான. தேவேந்திரனும ஸவ்யஸாசியின்சிறந்த பராக்ரமத்தையறியக்கருதி அந்தககலமழையை மிகவும் அதிகப்படுத்தினான். அர்ஜுனனும இந்திரன்மகிழும்படி மஹாவேகமுள்ள அந்தக்கலமழையைத் தன்பாணங்களினால அழித்தான். இந்திரன் அர்ஜுனனைக்கொல்வதறகாக அங்கதமென்னுமமலையை மரங்களுடன் இருகரங்களாலும்பெயர்த்து அர்ஜுனன்மீது எறிந்தான். உடனே அர்ஜுனன் வேகமுள்ளனவையும ஜ்வலிப்பவையும் குறிதப்பாதவையுமான பாணங்களினால் அந்தசசிறந்தமலையை ஆயிரம பொடியாகஅடித்தான். யுத்தத்திற்சிறந்தவனாகிய அர்ஜுனன் இந்திரனையும பாணங்களால்அடித்தான். மஹாராஜாவே! அதன் பிறகு இந்திரன் பராக்ரமமும்பலமுமுள்ளவீரனாகிய அந்தஅர்ஜுனனை ஜயிக்கமுடியாதவனென்றறிந்து தன்பிள்ளையின்பராக்ரமத்தினால் மிகுந்தஸந்தோஷத்தையடைந்தான். ராஜாவே! அப்பொழுது அந்தயுத்தத்தில் அர்ஜுனனைஜயிப்பதற்குத் திறமையுள்ளவன் ப்ரஸித்தமாகத்தேவலோகத்தில் யாருமில்லை. பிரம்மதேவருமசக்தரல்லர். சிறந்தபராக்ரமமுள்ள அர்ஜுனன் அப்போது யக்ஷர்களை

யும் ராக்ஷஸர்களையும் நாகர்களையும் பாணங்களினால்அடித்து ஜ்வலிக்கின்ற அக்னியில் இடைவிடாமல்தள்ளினான். அப்போது தேவேந்திரனும் தேவக்கூட்டங்களும் ஆகாயத்தில்தடுக்கப்பட்டதைக்கண்டு, யாரும் அர்ஜுனனைத்தடுக்கமுடியாமற்போயினர். முற்காலத்தில் கருடன்அமிர்தத்துக்காகத் தேவர்களை எப்படிஜயித்தானோ அப்படியே அர்ஜுனனும் தேவர்களைஜயித்து அக்னியைத்திருப்திசெய்வித்தான். பாரதரே! அர்ஜுனன் அவ்வாறு தன்பராக்ரமத்தினால் அக்னியைத்திருப்திசெய்வித்துத் தேரையும் கொடியையும் குதிரைகளையும் திவ்யாஸ்த்ரங்களையும் காண்டீவமென்னும் சிறந்தவில்லையும் அம்பறாத்தூணிகளையும் கீர்த்தியையும்அடைந்தான். அரசர்க்கரசரே! பாரதச்ரேஷ்டரே! மறுபடியும்கேளும். அர்ஜுனன் வடதிசைக்குச் சென்று நகரங்களும் பர்வதங்களுமடங்கிய [1]ஒன்பதுவர்ஷங்களையும் ஜயித்து ஜம்புத்தீவுமுழுமையையும் தன்வசப்படுத்திக்கொண்டு தன் பலத்தினால் அரசர்களனைவரையும்ஜயித்துக் கப்பம்கட்டுவித்து ரத்னங்களெல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு திரும்பி நகரத்துக்குச் சென்று மூத்தவனும் மஹாத்மாவும் தர்மராஜாவுமான யுதிஷ்டிரனுக்கு ராஜஸூயமஹாயாகத்தைச்செய்வித்தான். அந்தஅர்ஜுனன் இன்னும்அனேகம் பிரஸித்தமானகாரியங்களையும் முன்னேசெய்தான். இந்த மூன்றுலோகங்களிலும் பராக்ரமத்தில் அர்ஜுனனுக்கொப்பானவன் யாருமில்லை. தேவர்களும் அஸுரர்களும் யக்ஷர்களும் பிசாசர்களும் நாகர்களும் ராக்ஷஸர்களும் மஹாரதர்களாகியபீஷ்மர் துரோணர்முதலிய கௌரவர்களெல்லாரும் உலகத்தில்வீரர்களும்வில்லாளிகளுமாகிய எல்லாஅரசர்களும் யுத்தத்தில் அர்ஜுனனுடன் எதிர்யுத்தம் செய்யமாட்டார்கள். கௌரவரே! நான்எப்போதும் என்மனத்திலிருக்கும் அர்ஜுனனையே பார்த்துக்கொண்டும் சிந்தித்துக்கொண்டும் அவன்பயத்தினால் நடுங்கிக் கொண்டிருக்கிறேன். பிதாவே! நான், பாணத்தையும் காண்டீவத்தையும்தரித்து, பாசாயுதத்தைக் கையிற்பிடித்தயமனைப்போலிருக்கும் அர்ஜுனனை எப்போதும் வீட்டுக்குவீடு பார்க்கிறேன்; பாரதரே! பயத்தினால் அனேகமாயிரம் அர்ஜுனர்களைப்பார்க்கிறேன். இந்தநகரமனைத்தும் அர்ஜுனர்களாயிருப்பதாக எனக்குத்தெரிகிறது. பாரதரே! பிதாவே! யாருமில்லாதஇடத்திலும் அர்ஜுனனைத்தான் பார்க்கிறேன். கனவில் அர்ஜுனனைக்கண்டு புத்திமயங்கித் தடுமாறுகிறேன். அர்ஜுனனையே மனத்தில்வைத்துக்கொண்டிருக்கும் எனக்கு அச்வம்அக்ஷ

[1] பூமியின் பிரிவுகள்.

ரம் அம்புஜம்முதலிய அக்ரத்தைமுதலாகவுடையபெயர்களே பயத்தையுண்டுபண்ணுகின்றன. தந்தையே! அர்ஜுனனைத்தவிர மற்ற வீரர்களிடத்தில் எனக்குபபயமில்லை. யுத்தத்தில் அர்ஜுனன் பிரஹ்லாதனையும் பலியையுங்கூடவென்றுவிடுவன். மஹாராஜாவே! பிதாவே! அதனால் அவனோடுயுத்தஞ்செய்வது நமக்குததகாது. எனக்கு அவனுடைய பராக்ரமமதெரியும. நான் எப்போதும் துக்கப்படுகிறேன். முன்காலத்தில் தண்டகாவனத்தில் மாரீசனுக்கு, மஹாவீரனானராமரிடத்தில் எப்படிப்பயமிருந்ததோ அப்படியே எனக்கு அர்ஜுனனிடத்தில்பயமிருக்கிறது" என்றுசொன்னான்

திருதராஷ்டிரன், "யாராலும் அணுகமுடியாத மஹாபராக்ரமம் அர்ஜுனனிடத்திலிருப்பது எனக்குத்தெரியும். அந்தவீரனான அர்ஜுனனுக்கு வெறுக்கத்தக்கவாகிய சூதாட்டத்தையும் அஸ்த்ரயுத்தத்தையும் தீயசொற்சொல்வதையும் நீ எவ்வகையிலும்செய்யாதே. அவர்களிடத்தில் இவற்றைச்செய்தால் அர்ஜுனனுக்கும் உங்களுக்கும் சண்டையுண்டாகும். மகனே! ஆதலால் நீ எப்போதும் அர்ஜுனனோடு ஸ்நேஹமாயிரு. பார்தனே! பூமியில் எந்தமனிதனாவது அர்ஜுனனுடன்ஸ்நேஹமாயிருபபானாயின் அவனுக்கு மூவுலகங்களிலும் யாதொருபயமுமில்லை. குழந்தாய்! ஆதலால், நீ எப்போதும் அர்ஜுனனுடன்சிநேகமாயிரு" என்றுசொன்னான். துரியோதனன், "கௌரவரே! சூதாட்டத்தில் தர்மராஜனுக்குக் கபடமாகத் தோல்வியுண்டாக்கபபட்டது. பிதாவே! அதனாலேதான் நமக்குஜயம். வேறுஉபாயத்தினால் நமக்கு ஜயம்வாராது" என்றுசொன்னான். திருதராஷ்டிரன், "குழந்தாய்! பாரதனே! பாண்டவர்களைப்பற்றித் தந்திரஞ்செய்யலாகாது. முன்னமே பாண்டவர்களுக்குவிரோதமாக அனேகஉபாயங்கள் உன்னால்செய்யப்பட்டன. குந்திபுத்ரர்கள் அந்தஉபாயங்களெல்லாவற்றையும் தாண்டிவிட்டார்களன்றோ? குழந்தாய்! ஆதலால், நமதுகுலத்தோரும் பிரஜைகளும் உயிர்வாழ்ந்திருக்கும்படி நன்மையைசசெய்யும்விருபபம் உனக்கிருக்குமாயின் நீ உன்சிநேகிதரோடும் உறவினரோடும் ஸஹோதரரோடும் கூட அர்ஜுனனிடம் எப்போதும் ஸ்நேஹமாயிரு" என்று சொன்னான். ராஜாவானதுரியோதனன், திருதராஷ்டிரன் சொன்னதைக் கேட்டுச் சிறிதுநேரம்ஆலோசித்து விதியினால் ஏவப்பட்டுப் பேசலானான்.

"புருஷச்ரேஷ்டரே! பாண்டவர்கள் வனம்போவதைப்பந்தயமாகவைத்து மறுபடியும்ஆடுவோம். உமக்கு நன்மையுண்டாகும்.

இப்படித்தான் நாம் 'அவர்களைவசப்படுத்தமுடியும். சூதாட்டத்தில் தோற்றவர்கள் அவராயினும் நாமாயினும தோலுடுத்துப் பன்னிரண்டுவருஷகாலம் மஹாவனத்தில்இருக்கவேண்டும. பதின்மூன்றுவதுவருஷம் சுற்றத்தாருக்குதெரியாமல்இருக்கவேண்டும. தெரிந்தால் திரும்பவும் பன்னிரண்டுவருஷகாலம் வனத்தில்வஸிக்கவேண்டும். நாமாவது வஸிப்போம். அவர்களாவதுவஸிக்கட்டும். அந்த நிச்சயத்தோடு சூதுநடக்கட்டும். பாண்டவர்கள் மறுபடியும் காய்களையுருட்டி இந்தச்சூதையாடட்டும். பரதசிரேஷ்டரானராஜாவே! இதுதான் நமக்கு முதன்மையானகாரியம. இந்தசசகுனி காய்கள் அநுகூலமாகவருவதென்னும் வித்தையையறிந்தவன். நாம் மிகுதியானதனங்களினால் எதிரிகள்அணுகமுடியாத பெருஞ்சேனையையும் மித்திரர்களையும்மகிழ்வித்து வசபபடுத்தி ராஜ்யத்திலவேரூன்றிவிடுவோம். ராஜாவே! அவர்கள் பதின்மூன்றுவதுவருஷத்தின்விரதத்தைத்தாண்டுவாராயின் அவர்களை நாம்ஜயித்துவிடலாம். வீரரே! நீர் இதைஅங்கீகரிக்கவேண்டும" என்றான். திருதராஷ்டிரன், "வழியில் நெடுந்தூரமபோயிருந்தபோதிலும் அந்தபபாண்டவர்களை உன் இஷ்டப்படி சீக்கிரமதிரும்பிவரச்செய். பாண்டவர்கள்வந்து மறுபடியும் இந்தச்சூதாட்டத்தை நடத்தட்டும்" என்றுசொன்னான். அப்போது துரோணர், ஸோமதத்தன், பாஹ்லீகன், கிருபர், விதுரர், அசுவத்தாமா, வைசயபுத்ரனும் வீரனுமாகியயுயுதஸு, பூரிசிரவஸ், பீஷ்மர், மஹாரதனானவிகர்ணன் இவர்களெல்லாரும், 'சூது வேண்டாம்; ஸமாதானமிருக்கட்டும' என்றுகூறினர். ராஜகாரியந்தெரிந்தநண்பரனைவரும் இஷ்டப்படாமலிருக்கையில் பிள்ளையினிடம் அன்புள்ள திருதராஷ்டிரன் பாண்டவர்களை அழைக்கச்செய்தான். ஜனமேஜயமஹாராஜாவே! அபபோது தர்மந்தவறாதவளானகாந்தாரி பிள்ளைகளிடத்திலுள்ள அன்பினால் துயரப்பட்டுக்கொண்டு ராஜாவான திருதராஷ்டிரனைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினாள்.

"மஹாபுத்திசாலியானவிதுரர், துரியோதனன் பிறந்தபோதே 'குலத்தைக்கெடுப்பவனாகிய இவனைப்பரலோகத்துக்கு அனுப்புவது நலம்' என்றுசொன்னார். பாரதரே! இவன்பிறந்தவுடன் நரிபோலஊளையிட்டானன்றோ? கௌரவர்களே! இந்தக்குலத்திற்கு இவன்தான் முடிவுஎன்பதை அறியுங்கள். பிரபுவே! பாரதரே! நீர் உம்முடைய பிழையினால் அகாதமானஜலத்தில் முழுகிபபோகாதீர். விவேகமில்லாத சிறுபிள்ளைகளுடையபுத்தியை ஏற்றுக்கொள்ளாதீர். கொடியதாகிய வம்சக்ஷயத்திற்கு நீர்காரணமாகவேண்டாம். பரதச்ரேஷ்டரே!

கட்டின அணையை எவன் உடைப்பன்? அவிந்த நெருப்பை எவன் ஊதுவன்? அடங்கியிருக்கின்ற குந்திபுத்ரர்களை எவன் கோபமூட்டுவான்? எப்போதும உம்மைமறவாமலிருக்கும தர்மராஜாவுக்கு நானும் மறுபடியும் நினைவுமூட்டுவேன். புத்திகெட்டவனுக்கு நன்மையையும் தீமையையும்பற்றிச்சாஸ்திரம கற்பிக்காது. ராஜாவே! பெரியவன் எவ்வகையிலும் சிறுவர்புத்தியையெடுத்துக்கொள்ளலாகாது. உமது புத்ரர்களாகிய பாண்டவர்கள் உம்மையே நாதராகப்பெற்றிருக்கக் கடவர். அவர்கள் வேறுபடுத்தப்பட்டு உம்மைவிட்டுவிடலாகாது. ஆதலால், குலத்தைக்கெடுக்கும இந்தத்துரியோதனனை என்சொற்படி விட்டுவிடலாம. ராஜாவே! பிள்ளையினிடத்திலுள்ள அன்பினால் நீர் அவ்வாறு செய்யாமற்போனீர். அதன்பயன்தான் குலமழிவதற்குக்காரணமாகவநதிருக்கிறதென்று அறியும். அடக்கமும் தர்மமும் நீதியுமுள்ளதாகிய உமதுபுத்தியே உமக்குஇருக்கட்டும். தவறாதீர். கொடுமைகலந்தஐசுவரியமானது அழிந்துவிடும். நயத்தினால் விருத்தியடைந்த ஐசுவரியமானது புத்ரபௌத்ரர்முதலானஸந்ததிக்கெல்லாம் செல்லும்" என்றாள். அப்போது திருதராஷ்டிரமஹாராஜன் தர்மந்தெரிந்தவளான காந்தாரியைப்பார்த்து, "குலத்துக்கு நாசம்வந்தாலும் வரட்டும்; என்னால்தடுக்கமுடியாது. இவர்கள் எப்படிநினைக்கிறார்களோ அப்படியேநடக்கட்டும. பாண்டவர்கள் திரும்பிவரட்டும். என்பிள்ளைகள் பாண்டவர்களுடன் திரும்பவும் சூதாடட்டும்" என்றுசொன்னான்.

---

## தொண்ணூற்றெட்டாவது அத்தியாயம்.

## அநுத்யூதபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் நடுவழியிலிருந்து திரும்பிவந்து திரும்பவும் சூதாடினது.)

பிறகு புத்திமானான திருதராஷ்டிரமஹாராஜாவின் ஆஜ்ஞையினால் பிராதிகாமியானவன் வெகுதூரமசென்றிருந்த குந்திபுத்ரரான யுதிஷ்டிரரைப் பார்த்து, "தர்மராஜாவே! ஸபையில் காய்களைவைத்துச் சொக்கட்டான்வஸ்திரம விரிக்கப்பட்டிருக்கிறது. பாண்டவரே! உமதுபிதாவாகிய திருதராஷ்டிரமஹாராஜா உம்மை வந்து ஆடச்சொல்லுகிறார்" என்றுசொன்னான். யுதிஷ்டிரர், "பிராணிகள் நன்மையையும் தீமையையும் விதியின்கட்டளைப்படி அடைகின்றன. அவ்விரண்டும் விட்டுப்போவதில்லை. மறுபடியும் ஆடவேண்டுமோ? சொக்

கட்டான் ஆடுவதற்காக அழைப்பது கெடுதலுக்குக்காரணமென்றுதெரிந்திருந்தாலும் கிழவருடையகட்டளையினால் அதை நான்விடமுடியவில்லை. பொன்மயமானமிருகம் இருப்பதில்லை. ஆகிலும், ராமர் பொன்மானின்மேலாசைப்பட்டார். கஷ்டம்நெருங்கின காலங்களில் புத்திகளும் மிகவும் மாறிப்போகின்றன" என்றுசொல்லிக்கொண்டே தம்ஸஹோதரர்களுடன் திரும்பினர். சகுனியின்மோசத்தையறிந்திருந்தும் அவர் மறுபடியும் சூதாடப்போனார். மஹாரதர்களும் பரதச்ரேஷ்டர்களுமான அந்தப்பாண்டவர்கள் மறுபடியும்ஸபைக்குட்பிரவேசித்து வேண்டினவர்களின் உள்ளங்களைத் துயரப்படுத்தினர். பாண்டவர்கள் விதியினால்பீடிக்கப்பட்டு எல்லாஜனங்களும் அழிவதற்காக மறுமுறையும் சூதாடுவதில் தம்தம்தகுதிப்படிஉட்கார்ந்தனர். அப்போது சகுனி, "ஓ! பரதச்ரேஷ்டனையுதிஷ்டிரா! கிழவர் தனத்தைஉங்களுக்குக் கொடுத்துவிட்டது புகழத்தக்கது தான். ஆனால், பெருவிலைபெற்ற பந்தயமொன்றைமட்டும் கேள். நாங்கள் உங்களால் சூதாடிஜயிக்கப்பட்டாலும் புள்ளிமான்தோலையுடுத்துப் பன்னிரண்டுவருஷம் மஹாவனத்திலிருப்போம்; பதின்மூன்றும்வருஷம் உறவினரால்அறியபபடாமல் இருப்போம்; அறியப்பட்டால் மறுபடியும் பன்னிரண்டுவருஷகாலம் வனத்தில்வஸிப்போம். நீங்கள் எங்களால்ஜயிக்கபபட்டாலும் கிருஷ்ணையுடன்கூடத் தோலாடையுடுத்துப் பன்னிரண்டுவருஷம வனத்தில்வஸியுங்கள்; பதின்மூன்றுவதுவருஷம் உறவினாலறியப்படாமல்வஸியுங்கள்; அறியப்பட்டால் திரும்பவும் பன்னிரண்டுவருஷம் வனத்திலிருங்கள்; பதின்மூன்றுவதுவருஷம் சரியாகநிறைவேறினால் நீங்களானாலும் நாங்களானாலும் மறுபடியும் வழக்கம்போலத் தங்கள்தங்கள் ராஜ்யத்தைப் பெறலாம். பாரதா! யுதிஷ்டிரா! இந்தநிச்சயம்செய்துகொண்டு எம்முடன் மறுதடவையும் காய்களையுருட்டிச் சூதாடவா" என்றுசொன்னான். உடனே ஸபையிலுள்ளவர்களனைவரும் மனத்தில்வருத்தமுற்று ஸபைநடுவில் கைகளை விரைவாகத்தூக்கி, "ஆ! ஆ! சீ! இந்தப்பெரும்பயத்தைச் சுற்றத்தவர் தர்மராஜாவுக்குத் தெரிவிக்கவில்லையே! இந்தப் பரதச்ரேஷ்டன் தன் புத்தியினால்அறிவனோ அறியானோ" என்றுகூறினர். ஜனங்களின்மிகுதியானசொற்களைக்கேட்டும் தர்மராஜர், வெட்கத்தினாலும் தர்மத்திற்காகவும் மறுமுறையும் சூதாடப்போனார். மஹாபுத்திசாலியானதர்மராஜர் தெரிந்திருந்தும் கௌரவர்களுக்கு நாசம்கிட்டியிருந்தாலுமிருக்கலாமென்று நினைத்துத் திரும்பவும் சூதாடினர். அவர், "சகுனியே! தன்தர்மத்தைக்

காப்பாற்றுகிற என்போன்ற அரசன் அழைக்கப்பட்டபிறகு திரும்பிப் போவதெப்படி? ஆதலால், உன்னுடன் சூதாடுகிறேன்" என்று சொன்னார்: அதற்குச்சகுனி, "பாண்டவர்களே! ரிஷபங்களும் குதிரைகளும் பசுக்களும் செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும் யானைகளும் பொக்கிஷமும் பொன்னும் தாஸிகளும் தாஸர்களும் அளவற்றனவாக நிரம்பியிருக்கின்றன. அவற்றையெல்லாம்விட்டுக் காட்டில்வஸிப்பதுஒன்றே நமக்குப்பந்தயம். நீங்களாயினும் நாங்களாயினும் ஜயிக்கப்பட்டால வனத்தையடைந்து வஸிக்கவேண்டும். பதின்மூன்றுவதுவருஷம உறவினரால் அறியப்படாமலிருக்கவேண்டும். புருஷச்ரேஷ்டர்களே! தர்மராஜாவே! இந்தஒரேபந்தயத்தை நிச்சயஞ்செய்துகொண்டு ஆடுவோம்" என்றுசொன்னான். ஜனமேஜயராஜாவே! தர்மராஜாவான யுதிஷ்டிரர், விதியின்பலத்தினால் இவ்வாறு தூண்டப்பட்டு, பீஷ்மர், துரோணர், புத்திமானான விதுரர், யுயுத்ஸு, கிருபர், ஸஞ்சயன், காந்தாரி, குந்தி, பீமார்ஜுனர்கள், நகுலஸஹதேவர்கள், வீரனான விகர்ணன், திரௌபதி, அசுவத்தாமா, ஸோமதத்தன், புத்திசாலியானபாஹ்லீகன் ஆகிய இவர்களால் அடிக்கடி தடுக்கப்பட்டும் நிறுத்தவில்லை. இவ்வாறு மேற்சொன்னவர்கள் நன்மையைக்கருதித்தடுத்தும் தேவகாரியமாகிய பூபாரம்தொலைவது நிறைவேறுவதற்காகச சிறிதுநேரம்[1] கலியையடைந்தார். ராஜாவே! கலியினால் பிரவேசிக்கப்பட்டவராய் 'அப்படியேயாகட்டும்' என்று சகுனிக்குமறுமொழிகூறி வனவாசத்தையொப்புக்கொண்டு ஆடினார். தர்மராஜர் அந்தப்பந்தயத்தை யொப்புக்கொண்டார். ஸுபலபுத்திரனான சகுனி காய்களையெடுத்தான்; 'ஜயித்தாயிற்று' என்றே யுதிஷ்டிரருக்குச் சொன்னான்.

---

தொண்ணூற்றேன்பதாவது அத்தியாயம்.

## அனுத்யூதபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டவர்கள் மறுமுறையும் சூதில்தோற்று வனத்திற்குப் புறப்படும்போது கௌரவர்களை வதஞ்செய்வதாகப் பிரதிஜ்ஞைசெய்தது.)

தோல்வியடைந்த பாண்டவர்கள் உடனே வனவாஸதீக்ஷைசெய்துகொண்டு வரிசைப்படி தோல்உத்தரீயங்களையெடுத்துக்கொண்டனர். பகைவர்களை யடக்குகிறவர்களான பாண்டவர்கள் ராஜ்யம்

---

1 பாபம்.

அபகரிக்கப்பட்டுத் தோல்களைப் போர்த்துக்கொண்டு வனவாஸத்திற்காகப் புறப்பட்டதைக்கண்டு துச்சாஸனன் பேசலானான் :— "மஹாத்மாவாகிய துரியோதனமஹாராஜாவின் ஆஜ்ஞாசக்கரம் சுழலத் தொடங்கிற்று. பாண்டவர்கள் தோற்றுப் பெரிய ஆபத்தையடைந்தனர். [1]இப்போதுதான் தேவர்கள் [2]இடமில்லாத ஸமவழிகளில் செல்லுகின்றனர். ஏனெனில், குணங்களில்சிறந்தவர்களும் வயதில் பெரியோருமாகியநாம் அயலாரைவிடச் சிறப்புற்றிருக்கிறோம். பாண்டவர்கள் நீடூழிகாலம் முடிவில்லாத நரகத்தில் தள்ளப்பட்டனர். அநேகவருஷகாலம் ஸுகமுமகெட்டு ராஜ்யத்தையுமிழந்துபோயினர். எவர்கள் தனத்தினால்மதங்கொண்டு திருதராஷ்டிரபுத்திரர்களை விட்டனரோ அந்தப்பாண்டவர்கள் தோற்றுப் பொருளிழந்து காட்டுக்குச்செலலப்போகின்றனர். இவர்களுடைய விசித்திரமானகவசங்களையும் பிரகாசிக்கின்றஉயர்ந்தவஸ்திரங்களையும் மனிதர்கள் களையக்கடவர். சகுனியினுடையபந்தயத்தை ஒப்புக்கொண்டபடி எல்லோரும் புள்ளிமான்தோல்களை உடுத்துவிக்கப்படட்டும். உலகங்களில் தங்களைபபோன்ற மனிதர்களில்லையென்று மனத்தில் எபபோதும நினைத்துக்கொண்டிருந்த இந்தபபாண்டவர்கள், இபபோது விபரீதத்தையடைந்து எள்ளுப்பதர்கள்போலப் பயன்படாதவர்களாகித் தங்களைச் சரியாகத்தெரிநதுகொள்வர். இப்படிபபட்ட அகங்காரமுள்ள மிக்கபலசாலிகளான பாண்டவர்கள இநதபபுள்ளிமான்தோலாடையுடுத்தது யஜ்ஞதீக்ஷைசெய்துகொள்ளாதவன் தோலுடுப்பதுபோலிருக்கிறது; பாருங்கள். சிறந்தஅறிவுள்ளவனும் ஸோமகயஶஸ்தவனுமாகிய துருபதன், தன்பெண்ணைபாஞ்சாலியைப பாண்டவர்களுக்குக்கொடுத்ததனால் இவ்வுலகததில ஒருபாக்யமும் பெறாதவனானன். ஆண்மையற்றபாண்டவர்கள் திரௌபதிக்குக்கணவர்கள். திரௌபதியே! அற்பமான உடைகளையுடுத்து மேலேதோல்போர்த்துச் செல்வமில்லாமலும் ராஜ்யமில்லாமலும காட்டிலிருக்கும் கணவர்களைக்கண்டு நீ என்னஸந்தோஷததையடையப்போகிறாய்? எங்களுள் யாரை நீவிரும்புகிறாயோ அநதமற்றொருகணவனை வரித்துக்கொள். பொறுமையும் இநதிரியநிக்ரஹமுமுள்ளவர்களும் சிறந்த ஐசுவரியமுள்ளவர்களுமாகிய இந்தக்கௌரவர்களனைவரும் கூடியிரு

[1] தங்களுக்கு ஏகராஜ்யம் வநததுதான் ஸரியான தெய்விகம் என்பது கருத்து.

[2] அங்கேவநதிருந்த ஜனங்களின்நெருக்கத்தினால் இடமில்லாதவழி என்பது பழைய உரை.

